ஜூபிடர்-
லாவண்யா



ஏப்ரல்
17உ
முதல்
சென்னை
ஸ்ரீகிருஷ்ணா
சித்ரா
நூர்ஜஹான்
(சைதாப்பேட்டை)

மற்றும்
தென்னாடெங்கும் ஆரம்பம்

டைரக்ஷன்:
K.ராம்நாத்
ஸ்டூடியோ:
நெப்ட்யூன்

# மனிதன்

மேடையிலே உலாவி மனித உள்ளங்களுக்கு
இன்பமூட்டிய உணர்ச்சி ஓவியம்.....





பருவங்களுடனும் பகல் - இரவின் குறிப்பிட்ட நாழிகைகளுடனும் இசைந்து வருவது இந்திய ராகங்களின் தனிச் சிறப்பு. ஒவ்வொரு ராகமும் அந்தந்த வேளையின் ரஸம் அல்லது பாவத்தை வெளியிடும் சாதனமாகும்.

தினசரி இரவிலும் பகலிலும் அந்தந்த நாழிகைக்கு ஏற்ப ராகங்கள் உருவகப்படுத்தப்படுகின்றன. அகாலத்தில் பாடும் ராகங்களுக்கு ஜீவன் போய்விடுமாம்.

# தேனீர்

இரவு பகல் எந்த வேளையிலும், எந்த நிலையிலும் தேனீர் உற்சாகம் அளிக்கிறது.

# மால்கோஷ்

மேலே காணுவது ராத்திரி வேளையில் பாடுவதும், கம்பீர புருஷனின் தோற்றமுடைய தென்று பாவிக்கப் படுவதுமான 'மால்கோஷ்' ராகத்தின் உருவகப் படம். இந்த பிரபல மனிதனின் சுபாவகுணமான வீரம் ஸங்கீதப் பிரேமையினால் சாந்தமடைந்திருக்கிறது. இந்த ராகத்தின் முக்கிய ரகசியம் மகிழ்ச்சியில் காதலை எடுத்துக்காட்டுவதேயாகும்.

# பொருள் அடக்கம்

விஜய மலர் 12 | சித்திரை இதழ் 9



குறிப்பு:

'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

# இண்டோ கமர்ஷியல் பாங்க் லிமிடெட்

(ஸ்தாபிதம் 1932)

சேர்மென்

ஸர். A. ராமஸ்வாமி முதலியார் K. C. S. I. D. C. L. (OXON)

**ஸேவிங்ஸ் பாங்க்:** ரூ. 10க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் கணக்குகள் ஏற்கப்படும். ரூ, 15,000 வரையில் நூற்றுக்கு வருஷத்திற்கு 2½ ரூ. வீதம் வட்டி கொடுக்கப்படும். வாரத்திற்கு செக்மூலம் ரூ. 250 வரை வாங்கலாம்.

**மாதாந்திர சேமிப்பு:** ரூ. 5 அல்லது அதற்கு மேற்பட்ட துகைக்கு 46 மாதங்களுக்கும் 86 மாதங்களுக்கும் கணக்குகள் ஏற்கப்படும். வட்டி நூற்றுக்கு ரூ, 4 முதல் 4¼ வரை அந்தந்த காலத்திற்குத் தகுந்தாற்போல் சேர்க்கப்படும்.

**கியாஷ் சர்டிபிகேட்டுகள்:** 1) ரூ. 50 பெரும்படியான சர்டிபிகேட்டுகள் 3 வருஷ கெடுவுக்கு ரூ. 44-8-0 வீதமும், 5 வருஷ கெடுவுக்கு ரூ. 41-4-0 வீதமும் வழங்கப்படும்.

2) சர்டிபிகேட்டுகள் ரூ. 50-க்கும் அதற்கு மேற்பட்ட ரூ, 50/- பெருக்கங்கொண்ட துகைகளுக்கும் வழங்கப்பெறும்.

3) இந்த சர்டிபிகேட்டுகள் கெடுவான தேதியில் எங்களிடமோ அல்லது எங்கள் பிராஞ்சு ஆபீஸ்களிலோ தொகையை எச்செலவுமின்றி பெறலாம்.

K. S. வைத்யநாதன்
அஸிஸ்டெண்டு செக்ரடரி



# மாடிஸன் வாழ்க்கை

**சி. வி. ராமகிருஷ்ணன்**

இங்கு வந்து ஒருவாரமாயிற்று. குளிர் கொஞ்சம் கொஞ்சமாக ஜாஸ்தியாகிக்கொண்டே வந்தது. இங்கு ஒவ்வொரு வீட்டிலும் ஒரு உஷ்ணமானி வைத்திருக்கிறார்கள். வெளியே போவதற்கு முன் நம் நாட்டில் வேளை பார்த்துக்கொண்டு போவது போல, இவர்கள் உஷ்ண நிலையைப் பார்த்துக்கொண்டு கிளம்புகிறார்கள்! ஏனென்றால் வீட்டிலிருக்கும்பொழுது குளிர் தெரியாது, வெளியே போவதென்றால் குளிருக்கேற்ற உடைவேண்டுமல்லவா? நான் வரும்பொழுது உஷ்ணநிலை 40°-ல் இருந்தது, ஒருவாரத்திற்குள் சரசரவென்று 5°-க்கு இறங்கிவிட்டது! (பனிக்கட்டியின் உஷ்ணநிலை 32° என்றால் 5° எவ்வளவு குளிராக இருக்கும் என்று நீங்களே ஊகித்துக்கொள்ளலாம்!)

ஒருநாள் ஆராய்ச்சிக்கூடத்தில் வேலைசெய்துகொண்டிருந்தேன். திடீரென்று எல்லாரும் **"Snowing"**! (பனிபெய்கிறது) என்று கத்தினார்கள். வருஷா வருஷம் பனியைப்பார்த்துச் சலித்திருக்கும் இவர்களுக்குக்கூட ஒவ்வொரு வருஷமும் பனிக்காலம் ஆரம்பிப்பதில் இவ்வளவு உத்சாகம்! நான் செய்துகொண்டிருந்த வேலை முக்கியமானது என்பதையும் மறந்துவிட்டுப் பரிசோதனையை நட்டநடுவில் அப்படியே விட்டு விட்டு, கதவருகில் போய் நின்றேன். பனிக்கட்டி மழைமாதிரி பெய்துகொண்டிருந்தது. குளிர்காலம் வந்துவிட்டது என்று எல்லாரும் கத்திக்கொண்டிருந்தார்கள். அமெரிக்கர்கள் இயற்கையை வசப்படுத்திவிட்டார்கள் என்றால் பருவங்கள் கூடவா இங்குச் சொல்லிவைத்தாற்போல் வர வேண்டும்! நம் ஊரில் சரியாகப் பருவங்கள் தோன்றி பலவருஷங்களாகிவிட்டன என்று நினைக்கிறேன். இந்திரன், வருணன், அக்கினி முதலிய தேவர்களையும் அமெரிக்கர்கள் பணம் கொடுத்து வாங்கிவிட்டார்களோ, என்னவோ! அலலது இலங்கை வேந்தனைப் போல் அவர்களை அடிமையாக்கி விட்டார்களோ, தெரியவில்லை,

ஆறுமணிக்கு வீட்டிற்குக் கிளம்பினேன். நடைபாதையில் பல அங்குலம் பனி விழுந்திருந்தது, ஆனால் ரோடில் ஒன்றும் காணவில்லை. இங்கு என்ன, பனிகூடவா காடென்றும் மேடென்றும் வித்தியாசம் பார்த்து விழுகிறது என்று வியந்தேன், பின்னால் தான் இதற்குத் தெரிந்தது காரணம், இங்கு டிராக்டர்களைப்போன்ற லாரிகள் ¼ மணிக்கு

ஒருதரம் ரோட்டிலுள்ள பனியை அகற்றி விடுகின்றன,. அவற்றின் முன்பாகத்தில் பிளேட்போல ஒரு வெட்டும் கருவி பனியைச் சுரண்டி உள்ளே ஒரு யந்திரத்திற்குள் தள்ளி விடுகிறது. அது நிறைந்தவுடன் ஊருக்கு வெளியே கொட்டிவிடுகிருர்கள். பஸ்போக்கு வரத்து ஏராளமாக இருப்பதால் ரஸ்தாவில் 'ஸ்நோ' இல்லாமல் பார்த்துக் கொள்வது அரசாங்கத்தின் பொறுப்பாக இருக்கிறது, இல்லாவிட்டால் கார் விபத்துகளுக்கு முடிவே யிராது. நடக்கும் பாதையிலுள்ள பனியை யும் அப்போதைக்கப்போது நீக்குகிருர்கள். இதற்குச் சிறிய டிராக்டர்கள் உபயோகப் படுகின்றன. கார்களின் சக்கரங்களுக்கு, 'செயின்' போட்ட 'டயர்' பூட்டி விடுகிருர் கள். அதனுல் சக்கரங்கள் பனியில் வழுக் காமல் இருக்கின்றன.

எனக்கு இந்தப் பனியில் நடந்து பழக்க மில்லாததால் தடுமாறி விழுந்து கொண்டே இருந்தேன். அங்கு ஒருவர் சொல்லிக் கொடுத்தபடி கால்களை அகற்றி நிதானமாக அடிகளை வைக்க ஆரம்பித்தேன். குருத்வ கேந்திரம், விழுநிலை விழாநிலை என்றெல்லாம் ஸயன்ஸ் வாத்தியார் சொல்லிக் கொடுத்ததை ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டியிருந்தது! வீடு போய்ச்சேர ½ மணி ஆகிவிட்டது. ஈசு வரா! நான்கைந்து மாதங்களாவது இந்தப் பனியைச் சமாளித்தாக வேண்டுமே என்று கவலைப்பட்டுக்கொண்டே வீட்டிற்குள் நுழைந்தேன்.

வீட்டு வாசலில் நுழையும் சமயம் சடா ரென்று ஏதோ என் தலையில் விழுந்து தெறிக்க ஆரம்பித்தது. திரும்பிப் பார்த் தால் இஸபெல் பனிக்கட்டிகளை மாடியி லிருந்து என் தலைமேல் விட்டெறிந்து கொண்டிருந்தாள். அவளுக்குப் பனிக்கா லம் ஆரம்பித்துவிட்டதென்று ஒரே குஷி. அவளுக்கு மாத்திரமென்ன, இங்கு எல்லா ருமே பனிக்காலத்தை மிக ஆவலாக எதிர் பார்க்கிருர்கள். பனியில் சறுக்குவது பெரிய வர்களுக்கும் சிறியவர்களுக்கும் ஒரே பெரிய தமாஷாக இருக்கிறது. **'Winter sports'** என்று இவர்களுடைய குளிர்கால விளையாட் டுகள்தான் மிகவும் பிரசித்தம். குளிர் காலத்தில் இவர்கள் மிகவும் சுறுசுறுப்பாக இருப்பதால் இவர்களைக் குளிர் தாக்குவ தில்லை. ஏனென்ருல் சுறுசுறுப்பாக நடமா டும்பொழுதும் வேலை செய்யும்பொழுதும் சரீரத்தில் போதிய உஷ்ணம் உண்டாகிறது. குளிராக இருக்கிறதே என்று போர்த்திக் கொண்டு படுத்துக் கொண்டிருந்தால் ஆள் விறைத்துப்போக வேண்டியதுதான்! நானும் இஸபெலுக்குச் சரியாகப் பனியில் விளையாட ஆரம்பித்தேன்.

இதன் பலன் இரவு நல்ல ஜ்வரம் வந்து விட்டது. காலையில் எழுந்த பின்னும் உடல் அனலாகக் கொதித்துக் கொண்டிருந்தது.

"டாக்டரைக் கூப்பிட முடியுமா?" என்று ஸ்ரீமதி பெய்னர்ட்டைக் கேட்டேன். "இரண்டு நாள் பார்த்துக் கொள்ளலாம்" என்று வெகு நிதானமாக அவர் பதிலளித்து விட்டார். இங்கு டாக்டர் பில் மிகவும் அதிக மாகையால் அநியாயமாகப் பணம் செலவா குமே என்று அவர் தயங்கிஞர். எனக்கே ரசாயன ஆராய்ச்சி அதிகமாக ஆக டாக்டர் களும் மருந்துகளும் இன்றியமையாதனவாகி விட்டன. ஒரு ஜ்வரம் அடித்தால்கூட இது எதில் கொண்டுவிடுமோ என்று அஸாத்திய பயம். நல்லவேளை, நான் ஹெல்த் இன்ஷ்யூ ரன்ஸ் செய்துகொண்டிருந்தேன். (24-டாலர் கொடுத்து 'ஹெல்த்தை இன்ஷ்யூர் செய்து கொண்டால் என்ன வியாதி வந்தாலும் சிகிச்சைச் செலவை இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி யார் ஏற்றுக்கொள்ளவேண்டும்!) "செல வைப்பற்றிக் கவலைப்படவேண்டாம்; டாக்ட ரைக் கூப்பிடுங்கள்" என்று மீண்டும் சொன் னேன்.

அந்த அம்மாள் அவளுக்குத் தெரிந்த லேடி டாக்டர் ஒருத்தியை அழைத்துக்கொண்டு வந்தாள். இங்கு எல்லா வியாதிகளையும் லேடி டாக்டர்களும் கவனிக்கிருர்கள். ஆண் களுக்கும் அவர்கள் கிசிச்சை செய்கிருர்கள். ஆண் டாக்டர் பெண் டாக்டர் என்ற வித்தி யாச நினைப்பே இல்லை. டாக்டர் மூக்கு, பல், காது எல்லாவற்றையும் சோதனைசெய்ய ஆரம்பித்தார். 'ஏதடா இது, காலில் வீக் கம் என்ருல் தலையில் தைலம் தேய்த்துக் கொள்ளச் சொல்லும் மலையாள வைத்தியம் தேவலை போலிருக்கிறதே' என்று நினைத்துக் கொண்டேன், கடைசியில் வாயைத் திறக் கச் சொன்ஞள். "ஏன் டான்ஸிலை வெட் டிக்கொள்ளவில்லை?" என்று கேட்டாள். இங் கெல்லாம் தொண்டை சதை காரணமாகப் பல வியாதிகள் வருகின்றன என்று சதை யையே எடுத்துவிடுகிருர்கள். பிறகு **'step-throat'** என்று **diagnose** செய்துவிட்டு ஒரு பென்ஸிலின் இஞ்செக்ஷன் கொடுத்தாள். சில 'அரியோமைஸின்' மாத்திரைகள். அப் படியும் ஜ்வரம் நிற்காவிட்டால் சாயந்திரத் திற்குள் ஒரு ஸ்ட்ரெப்டோமைஸின் இஞ்

செக்ஷன் கொடுத்து விடுகிறார்கள். எவ்வளவு கடும் ஜ்வரமாயிருந்தாலும் உடனே ஜ்வரம் இறங்கிவிடுகிறது. அமெரிக்காவில் இந்த மாதிரி அடிக்கடி சிகிச்சை செய்து கொண்டதன் பலன் இப்பொழுது ஒரு தலைவலி வந்தால்கூட இந்த மருந்துகளெல்லாம் இல்லாமல் நிற்கமாட்டேனென்கிறது. Antilistics' என்று வழங்கப்படும் இந்த மருந்துகளை அதிகமாக உபயோகிப்பதன் விபரீதங்களைப் பற்றி இப்பொழுதுதான் சில அமெரிக்க டாக்டர்கள் உணர்ந்து எச்சரிக்க ஆரம்பித்திருக்கிறார்கள்! இந்த மருந்துகள் கொஞ்சம் கொஞ்சமாக இப்பொழுது இங்யாவையும் ஆக்ரமித்துக் கொண்டுவிட்டன. எப்பொழுதும் அவர்கள் விடுவதையே நாம் பிடித்துக்கொள்ளுவது வழக்கமாக இருக்கிறது.

ஜ்வரம் நின்றதே ஒழிய மார்பு வலிக்க ஆரம்பித்தது. சாயங்காலம் ஒவ்வொரு நாளும் ஜ்வரம் வேறு வர ஆரம்பித்தது, திரும்பவும் டாக்டருக்குப் போன் பண்ணினேன், உடனே எக்ஸ்ரே எடுத்தாள். இங்கு X-ray இனமாக எடுத்துக் கொள்ளலாம். இங்கு டி. பி, வராமல் தடுக்க எல்லா ஏற்பாடும் செய்திருக்கிறார்கள். மக்களின் நன்கொடையைக்கொண்டு பிரம்மாண்டமான ஆஸ்பத்திரிகள் க்ஷயரோகிகளுக் கென்று தனியாகக் கட்டியிருக்கிறார்கள். இம் மாதிரி பொதுநலக் காரியங்களுக்கென நிதிவசூல் செய்தால் இங்கு ஏராளமான பணம் வந்து குவிகிறது. நம் நாட்டில் நடக்கும் கிறிஸ்தவ மிஷன்கள் எல்லாம் அநேகமாக அமெரிக்க நன்கொடையால் ஆரம்பிக்கப் பட்டவை. இப்பொழுது மிஷனரிகளுக்குப் பதிலாக பொதுவேலைக்குப் பணம் கொடுக்கிறார்கள். ஒருநாள் ஒரு சினிமாவில் காயமடைந்த போர் வீரர்களைப்பற்றி ஒரு படம் (documentary film) காண்பித்துவிட்டு, அவர்களுடைய கஷ்ட நிவாரணத்துக்காகப் பணம் வசூல் செய்ய ஆரம்பித்தார்கள். டாலர் நோட்டுகளாக ஏராளமான பணம் வந்து குவிந்தது. ஏன், இந்தியாவிற்காக உணவு திரட்டும் பொழுது பள்ளிக்கூடமாணவர்களும் ஏழைக் குடியானவர்களும் தங்களால் முடிந்த அளவு கோதுமையைக் கொண்டு வந்து, இந்தியத் தூதர் காரியாலயத்தில் ஏராளமாக கொட்டிகுவித்த கதையை நேயர்கள் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள்.

டாக்டர் X-rayஐப் பார்த்துவிட்டு, 'லங்ஸில்' ஒரு கோளாறும் இல்லை என்று சொல்லிவிட்டாள். மறுநாளிலிருந்து இன்ஸ்டிட்யூட்போக ஆரம்பித்தேன். திடீரென்று மலத்துடன் இரத்தம் போக ஆரம்பித்தது. டாக்டர் என்னை ஒரு ஸ்பெஷலிஸ்டிடம் அனுப்பித்தாள். அவர் மூலச்சூடாக இருக்கலாம் என்று பரிசோதனை செய்து விட்டு X-ray எடுக்கவேண்டும் என்றார். வயிற்றையும் குடலையும் X-ray எடுத்து விட்டு, ஒரு கோளாறும் இல்லை. பால் உணவே சாப்பிடுவதால் மலச்சிக்கல் உண்டாகிறது. காய்கறிகள் தாராளமாகச் சேர்த்துக்கொள்ளவேண்டும்' என்று தம் முடிவைச்சொல்லி விட்டு 100 டாலாக்கு (500 ரூ) பில் அனுப்பினார்! இதைச் சொல்ல இரத்தப் பரிசோதனை வேறு, நம் ஊர் பாட்டிக்கூட இதைச் சொல்லியிருப்பாள்! நாகரிகம் முதிர முதிர நம் பிரமைதான் அதிகமாகிறது. நல்லவேளை, ஹெல்த் இன்ஷ்யூரன்ஸ் எடுத்துக்கொண்டிருந்ததால் கம்பெனியார் டாக்டர் பில்லைக் கொடுக்கவேண்டியிருந்தது. இல்லாவிட்டால் ரத்தம் கண்ணீரோடு வேறு வெளியே வந்திருக்கும்! என் மதிரி நாலு கேஸ் இருந்தால் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியை மூடவேண்டியதுதான்!

குளிர்காலம் ஆரம்பித்தவுடன் அக்டோபர் மாதம் 'Hals wean Day' என்று ஒருதினம் கொண்டாடுகிறார்கள். அதாவது பிசாசுகள் அவிழ்த்துவிடப்பட்டுக் கொட்டமடிக்கும்நாளாம்! ஷேக்ஸ்பியரின் காவியங்களில் இந்த மாதிரி கொண்டாட்டங்கள் அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. எங்கள் இன்ஸ்டிட்யூட்டில் வேலை செய்து கொண்டிருந்த ஒருவர் ஒரு சனிக்கிழமை இரவு எங்களெல்லாரையும் Halswean partyக்கு அழைத்தார். இங்குப் பார்ட்டிகளில் பலவகை உண்டு. விடுமுறை நாட்களில் சாயங்காலம் 'Punch' அல்லது Open - House party என்று வைக்கிறார்கள். இது சுமார் 4 மணியிலிருந்து 6 மணிவரை இருக்கும். அந்த நேரத்திற்குள் எப்பொழுது வேண்டுமானாலும் போய்விட்டு, எப்பொழுது வேண்டுமானாலும் திரும்பலாம். நம் ஊர் நவராத்திரி கொலுவுக்குப் பெண்கள் போய்விட்டு வருவதுபோல் என்று சொல்லலாம். 'டின்னர் பார்ட்டி' என்றால் மாலையிலேயே சென்றுவிட்டு இரவு சாப்பாட்டுக்குப் பின் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு, வருவது சம்பிரதாயம். அமெரிக்கர்கள் வெளிநாட்டாரை டின்னருக்கு அழைப்பதில் மிகவும் விருப்பமுள்ளவர்கள். ஆனால் ஒன்று, உங்களை டின்னருக்கு அழைக்கும் பொழுதே சைவ உணவு தான் நீங்கள் உட்கொள்வீர்களென்றால் அதைத் தெரிவித்துவிட வேண்டும்! முட்டை, கோழி, மீன் இவைகூடச் சாப்பிடமாட்டேனென்று சொல்லிவிடவேண்டும். ஏனென்றால் அமெரிக்கர்கள் இவற்றை மாமிச உணவாகவே கருதுவதில்லை! அப்புறம் இன்னொரு விஷயம். நீங்கள் விருந்தாளியென்று நினைத்துக்கொண்டு 'ஜம்'மென்று உட்கார்ந்திருக்கக்கூடாது. அமெரிக்க மனைவிமார்களுக்குக் கணவன்மார்கள் வீட்டு வேலைகளில் கூடமாட ஒத்தாசை செய்து கொண்டே

யிருப்பார்கள். மரியாதைக்காகவாவது நீங்களும் இரண்டு பிளேட்டையாவது அலம்பி வைக்க வேண்டும்! டின்னருக்குச் சென்றால் நம் நாட்டைப் பற்றிய விஷயங்களைத் தெரிந்துகொள்ள மிகவும் ஆவலாக இருக்கிறார்கள். ஆகையால் சாப்பிட்ட பின் நம் நாட்டைப்பற்றி ஒரு மணி நேரம் குஷாலாக லெக்சர் பண்ணலாம்!

முதலில் சொன்னேனே, 'ஹேலோவின் பார்ட்டி' என்று, அது மூன்றாவது வகையைச் சேர்ந்தது. அதாவது இதை 'After Dinner Party' என்று சொல்லுவார்கள். (சாப்பாட்டுக்குப் பின் பார்ட்டி!) இரவு எட்டு மணியிலிருந்து நள்ளிரவு வரை இந்தமாதிரி பார்ட்டிகள் நடக்கும். சில சமயங்களில் டான்ஸூம் உண்டு. குடிக்க விரும்புகிறவர்கள் ஏராளமாகக் குடிக்கலாம். என் போன்ற பிரகிருதிகளுக்கு ஆப்பிள் ரஸம், கேக், சாகலேட் எல்லாம் கிடைக்கும். ஆனால் இதில் ஹேலோவீன் பார்ட்டி மிகவும் விசித்திரமானது. இதற்கு ஒவ்வொருவரும் வேடிக்கையாக வேஷம் போட்டுக் கொண்டு போக வேண்டும்.

என் வீட்டுக்காரத் தம்பதிகளும் நானும் பார்ட்டிக்குப் புறப்பட ஆரம்பித்தோம். இஸபெல்லை வீட்டில் விட்டுவிட்டுப்போக ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. ஏனென்றால் இங்கெல்லாம் குழந்தைகளைப் பார்ட்டிகளுக்கு அழைத்துச் செல்வதில்லை. அவற்றின் பிறந்த தினத்தன்று குழந்தைகளுக்கெனத் தனிபார்ட்டி வைப்பார்கள். அப்பொழுது குழந்தைகளை அழைத்துக்கொண்டு தாய்மார்கள் மாத்திரம் வருவார்கள். குடி, டான்ஸ், இவற்றுக்குப் பதிலாகப் பிஸ்கட் முதலிய தின்பண்டங்களும் விளையாட்டுகளும் உண்டு. இந்தப் பார்ட்டிகளை இரவு குழந்தைகள் கண் விழிக்கக்கூடாது என்பதற்காகச் சாயங்காலமே வைத்துக்கொள்வார்கள். நம் நாட்டில் பெண் குழந்தைகளுக்காவது நவராத்திரி போன்ற சமயங்களில் ஒரு குதூஹலம் இருக்கிறது. பழைய காலத்தில் 'பஸவன்' அமைத்து, கோலாட்டம் முதலிய களியாட்டங்களில் பெண் குழந்தைகள் ஈடுபடுவார்கள், ஆனால் என் வரைக்கும் பிள்ளைகளுக்கு ஒரு கொண்டாட்டமும் இல்லையென்று தோன்றுகிறது!

இங்குக் குழந்தைகளை விட்டுப் போகும் பொழுது அவர்களைப் பார்த்துக்கொள்ள ஒரு ஆள் அமர்த்த வேண்டியிருக்கிறது. இவர்களுக்கு Baby seaters என்று பெயர். பத்து, பன்னிரண்டு வயதுள்ள பெண்களுக்குப் போன் பண்ணினால் வந்து குழந்தையைப் பார்த்துக் கொள்வார்கள். குழந்தை தனக்குத் துணை இருக்கிறார்கள் என்று தெரிந்தால் விளையாடிக் கொண்டிருந்துவிட்டுத் தூங்கிவிடும். அதுவும் தவிர, இங்கு 'Heating system' இருப்பதால் ஒரு வேளை வீடு திடீரென்று நெருப்புப் பிடித்துக் கொள்ளலாம் ஆகையால் குழந்தைகளைத் தனியே விட்டுவிட்டுப் போவது ஆபத்து. குழந்தையைப் பார்த்துக் கொண்டால் மணிக்கு 35 சென்ட் (2 ரூபாய்) கிடைக்கும். ஆகையால் அக்கம் பக்கத்து வீட்டிலிருந்து பெண்கள் மிகவும் குஷியாக வந்து குழந்தையைப் பார்த்துக்கொள்வார்கள். அவர்களுக்கென்ன, விளையாடுவதற்கு ஒரு குழந்தை யாயிற்று. கையில் பணம் வேறு ரெடியாகக் கிடைக்கும். சில சமயம், குழந்தை பெரியவர்கள் திரும்பி வரும்வரை தூங்கிக் கொண்டே இருக்கும், அப்பொழுது இவர்களுக்குச் சும்மா உட்கார்ந்திருந்ததற்காகக் காசு கிடைக்கும்! இவர்கள் குழந்தையை மிகவும் பிரியமாகப் பார்த்துக்கொள்கிறார்கள். சாப்பாட்டிற்குப் பஞ்சமில்லாததால் குழந்தைக்குக் கொடுக்கும் பாலையும் பிஸ்கட்டையும்தான் சாப்பிடும் அவசியம் இல்லை! மேலும் இந்தப் பெண்கள் பெரும்பாலும் நல்ல குடும்பங்களிலிருந்து வருகிறவர்கள். எவ்வளவு பணக்கார வீட்டுப் பெண்ணாக இருந்தாலும் குழந்தையைப் பார்த்துக்கொண்டு பணம் சம்பாதிப்பதைக் கௌரவக் குறைவாக நினைப்பதில்லை. இதை ஒரு வேடிக்கையான பொழுதுபோக்கு என்றுதான் நினைக்கிறார்கள். இப்படிக் கிடைக்கும் காசில் தங்களுக்கு வேண்டிய ரிப்பன், சாக்லேட், பொம்மை இது மாதிரி சாமான்களை வாங்கிக் கொள்கிறார்கள்.

பக்கத்துத் தெருவிலுள்ள ஒரு பெண்ணுக்கு, "போன்" பண்ணினோம். அவள் வந்து இஸபெலைச் சார்ஜூ ஏற்றுக் கொண்டதும் நாங்கள் பார்ட்டிக்குத் தயார் செய்துகொள்ள ஆரம்பித்தோம். டாக்டர் பெய்னர்ட் நம் ஊர் புலிவேஷக்காரன் மாதிரி பெரிய வால் ஒன்று வைத்துக் கொண்டு முகத்தைக் குரங்கு மாதிரி 'மேக்அப்' செய்து கொண்டார். ஸ்ரீமதி பெய்னர்ட் நம் நாட்டு மலைக்குறத்தி மாதிரி வேஷம் போட்டுக் கொண்டார். நான் பல இந்தியர்களிடம் பலவித உடைகள் இரவல் வாங்கிக்கொண்டு வந்திருந்தேன். ஒருவர் அளித்த 'நேரு' பைஜாமாவை மாட்டிக்கொண்டு சட்டைக்குள்ளே வயிற்றிலும் முதுகிலும் செட்டியார் பொம்மை மாதிரி இருக்கும்படி தலையணைகளை வைத்துக்கட்டிக்கொண்டேன். மேலே ஒரு கறுப்புக் கோட்டு. முகத்தில் பொய் மீசையும் தாடியும், தலையிலே அரேபியர்களைப் போல் ஸில்க் கைக்குட்டை ஒன்றைக் கட்டிக் கொண்டேன். ஆள் தெரியாமலிருக்க, 'கூலிங் க்ளாஸ்' வேறு. நெற்றியில் காளிகோவில் பூசாரி மாதிரி குங்குமத்தை அப்பிக்கொண்டு ஒருவாறாக என் அலங்காரத்தைப் பூர்த்தி செய்துகொண்டு கண்ணாடியில் பார்த்தேன். ஒரு பயங்கரமான விநோத உருவம் ஒன்று காட்சியளித்தது! இதற்குள் பெய்னர்ட் "என்ன, தயாரா" என்று கேட்க மூன்றுபேரும் பார்ட்டி நடைபெறும் இடத்திற்குச் சென்றோம்.

பல எலும்புக்கூடுகள் எங்களை வரவேற்றன! (பலர் மனித எலும்புக்கூடு மாதிரி வேஷம் போட்டுக்கொண்டு வந்தார்கள்) இந்த வரவேற்பு

மௌனமாக இருந்தது. பிசாசுகள் பேசாத காரணத்தால் அல்ல, இந்தப் பார்ட்டியில் ஒருவரையொருவர் அடையாளம் கண்டு பிடிக்க வேண்டும். குரலிலிருந்து அடையாளம் தெரிந்துவிடப் போகிறதென்று யாரும் பேச மாட்டார்கள்! ஒருவர் மாடு மாதிரி வேஷம் போட்டுக்கொண்டு வந்திருந்தார். குரங்கு வேஷம் சர்வ சாதாரணமாக இருந்தது. எல்லோரும் கை கோத்துக்கொண்டு கொஞ்சநாழி கூத்தாடினோம்.

குடிப்பவர்கள் குடித்தபின் விளையாட்டுகள் ஆரம்பித்தன. இரண்டு கட்சிகளாகப் பிரிந்து ஒருவர் செய்கைகளிலிருந்து மற்றவர்கள் அது என்ன advt. Sloganஐக் குறிக்கிறதென்று சொல்ல வேண்டும். இன்னும் இம்மாதிரி விளையாட்டுகள் பல, பார்ட்டிகளில் விளையாட்டுகள் தான் மிகவும் முக்கியமாகக் கருதப்படுகின்றன. நம் ஊரில் சாப்பிட அழைத்தால் சாப்பாடு ஒன்றையே பிரதானமாகக் கருதுகிறார்கள். சிலர் சீட்டாட்டம் ஆரம்பித்துவிடுகிறார்கள். ஆனால் இதில் வந்திருப்பவர்கள் எல்லோரும் கலந்துகொள்ள முடிவதில்லை. முன் காலத்தில் கலியாண காலங்களில் பெண்கள் எல்லோரும் சேர்ந்து பலவிதக் கும்மிகள் அடித்துக் கொண்டிருந்தார்கள். எல்லோருக்கும் பொதுவான விளையாட்டுகளாக இருந்தால் பொழுது குதூகலமாகப் போகும், விளையாட்டுகளில் செல்பவர்களுக்குப் பரிசுகள் வேறு வைத்திருப்பார்கள். வேறு ஒன்றுமில்லை, ஒரு சாகலேட், அல்லது ஒரு சோப்புப்பெட்டி இருக்கும், அவ்வளவுதான்! ஆனால் இதை வாங்குவதில் ஒரு சந்தோஷம் இருக்கிறது. வேஷங்களில் என்னுடைய வேஷம் தான் நன்றாயிருக்கிறதென்று தீர்ப்புச் சொன்னார்கள். பரிசு என்ன என்று கேட்கிறீர்கள்? பலத்த கரகோஷம் கிடைத்தது!

விளையாட்டுகள் முடிந்தபின் சற்று நேரம் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம். பக்கத்தில் உட்கார்ந்திருந்தவர் உள்ளங்கையைச் சற்று ஊன்றிக் கவனித்தேன். வந்தது ஆபத்து! 'உங்களுக்குக் கைரேகை பார்க்கத் தெரியுமா?' என்று கேட்டார். பொதுவாக இந்தியர்களுக்கு ஜோசியம் நன்றாகத் தெரியும் என்று ஒரு அபிப்பிராயம் இருந்து வருகிறது. எனக்கு ஒன்றும் சரியாகத் தெரியாத போதிலும் ஏதோ விளையாட்டாகச் சொல்ல ஆரம்பித்தேன். 'தும்பட்டிக்காய் ஜோசியர்' மாதிரி சொன்னது என்னவோ, 'வாச்சான் போச்சான்' என்று சரியாக இருந்துவிட்டது. உடனே, டைரக்டர் க்ரீன் உள்பட எல்லோரும் கையை நீட்டிக்கொண்டு என்னிடம் வந்துவிட்டார்கள்! நம் நாட்டில் விவாகம் ஆகுமா என்ற கேள்வியோடு நிற்கிறார்கள். இங்கோ விவாக ரத்து ஆகுமா என்ற கேள்விக்கு வேறு பதில் சொல்ல வேண்டியிருக்கிறது! மிஸஸ் க்ரீனிடம், 'உங்கள் கணவர் மிகவும் கோபக்காரர், நீங்கள் மிகவும் பொறுமைசாலி' என்று சொன்னேன். அந்த அம்மாளுக்கு மிகவும் உச்சி குளிர்ந்துவிட்டது. உடனே டாக்டர்க்ரீன் தம்கையை நீட்டினார். 'உங்கள் மனைவி மிகவும் பொறுமைசாலி. ஆனால் மிகவும் பிடிவாத குணம் உண்டு. உங்கள் இருவருக்கும் அடிக்கடி சண்டை வரும். ஆனால் சரியாகப் போய்விடும்' என்றேன். தாம்பத்திய வாழ்வில் இது பொதுவாக சகஜந்தானே! உடனே அவர் நான் சொல்வதெல்லாம் சரியென்று என்னைப் புகழ ஆரம்பித்து விட்டார். பலருக்குப் பலவாறாக ஜோசியம் சொல்லி என் புகழை அதிகரித்துக்கொண்டேன்? கடைசியாக, எல்லாரும் ஒரு 'குரூப் போட்டோ' எடுத்துக்கொண்டு வீட்டிற்குக் கிளம்பினோம்.



# டில்லித் தபால்

கே. ஸ்ரீநிவாஸன்

டில்லியில் உள்ள மதராஸிகளுக்குத் தோன்றுவது வழக்கம்: "இந்த இழவு டில்லி ரேடியோமாத்திரம் இவ்வளவு சக்தி வாய்ந்ததாக இருப்பானேன், சென்னைமாத்திரம் சோனியாக அழவேண்டும்?" இதற்குக் காரணம் அநேகமாகக் கோடையில் எவ்வளவு தான் ரேடியோசெட் நல்லதாக இருந்தாலும் பகல்வேளையில் சென்னையில் உள்ள ஒலிபரப்பு இங்குக் கேட்காது. ஆகவே ரேடியோ நிர்வாகிகள், சென்னை கல்கத்தா, பம்பாய் மூன்றிற்கும் சக்தி வாய்ந்த ஒலிபரப்பிகள் **(Transmitters)** ஸ்தாபனம் செய்வதாக அறிவித்தபொழுது குறிப்பரக மதராஸிகள் உற்சாகம் எல்லைமீறி ஓடியது.

டில்லியைத் தவிர வேறு எங்குமே 500 கிலோவாட் ஒலிபரப்பி கிடையாது. தற்பொழுது அகில இந்திய ரேடியோ ஒலிபரப்பி மற்ற ஆசிய நாடுகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருப்பதுபோல் மற்ற எந்த ஆசிய நாடும் செய்யவில்லை. இதற்கென்று பிரத்தியேகமாக வெளிநாட்டு ஒலிபரப்பு டிபார்ட்மெண்டு **(External Service)** அகில இந்திய ரேடியோவில் உள்ளது. இதன் மூலம் மற்ற நாடுகளில் உள்ள இந்தியர்களுக்கு, செய்தி, சங்கீதம், பிரசாரம் முதலியன ஒலிபரப்பப்படுகிறது.

பிரசார இலாகாவின் கீழ் **(Information Department)** அகில இந்திய ரேடியோ வேலைசெய்கிறது. இந்த இலாகாவில் உள் இலாகா குழப்பமும் குட்டிச் சர்ச்சைகளும் மிஞ்சியிருப்பதால் சமுத்திரம்போன்ற இதில் நடக்கும் ஒரு வேலைக்குப் பலவித ஆபீஸர்கள் தங்கள் இஷ்டம்போல் வேலைசெய்வது வழக்கம். இதனால்தான் அரவணைப்பு **(co-ordination)** என்ற கலம் பூஜ்யம்.

புதுச் சக்தி வாய்ந்த ஒலிபரப்பிகள் விஷயமாக இதுமாதிரி பெரிய மானக்கேடான விஷயம் ஒன்று நடந்திருக்கிறது. மூன்று பெரிய ஒலிபரப்பிகளுக்கு ஆர்டர் கொடுத்து, சிறுகச் சிறுக அவைகள் வந்துகொண்டிருக்கின்றன, கூடிய சீக்கிரம் எல்லா ஒலிபரப்பிகளும் வந்து சேர்ந்துவிடும். ஆனால் (இது மிகப்பெரிய ஆனால்) இந்த ஒலிபரப்பிகள் வேலைசெய்ய அலைகள் இந்திய சர்க்காருக்குக் கிடைக்கவில்லை.

என்ன அலை கிடைக்கவில்லையா? இதென்ன கூத்து? என்று பிரமிக்காதீர்கள். ஒலிபரப்புதலுக்கு லாயக்கான அலைகள் சிலதான். இவைகளை அகில நாடுகளின் ஒலிபரப்புச் சங்கம் பகிர்ந்து கொடுக்கிறது. இதனால் தான் ஒரே மீட்டரில் மயிரிழைக்கு ஒன்றாகப் பல ஸ்டேஷன்கள் கூச்சல்போடும். இந்த அகில நாட்டுச் சங்கம் இந்தியாவுக்கு ஒலிபரப்பத் தகுந்த அலைகளைப் புது ஒலிபரப்பிகளுக்கு ஒதுக்கவில்லை. இதற்குக் காரணம் இந்தியா நடுநிலைமை நாடு, ஆதலால் அபூர்வமாக உள்ள அலை அளவுகளைக் கொடுத்தால் தங்களுக்குப் பிரயோஜனமில்லை என்று ஆங்கில - அமெரிக்கச் சார்பில் உள்ள நாடுகள் கருதுவதாக அறிகிறேன்.

ருஷ்யா கம்யூனிஸ்ட் நாடாயிற்றே அதற்கு மட்டும் எப்படி ஒலி அலைகள் கிடைக்கின்றன என்று கேட்கலாம். அதற்கு அகில நாட்டு அப்பன்கள் யாரும் தானதருமம் செய்யவில்லை. அது மெம்பரும் இல்லை. ஆகவே தடியெடுத்தவன் தண்டல்காரன் என்ற கொள்கையைக் கடைப்பிடித்து அது 1000 **K. W.**க்குக் குறையாத ஒலிபரப்பிகளைக் கொண்டு தனக்கு வேண்டிய மீட்டர்களில் ஒலிபரப்புகிறது. இதை யார் தடுக்க?

இந்தியாவைப் பொறுத்தவரை நமக்கு அந்தத் தடலடி சக்தி இல்லை. ஏனென்றால் நாம் கருவிகளை வெளிநாட்டிலிருந்து தருவிப்பதுடன் உபரி பாகங்கள் முதலியவற்றிற்கும் மற்ற நாடுகளிடம் எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. ஆகவே நாம் மற்ற நாடுகளைத் தாஜா செய்ய வேண்டியதுதான்.

ஊர் கூடி, செக்குத் தள்ளிவிடலாம், ஆனால் அதுவரை நாம் ரூபாயைக்கொட்டி வரவழைத்த கருவிகள் மியூஸியத்தில் இருக்க வேண்டியதுதான். இந்தப் பல லக்ஷங்களை நாம் உபயோகமாக மற்றத் திட்டங்களில் செலவு செய்திருக்கலாம். இந்தக் குழப்பத்திற்குக் காரணமானவர்களை ஒரு விசாரணைக் குட்படுத்தினால்தான் தான்தோன்றி நிர்வா

கம் ஒழிந்து பொறுப்புள்ள நிர்வாகம் அமுலுக்கு வரும்.

*　　*　　*

இந்த வருஷமும் ஹிந்துஸ்தானி கர்நாடக சங்கீத வித்வான்களுக்கு ஜனதிபதி விசேஷ விருதுகளை அளித்தார். சென்னை மாகாணத்தில் கர்னடக சங்கீதத்திற்காக ஸ்ரீ செம்மங்குடிக்கும் புரொபஸர் துவாரத்திற்கும் கௌரவம் அளிக்கப்பட்டது.

கர்னடக சங்கீதத்திற்குப் பிரதிநிதியாக யாரைப் பொறுக்கினலும் நாம் சந்தோஷப்படவேண்டியதுதான். ஆனலும் நம் பக்கத்தில் இது விஷயங்களில் சில மரியாதைகள் அனுஷ்டிக்கப்படுவதால் இந்த வருஷ வித்வானைப்பற்றி அறிந்த வட்டாரங்களில் ஒரு சர்ச்சை நடந்தது. அதாவது, சங்கீத உலகில் பல வருஷ அனுபவமும் பெயரும் உள்ள வித்வான்களுக்கு நம் சங்கீத கோஷ்டிகளில் அளிக்கும் வரிசைக் கிரமப் பிரகாரம் சர்க்காரும் மரியாதை காட்டவேண்டாமா! சென்ற வருஷம் அரியக்குடியைப் பொறுத்தவரை யாதொரு ஆக்ஷேபனையும் இல்லை. ஆனல் அவருக்கு அடுத்தபடியாக மகாராஜபுரத்துக்கு மரியாதைகிடைக்கவேண்டும் என்பது சங்கீதாபிமானிகள் கருத்து. மகாராஜபுரம் இருக்க அவர் சிஷ்யர் ஸ்ரீனிவாஸய்யர் எப்படி முன் மரியாதை பெற்றுக்கொள்ள முடியும்?

இது விஷயம் சர்க்கார் தீர்மானத்தை ஒட்டி ஸ்ரீனிவாஸய்யர் மரியாதையை ஏற்றுக்கொண்டதால் அவரை நாம் குறைகூற முடியாது. இந்த விஷயங்களில் நம் பக்கத்தில், மியூஸிக் அகடமியைக் கலந்து செய்திருந்தால் இந்தவிதமான சர்ச்சைக் கிடமிருந்திருக்காது. ஆனல் சங்கீதத்தையும் சர்க்கார் டிபார்ட்மெண்ட் விஷயமாகச் செய்தால் இந்த மாதிரி அனர்த்தம்தான் விளையும்.

செம்மங்குடி சென்னை வாசிகளுக்காகக் கர்னடக சங்கீத சபை ஆதரவில் ஒரு கச்சேரி செய்தார். 1935-36-ல் அவருக்கு இருக்குமே ஒருமெருகு, அதுமாதிரி இருந்தது அவர் கச்சேரி. கடைசியில் அவரைப்பாராட்டியதற்குப்பதிலும் அவர் மிகவும் அடக்கமாகவே கூறினர். "உங்கள் பாராட்டுதலுக்கு வந்தனம். எனக்கு அளிக்கப்பட்ட கௌரவம் கர்னடக சங்கீதத்துக்கு அளிக்கப்பட்டதாகும். இதை வருங்காலத்திலும் வைத்துக் காப்பாற்றவேண்டியுள்ள யோக்கியதையை எனக்கு அளிக்குமாறு ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்" என்றார்.

செம்மங்குடி, துவாரம், பல்லடம் மூவரையும் டில்லி ஷண்முகாநந்த சபையாரும் ஒரு தனி வரவேற்பு அளித்து, கௌரவித்தார்கள். டில்லியிலுள்ள மதராஸிகள் கர்னடக சங்கீதம் அனுபவிக்க எவ்வளவு விதமான சந்தர்ப்பங்கள் வந்தாலும் அதற்கு மிகவும் கடமைப்பட்டவர்கள்.

*　　*　　*

மனோதத்துவ நிபுணர்கள் என்று ஒரு புது வகை ஜாலக்காரர்கள் பலவித நோய்களுக்கு மனதேதான் காரணம் என்று சொல்லுவது வழக்கம். அவர்களைக் கேட்டால் சொல்லுவார்கள், நோயாளி தனக்கு ஒன்றும் இல்லை என்று திரும்பத் திரும்பச் சொன்னல் அதுவே முக்கால் குணம் அளிக்கும் என்று, ஸ்ரீ ர. அ. கித்வாய் இப்படிப் பட்ட நிபுணர் அல்ல என்றாலும் உணவு இலாகாவை மேற்கொண்டால் யாரும் எவ்விதத் தடலடிக்கும் தயார் ஆகிவிடுவார்கள் என்று தோன்றுகிறது,

இந்திய உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதில் அபார தன்னம்பிக்கையும் முன்யோசனையும் காட்டிய ஸ்ரீ கித்வாய் உள் நாட்டுக்குள் விளையும் தானியம்தான் கறுப்பு மார்க்கெட்டுக்குள் போகிறது என்று நிர்ணயித்து, கண்ட்ரோல் விலை அகன்றால் அந்தக் கள்ள மார்க்கெட்டும் ஒழிந்துவிடும் என்று நிர்ணயித்தவரை சரி. ஆனல் சென்ற சில வாரங்களாக விவசாய மந்திரி, ஸ்ரீ பி. ஆர் தேஷ்முக்குக்குச் சப்பைக் கட்டு கட்டி ஜனங்களுக்கு ஒரு புதிய தாதுபுஷ்டி டானிக் கொடுக்க இவர் முன் வந்திருப்பது செப்பிடு வித்தை என்பதில் சந்தேகமில்லை.

புள்ளி விவரங்கள் எல்லாம் எடுத்த பின்னர் உணவு இலாகா இந்தியாவின் பற்றாக்குறை 12 சத விகிதத்திற்குமேல் இல்லை என்ற முடிவுக்கு வந்தது. இதை நம்மால் ஈடுசெய்ய முடியாதா? "பூ" என்று ஊதி எறிந்து விடலாம். சரி, அரிசி சாப்பிடுவோர் கதையைப் புரட்டுடா என்றார்கள்,

நம் ஊர் அரிசி சாகுபடியையும் மற்ற அரிசி நாடுகள் சாகுபடியையும் கவனித்தார்கள். ஜப்பான் பூமியே இல்லாமல் அரிசி உண்டாக்குகிறது என்ற படம் இவர்கள் கண்முன் வந்தது. "சரி ஒரு கோஷ்டி ஜப்பானுக்குச் செல்லட்டும்" என்ற கட்டளையை அதிகாரிகள் தாங்களே பிறப்பித்துக் கொண்டார்கள்.

ஜப்பானுக்குச் சென்ற இந்தியபுலிகள்நெல் காய்க்கும் மரம் நெல்லை அபாரமாகக் காய்த்துக் குலுங்குகிறது என்ற உண்மையைக் கண்டார்கள்! ஒரு ஏக்கருக்கு இந்தியாவில் பத்துமணு நெல்தான் நம் ஊரில் விளைகிறது, ஜப்பானில் முப்பது மணு விளைகிறது, ஏன்? இந்தக் கேள்விக்குப்பதில் ஜப்பானிய சாகுபடி முறையே என்ற முடிவுக்கும் வந்தார்கள். அந்த முறையை நம் குடியானவர்கள் கற்றுக் கொண்டால் போதும். மூன்று மடங்கு வேண்டாம், கால் மடங்கு அதிகம் உற்பத்தி செய்தால்போதும் என்ற திருப்தியும் கூடவே வந்தது.

அந்த ஜப்பானிய முறை என்ன தெரியுமா! வயலில் எரு அடிக்க வேண்டும்; சாணியும் குப்பையும் சிரேஷ்டம். வயலை உழுது ஊற வைத்த விதையை நாற்றங்காலில் தெளி. களை எடுத்துவிடவேண்டும்! நாற்று ஆறிலிருந்து எட்டு அங்குலம் வளர்ந்ததும் பிடுங்கி நடவு நடு! வயலுக்கு வரப்புக்கட்டு, இத்யாதி.

இந்த "ஒஸ்தி முறையை" பற்றி அப்பப்பா என்ன பிரசாரம்! என் போன்றவர்கள் 'ஐயோ ஜப்பானே, எங்கள் அதிகாரிகளை அதபாதாளத்தில் அமுக்கி விட்டாயே. எங்கள் ஊரிலும் நெல்லை இந்தமாதிரி மரத்தில்தானே காய்க்க வைக்கிறார்கள்!" என்று கதறினால், "அட சட், அதிகப்பிரசங்கி. உங்கள் ஊரில் இப்படிப் புரட்டினால் ஏன் அரிசிக்குக் கப்பரையை நீட்டுகிறாய்?" என்று சீறுகிறார்கள்.

சில விஷயங்களில் நம் சர்க்கார் முழுப் பூசனிக்காயை சோற்றில் மறைக்கப் பார்க்கிறார்கள். அந்தச் சிலவற்றுள் அரிசி விஷயமும் உண்டு.

ஜப்பானில் 50 வித விதைகள் உண்டு, இந்தியாவிலோ 2,000 விதம். ஜப்பான் விதை அதிகம் விளையும், வைக்கோல் குறைவு, ஆனால் அதிவிருஷ்டி அனாவிருஷ்டியானால் பயிர் தொலைந்து விடும், நோய் வந்தால் பயிர் க்ளோஸ்.

இந்திய விதைகள் விஷயம் என்னவென்றால் விளைவு குறைவுதான். ஆனால் இயற்கை நிலையில் உள்ள கோளாறுகளுக்கும் நோய்களுக்கும் ஈடு கொடுக்கும். தண்ணீரும் குறைவாக இருந்தால் பரவாயில்லை.

ஜப்பான் மாதிரி விளைச்சல் வேண்டும் என்றால் ஜப்பானிய விதைகளையும் இந்திய விதைகளையும் கூறு சேர்த்து, புதிய தினுசு விதைகள் உண்டாக்கவேண்டும் என்று சர்க்காருக்கும் தெரியும், இதற்கு ஓரிஸ்ஸாவில் அரிசி ஆராய்ச்சி நிலையத்தில் ஒட்டுவிதைப் பரீக்ஷை செய்கின்றார்கள். ஆனால் இதுவரை ஒரு பலனும் இல்லை. ஒருவித ஒட்டு நன்றாகப் பயிர் ஆயிற்று. ஆனால் விளையும் பருவம் வந்ததும் நெல் கதிரைக் காணோம். அதற்குப்பதில் புல் நிரம்பி இருந்தது.

ஜப்பானிய விளைச்சலும் இந்தியப் பயிர் உறுதியும் உள்ள விதையைக் கண்டுபிடித்து அவைகளைப் பெருக்கினால் இந்தியா பூராவும் நாலு வேளை இட்லியாகவே சாப்பிடலாம். அது இல்லாதவரை இந்தப் பிரசாரம் ஸிந்திரியில் மலைமலையாகக் குவிந்திருக்கும் மருந்து உரம் விற்பனை ஆவதற்குச் செய்யும் சூழ்ச்சி என்றே தோன்றுகிறது. உண்மையை அப்பட்டமாகச் சொன்னால் உதை வாங்கும் சமயத்தில்கூடத் தப்பித்துக் கொள்ளலாம். திருட்டுப் புரட்டுக் கொள்கைகள் நடுச்சந்தியில் நிறுத்திவிடும்.

---

# இந்திய ரயில்வேக்களின் - - - - நூறு ஆண்டுகள் பூர்த்தி

**டில்லிவாசி**

சென்னையில் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் ஏறி உட்காரும்பொழுது, முதல் முதலாக டில்லிக்கு வரும் நபருக்குக் கொஞ்சம் உற்சாகமாக இருக்கும். "டொகா டொகா" என்று வண்டி (வேகமாகச் சென்ற போதிலும் கூட) விஜயவாடாவை அடையும் பொழுது அவருக்கு ஒரு சோர்வு உண்டாகும். இரவு கழிந்து மறுநாள் வந்ததும் பிரயாணிக்கு முகத்தில் பேஸ்து வைத்தாகிவிடும். "ஐயோ டில்லி வராதா" என்ற அலுப்பும் வந்துவிடும். அதற்கு மறுநாள் காலை இரு பக்கங்களிலும் சர்க்கார் ஊழியர்களின் விடுதிகளைப் பார்த்ததும் தான் உயிர் வரும்; ஏனென்றால் அது தான் புது டில்லி வந்துவிட்டது என்பதற்கு அடையாளம்.

இப்பொழுது, சென்ற கிட்டத்தட்ட இரு வாரங்களாக, மற்றொரு அடையாளம் புது டில்லிக்கு முன்னால் தோன்றியிருக்கிறது. சுமார் 20 ஏக்கர் பரப்பில் ஒரு சிறு நகரமே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. இரவில் பார்த்தால் ஏதோ ஜோதியால் உண்டாக்கப்பட்ட ஒரு சொப்பன உலகமே உண்டாகியிருப்பது போன்ற பிரமை தட்டுகிறது- பலவித ஜால வேலைப்பாடுகளும் வர்ண விளக்குகளும் கொண்ட இந்த இடத்தில் தான் இந்திய ரயில்வேக்களின் நூற்றாண்டு முடிவு விழாக் கண்காட்சி நடக்கிறது.

நூற்றாண்டு விழா என்றால் அதன் முழு தாத்பர்யம் சட்டென்று விளங்குவதில்லை. ஆனால் உங்கள் மனோரதத்தில் வண்டியை வேகமாகப் பின் நோக்கித் தட்டிவிடுங்கள்- 1851க்கு வந்துவிட்டீர்களா? இப்பொழுது கண்ணைத் திறந்து பாருங்கள். பயப்படாதீர்கள்! இதுவும் இந்தியா தான். ஆம், எந்த ஊரையும் அடையாளம் கண்டு கொள்ள முடியாது தான். தவிர, என்ன பிரயாண மார்க்கம் இருக்கிறது என்று பாருங்கள்- உடனே ரயிலைப் பற்றி நினைக்கிறீர்களே! இந்தியாவில் எங்குமே ரயில் இல்லை சுவாமி! நம் ஊரிலிருந்து புறப்படும் காசி யாத்திரீகர்கள்கூட தங்கள் உறவினர்களிடம் சொல்லிக்கொண்டு கால் நடையாகக் கிளம்புகிறார்கள். ஆம். திரும்பி வருவோம் என்ற நம்பிக்கை இல்லை.

1852ஆம் வருஷம் ஏது, ஏதோ ஒரு அற்புதமான வஸ்து பம்பாயில் காணப்படுகிறதல்லவா. ஆம். ஆள் உயரம் புகைக்குழாயுடன் ஒட்டைச்சிவிங்கி மாதிரி உள்ள கரியன் தான் மகாகனம் பொருந்திய ரயில் என்ஜின். சிறுகச் சிறுக, சென்னையிலும், கல்கத்தாவிலும் இருப்புப்பாதை போடப்படுகிறது. வெள்ளையர்களின் கிழக்கிந்தியக் கம்பெனி பணத்தையும் என்ஜின்களையும் சாமான்களையும் கொண்டு வந்து கொட்டுகிறது. காலச்சக்கரம் சுழல்கிறது, இந்தியாவின் முக்கிய நகரங்களான டில்லி, சென்னை, பம்பாய், கல்கத்தா இருப்புப் பாதையால் இணைக்கப்படுகின்றன. பிறகு தனித்தனி வெள்ளைக் கம்பெனிகள் **G. I. P., E. I. R., B. N. R., M. S. M., S. I. R.** என்ற தனிப்பெயர்களால் ஆன கம்பேனிகள் மூலம் வேலையைத் துவக்குகிறார்கள். தங்கள் தங்கள் இலாகாக்களில் மூலை முடுக்குகளிலும் உள்ள இடங்களுக்கு ரயில் போடுகிறார்கள். தான தர்மத்திற்காகவல்ல, ரயிலில் காசு இருக்கிறதய்யா, அதைச் சுரண்டி, சீமைக்கு அனுப்பவேதான். ஆனால் மறைமுகமாக இது இந்தியாவுக்குப் பயன் பட்டது பிற்காலத்தில்.

இருபதாவது நூற்று ஆண்டு பிறந்தும் கூட ரயில்வே பழைய மாதிரி என்ஜின்களையும், வண்டிகளையும் கொண்டு இயக்கப்படுகிறது. 1930-ல் தான் புதுமாதிரி என்ஜின்களும் வண்டிகளும் போடப்படுகின்றன. ஆனாலும் ரயிலுக்குக் காராம்பசுவான மூன்றாம் வகுப்புப் பிரயாணி இன்னும் ஆடுமாடு மாதிரி அடைந்துகொண்டுதான் பிரயாணம் செய்கிறான். ஏன் இன்னும் வண்டிகள் விட்டாலோ? யாரிடம் சொல்லுவது? ரயில்தான் கம்பெனி நிர்வாகம் ஆயிற்றே, லாபம் ஒன்றுதானே அவர்கள் குறி!

பழையநாள் சட்டசபையிலிருந்து பண்டித மோதிலால், மதன்மோகன் மாளவியா முதல் சத்தியமூர்த்தி — புலாபாய் சொல்லம்பு வீரர்கள் வரை மூன்றாம் வகுப்புப் பிரயாணிக்கு வக்காலத்து வாங்கிப் பேசாதவர்கள் பாக்கி இல்லை. அட, மூன்றாம் வகுப்புப் பிரயாணி உட்கார ஹால்கூடவா கட்டக் கூடாது? அவர்கள் என்ன மூட்டை முடிச்சு



**என்ஜினைக் கண்டால் வயது வந்தவர்களுக்குக்கூட பிரமை. இங்கு என்ஜின் "குடலுக்குள்" உள்ள ஜாலத்தைக் காண்பிக்கிருர்கள்.**

களா பிளாட்பாரத்தில் உருண்டு கிடக்க, என்று தீரர் சத்தியமூர்த்தி கொதித்தார்,

அந்த நாட்களில் மற்ருெரு காரசாரமான விவாதம் மற்ருெரு விஷயத்தைக் குறித்து நடப்பது வழக்கம், பல லக்ஷங்கள் கொடுத்து என்ஜின்கள் தருவிக்கிறீர்களே, அவைகளை ஏன் இந்தியாவில் செய்யக்கூடாது என்று விவாதம் நடப்பது வழக்கம். ஐயோ இந்தியாவிலா? அப்புறம் பர்மிங்ஹாம் என்ன ஆவது என்று வெள்ளையர்கள் கொதிப்பார்கள், என்ஜினில் உள்ள தண்ணீர்த் தொட்டி (Boiler) கூட, சமீபகாலம் வரை இந்தியாவில் செய்யப்படவில்லை,

ரயில்வேக்களைத் தேசிய மயமாக்கிய பிறகு தான் வெளிநாட்டு இறக்குமதி குறைந்து boiler செய்ய ஆரம்பித்தார்கள், பிரயாணிகளின் வண்டிகளும் இங்குப் பூராவும் செய்ய ஆரம்பித்தார்கள், "நான் இந்த ஜன்மத்தில் இந்தியா சுதந்திரம் பெறுவதைக் காணுவிட்டாலும், மறுபடியும் மறுபடியும் இந்த மண்ணில் பிறந்து அதற்காகவே உழைப்பேன்" என்று மார் தட்டிய சிங்கம் தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் பெயரை வைத்து உருவாக்கப்பட்ட சித்தரஞ்சனில் என்ஜின்கள் தயார்செய்ய ஆரம்பித்தார்கள். சுமார் இரு வருஷங்களுக்கு முன் இந்தியாவில் செய்யப்பட்ட என்ஜினை ஜனதிபதி ராஜேந்திரப்பிரஸாத் ஓட்டினர்.

பார்த்தீர்களா 1953-க்கும் 1853-க்கும் என்ன வித்தியாசம் என்று. இந்த அம்சங்களை நூற்ருண்டு முடிவுக் கொண்டாட்டத்துக் கண்காட்சியில் எதிர்பார்க்க முடியாது. பழைய விஷயங்களைப்பற்றி நீங்கள் தெரிந்துகொண்டிருப்பீர்கள் என்ற ஐதிகத்தில் ரயில்வேக்களின் தற்கால சாதனையைப் பற்றித்தான் அதிகம் எடுத்துச் சொல்கிருர்கள்,

கண்காட்சிச் சாலைக்குள் நுழையும்போதே கட்டை வண்டியிலிருந்து ஆரம்பித்துத் தற்காலப் போக்கு வரத்துச் சாதனங்கள்வரை சுவரில் அழகாகச் சித்திரமூலம் தீட்டியிருக்கிருர்கள். கேட்டில் டிக்கட் கேட்பவர் நாம் பார்க்கப்போவது ரயில்வே சம்பந்தப்பட்ட கண்காட்சி என்று தம் உடைமூலம் ஞாபகப் படுத்துகிருர். பிறகு கண்காட்சிச் சாலைக்குள் வந்து விடுகிருேம். நேரே தெரிவதுதான் ரயில்வேக்களின் ஸ்டால்கள்.

ரயில் என்ருல் அதில் பிரயாணம் செய்பவர்களும் அதற்குக் கௌரவம் அளிக்கிருர்கள் அல்லவா? ஆகையால் மகாத்மா காந்தியின் ரயில் பிரயாணப்படங்கள் நுழைந்தவுடனேயே வைக்கப்பட்டுள்ளன. பிறகு முறையே மேற்கத்திய, மத்திய, கிழக்கத்திய. வடக்கத்திய, தெற்கத்திய ரயில்வேக்களின் விசேஷ சாதனைகள் படம் மூலமும் சிறு மாடல்கள் மூலமும் காண்பிக்கப்பட்டுள்ளன.

ரயில்வேக்காரர்கள் என்ன இருந்தாலும் ஜனங்களின் விருப்பு வெறுப்பை நன்கு எடை போட்டவர்கள் என்று தோன்றுகிறது. ஒவ்வொரு ரயில்காரர்களும் பெரிய மேஜைகளைக்கொண்டு பிளாட்பாரம் அமைத்து அதன்மேல் பல பிரிவுகள், "பாயிண்டுகள்", கைகாட்டிகளை அமைத்து,

**பயந்துவிடாதீர்கள். இதுமாதிரி மெத்தை தைத்த வண்டிகளை ரூ 1,10,000க்குள் செய்ய முடியும் என்று நிரூபித்து இருக்கிருர்கள் ஹிந்துஸ்தான் விமானக் கம்பெனி.**





**இந்திய தேச பக்தர்களின் ஆவி ஆசி அளிக்கும் விஷயம் – சித்தரஞ்சனில் தயார் செய்யப்பட்ட என்ஜின்**

விளையாட்டு ரயில்களைத் தத்ரூபமாக மின்சாரம் கொண்டு இயக்குகிறார்கள். ஆஹா! ஜனங்கள்தான் எப்படி வாயைப் பிளந்து கொண்டு வண்டிகள் ஓடுவதையும் தாமாகவே சைகைக் குறிகள் கலர் மாறுவதையும் ரஸிக்கிறார்கள்! ஒவ்வொரு ரயிலிலும் எப்படி முக்கிய ஜங்ஷன்களில் சாமான் வண்டிகள் அமைக்கப்படுகின்றன என்று காட்டுகிறார்கள்.

வடக்கத்திய ரயிலில் விசேஷம் மோரதாபாத்திலுள்ள என்ஜின்களுக்குத் திசை திருப்பும் சாதனம். கங்கையின்மேல் அமைக்கப்பட்டுள்ள பாலம் எப்படி அற்புதமானது என்றும் காட்டியிருக்கிறார்கள். கரக்பூரில் எப்படி 15 நாட்களில் என்ஜின்களை அக்கு வேறு ஆணி வேறாகப் பிய்த்துப் போட்டு அவைகளை நன்கு சுத்தம் செய்து மறுபடியும் மாட்டுகிறார்கள் என்பதைச் சிறு என்ஜின்கள் மூலம் காண்பிக்கிறார்கள். ஹௌரா, பம்பாய், பொன்மலை ஒர்க்ஷாப் முதலியவைகள் அப்படியே அசல் காப்பி. தென்னிந்திய ரயில்வே ஒன்றில் தான் விபத்து ரயில் இருக்கிறது. விபத்து ரயிலா? ஆம், விபத்து ஏற்படும் ரயில் அல்ல. விபத்து ஏற்பட்டால் அதைச் சமாளிக்க வேண்டி, பல சாமக்கிரியைகள் தேவை.

விபத்து நடந்த இடத்திலிருந்து விபத்தில் மாட்டிக்கொண்ட வண்டிகளை அப்புறப்படுத்த இயந்திரக் "கொக்கு" வேண்டும், ஆஸ்பத்திரி வண்டி, ஆம்புலன்ஸ் வண்டி, சமையல் வண்டி, ஆயுதங்கள் வண்டி, யாவும் தேவை. இவைகள் யாவையும் ஒரு வண்டியில் அமைத்திருக்கிறார்கள்.

சுமார் நாற்பது ஐம்பது பொம்மை வண்டிகளைப்பார்த்து வெளியே வந்த என் நண்பர் கட்கு இருகுறைகள் இருந்தன. ஒன்று, லாகவமாக ஒரு சிறு என்ஜினைக்கூடப் பொறுக்கி, பையில் போட்டுக்கொள்ள முடியவில்லை; காரணம் வண்டிகளில் மின்சார மிடுக்கு இருந்து "ஷாக்" அடிக்கும். அப்படி இல்லாத இடங்களில் பொம்மை வண்டிகளைத் தொடருடன் நன்கு இணைத்திருந்தார்கள். இங்கிருந்து வெளியே சென்று திரும்பினால், அசல் என்ஜின்களையும் வண்டிகளையும் அசல் தொடரில் வைத்துக் காட்டியிருக்கிறார்கள். எல்லாவற்றிற்கும் புராதனமாக வரவழைக்கப்பட்ட என்ஜின் (**Fairy Queen**),

இந்தியாவில் பூராவும் 1895-ல் ஆஜ்மீரில் செய்யப்பட்ட **Saturn** என்ஜின்கள் முதல் கொஞ்சம் கொஞ்சமாக, "பவிஷு" பெற்று தற்காலம் எங்கும் மூடப்பட்ட அலங்காரி, சித்தரஞ்சன் வனிதை வரை ஜனங்களுக்கு வியப்பை அளிக்கின்றன,

என் நண்பர், ஸ்பெஷலாகச் சென்னையிலிருந்து வந்தவர், ஒரு வெடிகுண்டைத் தூக்கிப்போட்டார், ஆஜ்மீர் ஒர்க்ஷாப்பில் 1895-ல் இந்திய வேலைக்காரர்கள் வெளிநாட்டிலிருந்து ஒரு சிறிய வஸ்து கூட இறக்குமதி செய்யாமல் என்ஜின்கள் தயாரித்தார்கள். அம்மாதிரி ஒன்று இரண்டல்ல, சுமார் 400 என்ஜின்கள் உற்பத்தி செய்தார்கள். அப்படி 1895-ல் செய்தால் ஏன் இந்தியாவில் மற்ற இடங்களில் என்ஜின் செய்யவில்லை.

இதுவும் எனக்குப் புதிராகவேதான் இருந்தது. ஆனால் ஒரு நண்பர் சொன்னார்: வெள்ளையர்கள் ஊசி முதல் உலக்கை வரையில் எதையும் பேடண்ட் செய்து வைத்தார்கள். அதன் பலன் அந்தந்த, 'பேடண்ட்' செய்யப்பட்ட பாகங்களை வேறு யாரும் செய்யக்கூடாது. ஆஜ்மீரில் பேடண்ட்டா

**இந்தியாவில் உள்ள ஆறு ரயில்வேக்களில் தெற்கிந்திய ரயில்வேயில் மட்டும்தான் "விபத்துக்கால வண்டி" பூராவாக உள்ளது.**



வது கத்திரிக்காயாவது என்று தடியடி அடித்து எல்லாவற்றையும் செய்து விட்டார்கள் போலும்! எப்படி இருந்த போதிலும் 1949ல் உருவான என்ஜினைவிட 1895-ல் உண்டான வண்டிதான் ஒசத்தி என்று எனக்குப்பட்டது.

மற்றொரு விஷயம். மூன்றாம் வகுப்புப் பிரயாணிக்கு எந்த வண்டியைப் பார்த்தாலும் பழைய நாளைக்கும் இன்றைக்கும் அதிக வித்தியாசம் இல்லை என்றுதான் தோன்றும். ஆனால் ரயில் ஆரம்பித்ததில் இருந்த பெட்டி வண்டிக்கும் இப்பொழுது உள்ள சீர்திருந்திய மூன்றாம் வகுப்பு வண்டிக்கும் மிகவும் வித்தியாசம். வண்டி அகலமாகவும், ஆஸனங்கள் சௌகரியமாகவும் இருக்கின்றன. தூரப்பிரயாணிகள் வண்டியில் குருவித்தலை விசிறிகூட இருக்கிறது! ஆனால்.........

ஏன் ஆனால் என்று சொல்லுகிறீர்கள் என்று கேட்கிறீர்களா! பெங்களூரில் தான் புதிய மாதிரி மூன்றாம் வகுப்பு வண்டிகள் செய்யப்படுகின்றன. கண்காட்சியில் இந்த வண்டியையும் தோற்கடிக்கும்படி ஒரு வண்டி தயார் செய்து வைத்திருக்கிறார்கள். அழகழகாய்த் தடுக்கப்பட்ட கம்பார்ட்மெண்ட், ஒவ்வொரு தடுப்பிலும் இரு விசிறிகள், மெத்தை ஆஸனங்கள், தலைக்கும் முதுகுக்கும் மெத்தை தைத்த சாய்மானங்கள், இரண்டாம் வகுப்போ என்று மூர்ச்சை போடும்படி இருக்கிறது, மல ஜல வசதி அறை, ஆகா! எந்த ஜன்மத்தில் இது நடக்கும் என்று கேட்கவேண்டாம், நம் சர்க்காருக்கு மனம் இருந்தால் அடுத்த ஐந்து வருஷங்களில் கால்பங்குக்கு மேல் இதுமாதிரி புது வண்டிகள் புகுத்திவிடலாம், விலை அபாரமோ என்றால் அதுவும் இல்லை- சமீபத்தில் ஸ்விட்ஜர்லாந்தில் இந்தியாவுக்கெனக் கட்டப்பட்ட மூன்றாம் வகுப்பு வண்டியின் விலை இரண்டுலக்ஷம் ரூபாய். இந்தப் பெங்களூர் நமூனாவின் விலை ஒரு லக்ஷத்துப் பதினாயிரம். ஒவ்வொரு வண்டிக்கும் சுமார் ரூ. 90,000 லாபம் வந்துவிடுமோ என்று பயந்து தான் வெளிநாடுகளுக்கு நம் தேசிய சர்க்கார் ஆர்டர் கொடுத்திருக்கிறார்கள்போலும்!

பொம்மை ரயில்களில் லயித்துப்போகும் ஜனங்களுக்கு டார்ஜலிங் ரயில்வேயில் ஓடும் ஒரு வண்டியையே இங்கே கொண்டுவந்து விட்டு, தலா நாலணா கட்டணம் விதித்து, கண்காட்சி நிர்வாகிகள் பணம் அரித்துக் கொட்டுகிறார்கள். இதில் விசேஷம் என்னவென்றால் மலைப்பிரதேசத்தில் எப்படி குகையைக் குடைந்து பாலத்தின் மீதும் மலைச்சரிவிலும் குட்டி ரயில் ஓடுமோ அது



**கரக்பூரில் எப்படி 15 நாட்களில் என்ஜினைப் பிரித்து, கழற்றிக் கோக்கிறார்கள் என்று காட்டப்பட்டிருக்கிறது.**

மாதிரி "குகை" "சரிவு" உண்டாக்கி ஆமை வேகத்தில் ஸ்பெஷல் ரயில் ஓடுகிறது. மலை ரயில் பார்க்காதவர்கள் மாரியம்மன் கோவிலில் சமுத்திரம் பார்ப்பதுபோன்ற சந்தோஷத்துடன் ரயிலை அனுபவிக்கிறார்கள்.

சென்னையிலிருந்து வந்த நண்பர் ரயிலை விட்டு இறங்கியவர் திடீரென்று என்கையைப்பற்றி இழுத்துச் சென்றார். எங்கு செல்கிறாரோவென்று நான் வியந்துகொண்டிருந்தபொழுது நாற்காலிகள் போட்ட ஒரு அடைப்பில் வந்து உட்கார்ந்துகொண்டார். அங்கே தட்டுடன் சென்று கொண்டிருந்தவர்களைப் பார்த்ததும் சரி, இது சிற்றுண்டி விடுதியாக்கும் என்று புரிந்து கொண்டு, "படா, போண்டா ஹை?" என்றேன். தட்டுடன் நின்றவர் சளைக்காமல் "அதெல்லாம் ஒண்ணும் நை, ஸார்; போர்டில் இருப்பது தான் ஹை" என்றார். மணிப் பிரவாளத்தைக் கேட்டுத் தூக்கி வாரிப் போட்டது எனக்கு. என் சென்னை நண்பர், "ஓய், இது அசல் திருச்சி ஐ. ஆர்.ங்காணும்; நல்ல டிபனாகை முதல் முதலாகச் சாப்பிடலாம் ஓய்" என்று எல்லாவற்றையும் வரவழைத்துக் காலி செய்து, "உம் கண்காட்சியில் ஐ. ஆர், தான் ஓய் ஜோர்" என்றார்.

உண்மையில் ஐ. ஆர். வட இந்தியர்களைக் கூடக் காந்தம் போட்டு இழுக்கிறது. மொத்தத்தில் கண்காட்சி பாமரர்களுக்குச் சிக்ஷா போதனை முறையில் அமைந்திருக்கிறது. ஒரு நூற்றாண்டில் பல அரிய சாதனைகள் நடந்திருக்கின்றன. ரயில்வேக்கள் மத்திய சர்க்கார் கஜானாவுக்குக் காராம்பசு. அவைகளில் ஊசி முதல் உலக்கைவரை **எல்லாவற்றையும்** தாங்களே கூடிய சீக்கிரம் செய்வார்கள் என்று சொல்லப்படுகிறது. அப்படி 100 சதவிகிதம் இந்தியமயமான தொழில் நம் நாட்டுக்கே பெருமை தரும்விஷயம்.




தபால்காரன் இரண்டு கடிதத்தைக் கொடுத்துச் சென்றான். பிரித்துப் பார்த்த என் மனம் குழம்பித் தவித்தது. என் பெரிய மகள் சீதாவும் மகன் சேகரும் எழுதியிருந்த கடிதங்களின் இரு கருத்துக்களும் ஒன்றையே குறித்திருந்தன. என் கடைசி பெண் மாலதியின் கல்யாணத்துக்காக எனக்கிருந்த ஒரே ஆஸ்தியான வீட்டை விற்றுவிடத் துணிந்திருந்த என் செயலைக் கண்டித்து வந்திருந்தன கடிதமிரண்டும். இருநூறுமைல் தூரத்துக்கு அப்பால் மகனும் இப்பால் மகளுமாக இருந்தபோதிலும் இருவர் கடிதமும் ஒரே இடத்திலிருந்து எழுதியவை போன்ற கருத்துக்கள் நிறைந்துவந்து என் சிந்தையைத் தாக்கின.

ஆண்வாரிசு இருப்பதை மறந்துவிட்டு வீட்டை விற்கத் துணிந்தாயா என்று எச்சரிக்கை விடுத்திருந்தான், மகன். அண்ணனுக்குத் துரோகம் செய்ய உன் மனம் எப்படித் துணிந்தது என்று இடித்துக் காட்டியிருந்ததோடு தனக்குச் செய்யாத சீரைவிடக் குருட்டுப் பெண்ணுக்கென்ன உயர்வு வந்துவிட்டது என்று வேறு சுட்டிக் காட்டியிருந்தாள்.

மாலதி குருட்டுப் பெண் என்பதற்காக மட்டுமல்லாது அவளைக் குருட்டுப்பெண்ணாக்கிய குற்றத்தை ஓரளவு தவிர்ப்பதற்காகவே தான் வீட்டை விற்கத் துணிந்தேனென்பது என்னைத் தவிர அவர்களுக்கு எப்படித் தெரியப்போகிறது.

நினைத்தபோதெல்லாம் நெஞ்சைத் தகிக்கும் அந்தப் பாழும் சம்பவம் என்னைத்தவிர, குழந்தைகளான அவர்களுக்கு எப்படித்தெரியும்.

* * *

ஐந்துக்கு மேலே அரசனும் ஆண்டி என்பார்கள். அரசனுக்கே அந்த நிலை என்றால் ஆண்டியாக வாழும் எங்கள்நிலையை எப்படி வர்ணிக்கமுடியும்? ஐந்து குழந்தைகளுக்கும் வயிறார உணவும் தேகத்தை மறைக்கப் போதிய துணியும் சேகரம் செய்வதற்குள் நாங்கள் பட்ட கஷ்டம் எங்களைப் படைத்த பிரமனுக்குத்தான் தெரியவேண்டும் — இல்லை ... அவனும் அதை அறிந்திருக்கவில்லையென்றுதான் சொல்லவேண்டும். அறிந்திருந்தால் ஐந்து குழந்தைகளைச் சமாளிக்கத் திணறிக்கொண்டிருக்கும் எங்கள் பொறுப்பில் ஆறாவதொன்றையும் சுமத்தத் துணிவானா?

பணமில்லையென்பதற்காகக் குழந்தைகளுக்கு வியாதி வராமலிருக்கிறதா? இல்லாதவர்கள் என்றாலும் எத்தனை கடன்பட்டாயினும் குழந்தைகளின் உயிரை மீட்கத் துணிகிறதே தவிர இழக்க மனம் சம்மதிக்குமா? வருகிற வியாதியாவது இருப்பவர் இல்லாதவர் என்கிற தரம் அறிந்து வருகிறதா? ஏழை எளியவர் என்ற பேதாபேதமின்றி, பணம் கறக்கும் வைத்தியர்களாக இருப்பினும் அவர்களை நாடியாவது தம் குழந்தைகளைக் காப்பாற்றிக்கொள்ளத்தான் பெற்றவர்களின் மனம் துணியுமே தவிர. பணத்தை எண்ணிக் கொடுக்கும் போதுதான் பணத்திற்காகத் தாங்கள் படும் அவதியை நினைக்கவேண்டியிருக்கும்.

மாதம் தவறினாலும் டாக்டர் வீட்டுப் படியேறத்தவறாத குழந்தைகளை வைத்துக்கொண்டு அவதிப்படும் நரக வாழ்க்கையில் பங்கெடுக்க வரும் இன்னொரு ஜீவனின் உதயத்தை ஆவலாடு வரவேற்க யாருக்குத்தான் மனம் துணியும்.

அந்த மாதச் சம்பளத்தைக் கொண்டு வந்து கொடுக்கவந்தவர், 'இந்தா மீனா இந்தச் சம்பளத்தில் சிறிது பணம் சேகரித்து ஒரு குழந்தைக்குத் துணி தைத்துவிடு. இப்படியே ஒவ்வொரு மாதம் ஒவ்வொருவருக்காகத் தைத்து முடித்தால் தான் ஆறுமாதம் கழிந்ததும் வரப்போகும் தீபாவளிப் பண்டிகையை ஓரளவு சமாளிக்கமுடியும். மொத்தமாக எல்லோருக்கும் ஒரே மாதத்தில் எடுப்பதானால் பொருளாதாரம்சமாளிக்கமுடியாத நெருக்கடியில் கொண்டு விட்டு விடும்" என்று சொன்னபோது என்னையறியாமல் ஏனோ சிரிப்பு எழுந்தது.

இருக்கிற பாரத்தையே சமாளிக்க முடியாமல் தடுமாறும் அவரிடம் புதிய சுமையை எப்படிச் சொல்வதென முடியாமல் திணறினேன். சொல்லாமலும் முடிகிற காரியமா? ஆகவே மெல்லச் சமாளித்துக்கொண்டு, 'அடுத்துவரும் தீபாவளியின்போது இன்னொரு சொக்காய் சேர்த்துத் தைக்கவேண்டும்' என்றேன்.

'என்னது?' என்று திடுக்கிட்டு விழித்தார்.

'புரியவில்லையா? ஐந்தோடு ஆறாவதாக ஒன்றும் உங்களை அப்பா என்று அழைக்க வருகிறது.'

'அட ஈசுவரா ... ' என்று தலையில் போட்டுக் கொண்டார்.

ஆபீஸிலிருந்து வரும்போது கையில் சிறிய புட்டியுடன் திரும்பி வந்தார். 'இந்தா மீனு, இந்த மாத்திரைகளைத் தொடர்ந்து சாப்பிட்டுவா' என்று என்னிடம் கூறியபோது புரியாமல் விழித்தேன்.

'புதிய பாரத்தை அகற்றும் எதிர்ப்பு' என்று என்னிடம் கூறியபோது புரியாமல் விழித்தேன்.

'புதிய பாரத்தை அகற்றும் எதிர்ப்பு' என்று சிரித்தார். சிரிப்பா அது, நெருப்பாகத் தகித்தது நெஞ்சில்.

'தோஷமில்லையா?' என்று அலறினேன்.

'தோஷமாவது மண்ணாங்கட்டியாவது...பெற்ற குழந்தைகளைத் தகுந்தபடி போஷிக்க முடியாமல் உயிருடன் கொல்வதைவிட, முளையிலேயே கிள்ளி விடுவது பாபமாகாது' என்று என் மனதிற்குச் சமாதானம் கூறி என் மனதை மாற்றிவிட்டார்.

ஒவ்வொரு மாத்திரையை விழுங்கும்போதும் என் தாய்மையின் மனம் துடிக்கத்தான் செய்யும். அநியாயமாக ஒரு ஜீவனைக் கொல்லுகிறேனே என்று என் மனம் தவியாய்த் தவிக்கும். தன் உயிரை ஊட்டி வளர்ப்பவள் தாய் என்பதாகப் பல ஏடுகளில் படித்திருக்கிறேன். இங்கு நான் செய்வதென்ன? அதன் உயிரையே பறிப்பதற்கு வேண்டி மருந்தைச் சாப்பிட்டு அதனை மாய்க்கிறேன். நானா தாய்? இல்லை...இல்லை, கொலைகாரி என என் மனம் அரற்றும். மனச்சாட்சி வெறி கொள்ளும் வேளைகளில் மருந்தை நிறுத்திவிடுவேன். கணவனின் வற்புறுத்தல் நேரும்போது மீண்டும் மாத்திரையை விழுங்குவேன்.

எப்படியோ பதினைந்து நாள் ஓடியது. பாட்டிலும் காலியாகியது. ஆனால் என் வரையில் மாறுதல் ஒன்றுமில்லை. மருந்து உட்புகுந்த நேரங்களில் வயிற்றை ஒரே புரட்டாகப் புரட்டும். மற்ற வேளையில் அமைதி நிறைந்த தடாகமாக மாறிவிடும்.

மருந்து முடிந்து ஒருவாரத்திற்கு மேலாகியும் ஒரு பலனும் காணாதிருக்கவே மருந்தை ஒழுங்காகச் சாப்பிடவில்லை என்று பழியை என்மீதே சுமத்தினார்.

* * *

பிரசவ சமயம் நெருங்கிவிட்டது. வீட்டின் உதவிக்காகத் தூரத்துப் பந்துவான அத்தை ஒருத்தி வீட்டோடு வந்திருந்தாள். பிரசவ நாள் நெருங்க நெருங்க என்மனதில் இனமறியா வேதனை ஒன்று பிடுங்கித் தின்றுகொண்டிருந்தது.

நான் ஆரம்பத்தில் உட்கொண்டிருந்த மருந்து கர்ப்பத்தைச் சிதைக்க முடியாமற் போன போதிலும் மருந்தின் வேகம் குழந்தையின் அங்க அவயவங்களைச் சிதைத்து, சின்ன பின்னமாக்கியிருக்குமோ, உலகத்தில் எத்தனையோ விசித்திரப்பிறவிகள் இருக்கின்றனவே. அவற்றைப்போல கைகால் ஊனமாகவோ அல்லது மூக்குத் தேய்ந்தோ காது அறுந்தோ இவற்றுள் ஏதேனும் ஒன்றைக் கொண்டு குழந்தை பிறந்து விடக்கூடாதே என்கிற திகில் என்னை அணு அணுவாய் அரித்தது.

பிரசவ வேதனை அதிகரிக்க அதிகரிக்க, என்னுள் அடங்கியிருந்த பயமும் விசுவரூபமெடுத்து என் நெஞ்சை நிறைத்தது,

'குவா குவா' என்ற குழந்தையின் அழு குரல் தேனமிர்தமாய்ச் செவியில் பாய்ந்தபோது குழந்தையின் உயிருக்குப் பயமில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன். குழந்தையின் அங்க அவயவங்கள் ... இதை நினைத்துக்கொண்டு சுற்று மூற்றும் பார்த்தேன்,

நர்ஸ் குழந்தையைக் குளிப்பாட்டித் துடைத்துக் கொண்டிருந்தாள். 'குழந்தை நன்றாகத்தானே அம்மா இருக்கிறது' என்று அடக்கமுடியாத ஆவலுடன் வினவினேன் அவளை. 'ஆமாம்' என்று கூறியதும் என் நெஞ்சில் பால் வார்த்தாற்போலிருந்தது.

இதற்குள் குழந்தையை நெருங்கிய டாக்டரம்மா கையில் வைத்திருந்த எலுமிச்சம் பழத்தால் குழந்தையின் கண்களைத் தேய்த்துவிட்டுக் கொண்டிருந்தாள்.

ஐந்து பிரசவத்தில் காணாத இந்தப் புதுமை ஆறாவது பிரசவத்தில் கண்டதும் நான் சம்சயித்த திகில் பற்றிக் கொண்டது. 'டாக்டர், குழந்தையின் கண்களில் ஏதாவது கோளாறா?' என்று பதறிப் போய்க் கேட்டேன்.

ஏதோ மென்று விழுங்கிய டாக்டரம்மா என்னை நெருங்கி, 'ஏனம்மா நீங்கள் கர்ப்பகாலத்தின் போது தவறிப்போய் ஏதாவது திரவ மருந்து சாப்பிட்டீர்களோ' என்று கேட்கவே சுரீரென்றது.

'மருந்து...... மருந்தா...... ஆம்......ஆம் ...... ஐயோ திரவ மருந்தா...... இல்லை டாக்டர்...... ...' என்று கூறிவிட்டு நடந்தது முழுவதையும் கூறி முடித்தேன்.

'சரிதான்...... அப்படியானால் குழந்தையின் பார்வை இழந்தாற் போலத்தான்......'

'ஐயோ என் குழந்தை குருடியா?'

அடி வயிற்றிலிருந்து பீறிட்டெழுந்த இந்தக் குரல் என் குழந்தை பெரியவளாகி, கண்ணற்ற கொடுமையால் படும் அவதியைப் பார்க்கும் வேளையெல்லாம் அதே வேகத்தில் வெளி வந்து என் உள்ளத்தை வாட்டிப் பிழிந்தது.

குருட்டுப் பிள்ளையோடும் குருடாக்கிய குற்றத்தை இடித்துக் காட்டும் மனச்சாட்சியோடும் நான் பட்ட அவதிகள் கொஞ்சமா நஞ்சமா? நான் பெற்ற என் குழந்தைகளே மாலதியை, 'குருடி' என்று பழித்துக் கூறும் போது என் நெஞ்சம் துடியாய்த் துடிக்கும்.

இயற்கையாகவே அழகு நிறைந்த என் மகளைக் குளிப்பாட்டி, தலைவாரி, பொட்டிட்டுச்

சொக்கு போட்டு அலங்கரித்து வைத்தால் ஊராரின் பழிச்சொல்லைத் தாங்க முடியுமா?

'குருட்டுக் கழுதைக்குச் சிங்காரத்தைப் பாரு. பதுமைக்குச் செய்யும் அழகும் சரி, இந்தக் குருடிக்குச் செய்யும் அழகும் சரி' என்று அவர்கள் பழிக்கும் போது என் நெஞ்சு என்னையே சுடும். கண்ணைப் பறிக்கும் அழகு சிந்தும் அந்தப் பதுமையைக் குருடாக்கியது யார்? அந்தக் கொடிய பாவத்தைச் செய்த எனக்கு அது மட்டுமா தண்டனை. இன்னும் எத்தனை யெத்தனையோ? இப்படியே எழுதிக்கொண்டு போனுல் பாரதமாகும்.

அவள் கண்ணைத்தான் கெடுத்தேன். ஆனுல் மதியைக் கெடுக்கவில்லை. உரிய வயது வந்தபோது அவளுக்காகப் பள்ளிக்கூடத்தில் அவளைச் சேர்த்தேன். அதற்கான செலவுக்காக என் சக்திக்கு மீறிய உழைப்பையும் மேற்கொண்டேன். குழந்தைகள் வயது வந்து விபரம் தெரியத் தொடங்கினர். மாலதிக்காக அதிகப் பணம் செலவிடுவதை ஓரவஞ்சனை என்று எதிர்க்கத் தொடங்கினர். பெற்ற தாய்க்கு எல்லாம் குழந்தைகள்தான். மற்றக் குழந்தைகளுக்கு நான் தீங்கு ஒன்றும் செய்ததுமில்லை. அதற்குப் பிராயச்சித்தம் தேடியதும் இல்லை. ஆனுல் மாலதிக்கு அப்படியில்லை. அவளுக்கிழைத்தவிட்ட தீமையைத்தான் இந்தப் பரிகாரங்களின் மூலம் தணித்துக் கொள்ளுகிறேன் என்பதை அவர்கள் அறிந்திருக்க நியாயமில்லை.

படிப்பு முடிந்து பருவம் வந்தது. என் வேதனையும் பெருகிப் பொங்கியது. அழகும் அறிவும் மட்டுமிருந்தால் போதுமா? அந்தகியை மணக்க யார்தான் முன்வருவார்கள்? பல இடங்கள் வந்தும் ஒன்றுமே அமையவில்லை. கன்னியாக விட்டுவிடலாமென்றாலோ எனக்குப்பின் ஆதரவு யார்? அதற்காகத்தான் வரனுக்கலைந்தேன். அலைந்தேன் அலைந்தேன் அலைந்துகொண்டேயிருந்தேன். கடைசியில் அந்த இடம் முடிந்தது. ஆனுல் அவர்கள் கேட்கும் பணத்திற்கு நான் எங்குப் போவேன்?

வட தேசத்திலும் தென் தேசத்திலுமாகப் பிள்ளைகள் உத்தியோகம் செய்கிருர்கள். ஆனுல் வருவாய் அவர்கள்வரை சரி. இந் நிலையில் எனக்கெங்கே ...த்துக் கொடுக்கமுடியும். வீட்டை விற்று அவள் காரியத்தைமுடித்துவிடுவதெனத் தீர்மானத்திற்கு வந்துவிட்டேன்.

பேனுவையும் பேப்பரையும் எடுத்து, ஆதியில் நடந்துவிட்ட அந்தச் சம்பவத்தை எடுத்துக் கூறி அதனுல் நான் பட்ட வேதனையையும் விளக்கி, அதற்கான பிராயச்சித்தமாகவே வீட்டையும் விற்கப் போகிறேன் என்றும் குறித்து எழுதி அனுப்பிவிட்டேன். அதன் பினபே நிம்மதியுடன் மற்றக் காரியங்களைக் கவனிக்க முடிந்தது.

* * *

பத்திரம் ...சிதமாக வந்திருந்தான் வீட்டை விலை பே... வாங்கப் போகிறவன். காரியம் முடியப்போகிற தருணம் வாசலில் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து குதித்திறங்கி வந்த என் பெரிய பிள்ளையைக் கண்டதும் சப்தநாடியும் ஒடுங்கிவிட்டது. நல்ல தருணத்தில் சனியன் போல வந்து குதித்துவிட்டானே என்று மனதிற்குள் சலித்துக்கொண்டாலும், 'வா அப்பா சேகர். உனக்கு எழுதியபடி வீட்டை விலைபேசிவிட்டேன். பத்திரத்தில் ஒரு கையெழுத்துப் போடு' என்றேன்.

எதிர்வாதம் செய்வானென நினைத்த சேகர் பதில் பேசாமல் கையெழுத்துப் போட்டது மல்லாமல் பத்திரம் ரிஜிஸ்தர் ஆகும் வேலையிலும் ஒத்தாசையாக நின்று முடித்துக்கொண்டு வந்து சேர்ந்தான்.

'எங்கே ... தடைசெய்துவிடுவாயோ என்று பயந்து ...துகொண்டிருந்தேனப்பா' என்று என் நன்றியை ஒளிக்காமல் கூறியபோது சலனமற்றவன் போல நின்றுகொண்டிருந்தான்.

'கலியாணத்திற்காக வீட்டை விலைபேச வேண்டாமென்று சொன்னேனே தவிர, விற்கவேண்டாமென்று எழுதவில்லையே' என்று கூறவும் எனக்குச் சினமெழுந்தது.

'அப்படியானுல் பணத்தை உன் சொந்த உபயோகத்திற்கு வாங்கிப்போவதாக உத்தேசமா? அதற்காகத்தான் இப்பொழுது வந்தாயா?' என்று படபடப்புடன் பேசினேன்.

'அப்படிச் சொல்லவில்லையே அம்மா, தங்கையை அந்தகாரத்தில் மூழ்கவிட்டு, அந்நிலையில் அவளுக்குக் கலியாணம் முடிப்பதைவிட அந்தப் பணத்தைக்கொண்டு அவள் கண்ணைத் திறந்துவிட்டாலென்ன என்றுதான் கேட்கிறேன்.......'



'கண்ணைத் திறக்கவா...... இனிமேலா...... அது இந்த ஜென்மத்தில் இல்லையப்பா......'

'ஏனம்மா அப்படி முடிவு கட்டிவிட்டாய். உன் போன்றவர்கள் இப்படி மூடத்தனமாய் முடிவு கட்டிவிடுவதால்தான் படித்துப் பட்டம் பெற்ற மேதைகளான டாக்டர்கள் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டியிருக்கிறது.'

'எந்த மேதையானாலும் மாலதிக்குப் பார்வையளிக்க முடியாதப்பா. இந்தப் பதினறு வருஷம் காணுத புதுமையை இனிமேல் நானு கண்டுவிடப் போகிறேன்.'

'காணத்தான் போகிறாய். காலத்தின் மாறுதலையும் முன்னேற்றத்தையும் ஏனம்மா மறந்துவிட்டாய். ஆயிரமாயிரமாகச் செலவு செய்து கடல் தாண்டி கப்பலேறி, அமெரிக்கா சென்று படித்து வந்த டாக்டர் ராமச்சந்திரன் ஒரு மாதத்தில் தங்கையைப் பார்வையடையச் செய்து விடுவதாகச் சபதம் செய்திருக்கிறாரம்மா......... அதற்கான வைத்தியச் செலவிற்குப் பணம் மட்டும் ஆயிரம் வேண்டுமாம். அந்த ஆயிரமும் அவள் வைத்தியத்திற்காக மட்டுமே. அவருக்கெனப் பைசா தேவையில்லையாம்......' என்றான்.

அவன் யோசனையை நான் ஏற்பதாக இல்லை. 'போதுமப்பா உன் யோசனை. இருக்கிற பணத்தையும் விரயமாக்கிவிட்டு அவளைத் தெருவோடு நிறுத்த உத்தேசமா?' என்று வெடுக்கெனப் பேசினேன்.

'மால்தி விஷயத்தில் உனக்கிருக்கும் அக்கறை எனக்கு இல்லையா அம்மா. நீ பெற்றவளானல் நான் கூடப் பிறந்தவன். எனக்கும் ரத்தப் பாசமுண்டு.

'அவளுக்குப் பார்வை திரும்பினாலும் திரும்பா விட்டாலும் அவளையே மணந்து கொள்ளுகிறேன்' என்று டாக்டர் உறுதி கூறிய பிறகே புறப்பட்டு வந்தேன். இப்பொழுது என்ன சொல்லுகிறாய்' என்று கேட்கவும் செயலிழந்து நின்றேன்.

நான் செய்த பாவம் நிவர்த்தியாகி, என் மகள் பார்வை பெற்று மனிதரோடு சேர்ந்து வாழ்வதைப் பார்ப்பதைப் போன்ற ஆனந்தம் வேறென்ன இருக்க முடியும்? ஆனல் பார்வையும் பெற முடியாமல் பணமும் போய் விட்டால் பின் அவள் வாழ்வு......

இந்த இரண்டுக்குமிடையில் அகப்பட்டுத் தடுமாறி நின்ற என்னை, 'சரி என்று ஒரு வார்த்தை சொல்லம்மா. இன்றைக்கே தந்தி கொடுத்து விடுகிறேன்' என்று நெருக்கினான்.

'தன் முயற்சி பலிக்காமல் பணம் முழுவதும் அழிந்த பின் டாக்டரும் அவளைக் கைவிட்டு விட்டால் அவள் கதி......'

'மீண்டும் மீண்டும் அதையே கூறுகிறாயே அம்மா. ஆயிரம் செலவழித்துப் பெண்ணைக்கட்டிக்கொடுக்கிறாய். விவாகமான மறுமாதம் 'குருடி' என்று பெண்ணைத் தள்ளி வைத்து விடுகிறான். அப்பொழுது அவள் கதி? அதை நினைத்துப் பார்த்தாயா...?'

அவன்கூறிய பிறகு தான் அதைப்பற்றிய சிந்தனை ஓடியது. அவன் பேச்சு ஒப்புக்கொள்ளக் கூடியது தான், அவன் யோசனைக்குப் படிந்தேன்,

* * *

பின்னும் ஒருவாரத்தில் டாக்டர் வந்து சேர்ந்தார். சின்னஞ்சிறிய வயதானாலும் அநுபவமும் நம்பிக்கையும் நிறைந்த அவர் பார்வை என் மனதில் தெம்பை ஊட்டியது. டாக்டர் ராமச்சந்திரன் வைத்தியம் தொடங்கும் முன் என்னுடைய ஆசீர்வாதத்தை வேண்டி நின்ற போது என் உள்ளம் புளங்காகிதம் அடைந்தது. பின்னும் சிலமாதத்தில் அவரும் மாலதியும் மாலையும் கழுத்துமாக ஆசீர்வாதத்திற்கு நிற்கப்போகும் காட்சி மனக்கண் முன் தோன்றி ஆனந்தக் கடலில் மூழ்கடித்துத் திக்குமுக்காடச் செய்தது.

வைத்தியம் தொடங்கியது. விளையாட்டுப் போல் நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன.வைத்தியம் செய்யும் அறையில் டாக்டர் ராமச்சந்திரனையும் என் பெரிய மகளையும் தவிர யாரையும் செல்லவிடுவதில்லை. என்னைக் கூட அவளைப் பார்க்கவோ பேசவோகூடாதென்று விதித்திருந்தார்கள். பெற்ற பாசத்திஞல் ஏதாவது எக்கச்சக்கமாக நடந்துகொண்டுவிடுவேனும். வைத்திய முறை தவறி விடுமாம். எப்படியோ என் மகள் பார்வை பெற்றால் போதும். எனக்கு மோக்ஷ லோக சாம்ராஜ்யமே கிட்டியது போலத்தான்.

நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன. பணம் தண்ணீராய்க் கரைந்து கொண்டிருந்தது. என் மகனும் டாக்டருமாக என்ன சதிசெய்யக் காத்திருக்கிறார்களோ என்கிற திகில்வேறு இடையிடையே தோன்றி என்னை வாட்டி எடுக்கும்.

பல நாட்களாக என் மகளிருந்த அறையின் வெளிப் புறத்தே அமர்ந்து நெடுமூச்சு விட்டுக் கொண்டிருந்த என்னை, 'அம்மா' என்ற அன்புக் குரல் உள்ளே அழைத்தது. 'யாரது, மாலதியா வரலாமா? என்று குரல் கொடுத்துக் கொண்டே அறைப்பக்கம் விரைந்தேன்.

'ஆமாம் நான் நினைக்காத — நினைக்கமுடியாத பேறு பெற்றுவிட்டேன் அம்மா. எனது முதல் திருஷ்டி உங்கள் ஆசீர்வாதத்தோடு உதயமாக வேண்டுமென்பதற்காகத்தான் உங்களை இங்கு வரவழைத்தேன்' என்று கூறி என்னை நமஸ்கரிக்க எழுந்தாள்.

'கண்ணைத் திறந்து விடட்டுமா மாலதி' என்று கேட்டபடியே கட்டை அவிழ்த்தார் டாக்டர்.

'ஒன்றுமே தெரியவில்லையே அம்மா' என்ற மகளின் தீனக் குரலைத்தான் கேட்க முடிந்தது. அந்தக் கணத்தில் என் உள்ளம் துடித்த துடிப்பை என்னவென்று வர்ணிப்பது?

'பணமும்போய் பார்வையுமில்லையே. இனி அவள் கதி......... இந் நிலையில் டாக்டரும் கைவிட்டுவிட்டால்......... டாக்டரிருக்கும் திசையில் திரும்பினேன். நான் நினைத்தபடியே பெட்டி படுக்கைகளை எடுத்துவைத்துக்கொண்டு புறப்பட்டு நின்றவர்,

'நான் வரட்டுமா' என்ற கேள்வியை வீசிவிட்டு என் பதிலைக்கூட எதிர்பாராதவர் போலப் புறப்படத் தயாராய் நின்றார். அந்த க்ஷணமே பூமி வெடித்து நான் அப்படியே புதைந்துவிடக் கூடாதா என்றிருந்தது.

பார்வை திரும்பவில்லை என்று தெரிந்ததும் டாக்டரும் கைவிட்டுப் புறப்பட்டுவிட்டார். இனி என் மகளின் கதி......... என் தலை சுற்றியது. மகனின் பேச்சை நம்பி மதியைக் கடன் கொடுத்தோமே என்று உள்ளம் துடித்தேன்.

என்னவோ வீராப்பு வீசினாயே, இப்போ நடந்ததென்ன என்று கேட்க என் மகனை நோக்கினேன்.

'கலியாண ஏற்பாடுகளைக் கவனிக்கப் புறப்பட்டுப் போகும் மாப்பிள்ளை உன் அனுமதி வேண்டி நின்றால் வாயே திறக்கவில்லையே அம்மா' என்று மகன் கூறவும் ஒன்றும் தெரியாமல் விழித்தேன்.

'பெரியம்மா, அதற்குள் என்னைப்பற்றித் தவறாக எண்ணத் தொடங்கிவிட்டார்கள். எல்லாம் இந்த மாலதியால் வந்த வினைதான்' என்று கூறி, குறும்பாகச் சிரித்தார் டாக்டர்.

'நான் என்ன செய்தேனாம். அண்ணாவும் நீங்களும் சொன்னபடி நடந்து கொண்டதற்காகப் பழியை என்மீது சுமத்தவேண்டுமா?'

அவர்கள் பேச்சின் அர்த்தம் புரியாமல் விழித்தேன்.

'பல வருஷங்களாக அவர்கள் அனுபவித்த வேதனை போதும். இனிமேலும் விளையாட வேண்டாம். மாலதி, கண்ணைத் திறந்துபார்.' என்று ராமச்சந்திரன் கூறவும் மாலதியின் பக்கம் திரும்பினேன்.

'அம்மா என்னைப் பாருங்கள். உங்கள் உயரிய அன்பினாலும் ஆசீர்வாதத்தினாலும் பார்வையைப் பெற்றுவிட்டேன் அம்மா.' என்று கூறி என் பாதங்களில் நமஸ்கரித்த மாலதியை தூக்கி நிறுத்தி அணைத்துக்கொண்டேன். அந்த க்ஷணம்தான் நான் ஜன்மமெடுத்ததின் பயனை அனுபவிப்பதைப் போன்ற உணர்ச்சி அடைந்தேன். பேச நாஎழமுடியாத நிலையில் கண்ணீராக நன்றி புறப்பட்டது.

'என் ஆசீர்வாதத்தால் நீ பார்வை அடைந்துவிடவில்லை அம்மா. டாக்டரின் உண்மை உழைப்பினாலும் விடாத முயற்சியினாலுமே ஒளியைப் பெற்றாய். உன் நன்றி அவருக்குத்தான் உரித்தாகும்' என்று உணர்ச்சியோடு கூறினேன்.

'அம்மா இனிமேலாவது குருட்டுப் பெண் என்று மாலதிக்கு மட்டும் ஓரவஞ்சனையாக எதுவும் செய்யமாட்டாயே' என்று மகன் வேடிக்கையாய்க் கூறவும் என் மனம் என் நிலையைப் புரிந்து கொள்ளத் தொடங்கியது.

'கையிலிருந்த பணமெல்லாம் காலியாகி வெறும் மனுஷியாகிவிட்ட நான் இனி எங்கிருந்து என்ன செய்யப் போகிறேன் அப்பா' என்று கூறிய என் வார்த்தைகளில் ஏக்கமும் தொக்கி நின்றது.

'விசனம் வேண்டாம் அம்மா. உனது ஆசீர்வாதமும் மாலதியின் பார்வையுமாகச் சேர்ந்து டாக்டரைப் பணத்தால் உயர்த்திவிடும் பாரேன்' என்று கூறிய அவன் பேச்சில் இனிமை நிறைந்து நின்றது, அந்நிமிஷம் என் மனதில் பலவருஷங்களாகக் காணாத – கண்டிராத இன்பமும் நிம்மதியும் நிறைந்து வழிவதை உணர்ந்து மெய்மறந்த நிலையை அடைந்தேன்.



(அட்டைப் படம்)

# 'மிஸ் இந்தியா' 'தாஜ் மஹாலி'ல் நடிப்பார்

பரத நாட்டியத்தில் தேர்ச்சி பெற்றிருப்ப வர்களுக்கு இங்கிலீஷ் படங்களில் நடிக் கச் சற்று யோகமிருப்பதாகத் தெரிகிறது. அடையாறு கலா க்ஷேத்திரத்தில் நாட்டியம் பயின்ற 'ஸ்ரீமதி ராதா ஸ்ரீராம்' 'The River' என்னும் அமெரிக்கக் கலர் படத்தில் முக் கிய பாகமேந்தி நடித்தும் ஆடியும் இருப் பதை முன்னமே எழுதியிருக்கிறேன். இப் பொழுது பந்தநல்லூர் சொக்கலிங்கம் பிள்ளை அவர்களின் சிஷ்யையும், 1952ஆம் வருஷத்தில் 'மிஸ் இந்தியா' வாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட வருமான ஸ்ரீமதி இந்திராணி ரஹ்மான் பிரபல ஆங்கில படமுதலாளி அலெக்ஸாண்டர் கோர்டா என்பவர் எடுக்க விருக்கும் புதுமுறை கன பரிமாண படமான "தாஜ்மஹாலில்" ஒரு முக்கிய பாகத்தில் நடிப்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்ப தாகத் தெரிகிறது. இப்படத்தில் அவர் நாட்டியமும் ஆடுவார் என்று கேள்விப்படு கிறேன். ஸ்ரீமதி இந்திராணி "காவேரி" வாசகர்களுக்குப் புதுவருஷ வாழ்த்துக்களு டன் அனுப்பியிருக்கும் தம் படம் இங்கு அட்டையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீமதி இந்திராணி சுய வாழ்வில் மிக வும் சங்கோஜமும், அடக்கமுமாக நடந்து கொள்ளும் சுபாவம் உள்ளவர், பிரபல அமெரிக்க நாட்டியக்காரியான ராகினிதேவி யின் ஒரே புதல்வி. இந்திய கவர்ண்மென்ட் டாரின் கட்டிட சாஸ்திர நிபுணரான ஸ்ரீ ரஹ்மான் என்பவரை மணந்திருக்கிறுர், ஐந்து வயதில் அவருக்கு ஒரு பெண் குழந்தையும் இருக்கிறது. பந்தநல்லூர் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்களிடமும், தம் குருவான பந்தநல்லூர் சொக்கலிங்கம் பிள்ளையவர்களிடமும் அவருக்கு அபாரமான பக்தி. ஸ்ரீமதி இந்திராணி தற்சமயம் டில்லி யில்இருந்தாலும் தென்னிந்தியாவின்மீது மிக வும் பற்றுதல் உடையவர். அவர் தம்மை ஒரு தென்னிந்திய ஸ்திரீயாகவே கருதுகிறுர்.

இவ்விடத்தில் கனபரிமாண படங்கள் என் றுல் என்ன என்று குறிப்பிடுவது தகும் என நினைக்கிறேன். நாம் சாதாரணமாக இப் பொழுது வெள்ளித் திரையில் காண்பது நீளம், அகலம் என்ற இரண்டு பரிமாணங் கள் கொண்ட படங்களே ஆகும். இப் புது முறைப்படங்களில் மூன்று பரிமாணங்களும், அதாவது நீள, அகலத்துடன் கன பரிமாண மும் தெரியும். நம் கண் முன் வஸ்துக்கள் எப் படி தென்படுகின்றனவோ அதே மாதிரி திரையிலும் பார்க்கலாம்.

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் இக் கனபரிமாணமான படங்களை எடுப்பதில் செலவும், சிரமமும் அதிகம். படப் பிடிப்பில் வெவ்வேறு முறைகளும் இருக்கின்றன. ஒரு முறைப்படி எடுக்கப்பட்டபடத்தை, தியேட் டரில் இரண்டு புரொஜக்டர்கள் வைத்துக் காட்டவேண்டும். சினிமா பார்ப்பவர்களும் ஒருவிதமான கண்ணுடி போட்டுக்கொண்டு பார்க்கவேண்டும். இன்னெரு முறையில் பார்ப்பவர்களுக்குக் கண்ணுடி வேண்டாம், ஆனுல் பல புரொஜக்டர்களை உபயோகிக்க வேண்டியதுடன்திரையும் அரை வட்ட வடி வமாக இருக்கவேண்டும், ஊமைப் படங்கள் போய், பேசும் படங்கள் வந்த காலத்தில் ஏற் பட்ட புரட்சிபோல் கனபரிமாண படங்க ளும் பட உலகில் ஒரு பெரிய புரட்சியை ஏற் படுத்தும் என்று எதிர்பார்க்கப்படுகிறது,

தொடர் கதை

# நீரோட்டம்

**தி. சேஷாத்திரி**

ரெங்கநாதன் மூன்றும் வகுப்பு டிக்கட் வாங்கிக்கொண்டு வண்டியில் உட்கார்ந்தான். ஏறின இடத்திலேயே மேலே உள்ள பலகை காலியாயிருந்தபடியால் அதில் தன்னுடைய ஜமக்காளத்தை விரித்துப் போட்டான். அதன் பக்கத்தில் தன்னுடைய தோல் பையை வைத்துவிட்டுக் கீழே உட்கார்ந்தான். வந்திருந்த ஒன்றிரண்டு நண்பர்கள் விடை பெற்றுக்கொண்டு சென்றனர். வண்டியும் புறப்பட்டது. புறப்படும் சமயம் யாரோ ஒருவர் வந்து ஏறினார். வண்டிக்குள் உள்ளவர் ஒருவர் இங்கே இடமில்லை ஐயா என்று கதவைத் திறக்கமுடியாமல் தடங்கல் செய்தார்.

ரெங்கநாதனுக்குத் தாளவில்லை. 'ஐயா வண்டி புறப்பட்டுவிட்டது. இந்தச் சமயமா நம்முடைய பிடிவாதத்தைக் காட்டுகிறது,' என்று கேட்டுக்கொண்டே எழுந்து கதவைத் திறந்துவிட்டான்!

வந்தவர் செய்நன்றி நிறைந்த கண்களுடன் உள்ளே ஒரு மூட்டையைத் தள்ளிவிட்டு ஏறிவிட்டார். கார்டும் அதைப் பார்த்துவிட்டு, 'கொஞ்ச நேரம் முன்னமேயே வரக்கூடாதா?' என்று கேட்டுக்கொண்டே தம் வண்டியில் ஏறி நின்று பச்சைக் கொடியைக் காட்டினார். வண்டி கைகாட்டி மரம் தாண்டிவிட்டது. கண்டம் தாண்டியவன் விடும் பெருமூச்சுப் போல ஓர் ஊதல் ஊதிவிட்டு, எஞ்சின் வண்டியை இழுத்துக்கொண்டு அலறி ஓட ஆரம்பித்தது. ஏதோ பெண்ணைப் பிறரறியாமல் இழுத்துக்கொண்டு ஓடும் காதலன்போல்.

உள்ளே வந்தவர் அதுவரையில் நின்றார். பார்ப்பதற்கு மிகவும் இளைத்தவராகக் காணப்பட்டார். முகம் மயிர் அடர்ந்து வெகுநாளாகக் கத்தியையே காணாததுபோல் இருந்தது.

அவரை வாருங்கள் என்று அழைத்தான் ரெங்கநாதன்.

அவர் இவன் உட்கார்ந்திருந்த பலகைக்கு எதிர் பலகையில் உட்காரப் போனார்.

முதலில் தடுத்த அந்த ஆசாமி 'ஏன் உங்கள் பலகையிலேயே உட்கார வைத்துக் கொள்ளுங்களேன்!' என்று தம் எரிச்சலைக் கக்கினார்.

'உட்கார வைக்கிறேன்; இந்தப் பலகையில் ஏற்கனவே ஏழு பேர் இருக்கிறார்கள்; உங்கள் பலகையில் ஆறு பேர் தானே இருக்கிறார்கள்; என்று பார்த்தேன். அதனால் என்ன நான் மேலே ஏறிப் படுத்துக்கொள்கிறேன்!' என்று ஏறப் போனான்.

அதற்குள் எதிர்பலகையில் உட்கார்ந்திருந்த மற்றொருவர் எழுந்திருந்து, 'வேண்டாம். நீங்கள் 5 மணிக்கே மேலே உட்கார வேண்டாம். நான் அடுத்த ஸ்டேஷனில் இறங்கிவிடுவேன். அவர் உட்காரட்டும், என்று எழுந்திருந்தார். "நீங்கள் எழுந்திருக்க வேண்டாம!" என்றார் வந்தவர்.

கடைசியில் உபசாரம் செய்து அவரை உட்கார்த்திவிட்டனர்.

பிறகு ரெங்கநாதன் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தான்.

'நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?'

'அவர் நிஜம் சொல்வதா வேண்டாமா' என்று யோசித்தார். பிறகு 'இப்பொழுது திருவண்ணாமலையிலிருந்து' என்றார்.

'அப்படி என்றால்?.........'

'விடமாட்டீர்கள்! உண்மையைச் சொல்லவும் பழகிவிட்டேன். சொல்லிவிட்டு உங்கள் வெறுப்பு ஏற்பட்டாலும் ஏற்றுக்கொள்ள வேண்டியது தான். நான் வேலூர் ஜெயிலிலிருந்து காலையில் விடுபட்டு வருகிறேன். வழியில் அருணாசலேசுவரனைத் தரிசிக்க இறங்கினேன்................'

ஜெயிலிலிருந்தா? ஏக காலத்தில் எல்லோரும் கூச்சலிட்டனர்.

ரெங்கநாதன் 'எந்த ஊருக்குப் போகிறீர்கள்?' என்றான்.

நான் என் சொந்த ஊர் கடலூருக்குப் போகிறேன்.

கடலூரா? நீங்கள் கடலூர்.........? என்றாரம்பித்தான் ரெங்கநாதன்.

முதலில் தடுத்தவர், 'ரத்தினமா' என்று முடித்தார்.

'ஆம். அவனே தான் ........., என்று பதில் சொன்ன ரத்தினம் 'இது நான்காம் தடவை சிறைவாசம்!' என்ருர்.

முதலில் தடுத்தவர் எழுந்திருந்து நின்று 'என்னை மன்னிக்க வேண்டும்!' என்ருர்.

'மன்னிப்பு என்ன? ரயிலில் இது ஒன்றும் இயற்கைக்கு விரோதம் இல்லையே. ரயிலில் இப்படி செய்யாது போனுல் தான் பிசகு.........'

'இனி இந்தப் பிசகைச் செய்யமாட்டேன்.'

சந்தோஷம். உள்ளபடி நம்மிடையே ஊறிப் போன இந்த நடவடிக்கைகள் தான் என்னுடைய மனமாறுதலுக்குக் காரணம்! என்று நிறுத்திஞர்.

ரத்தினம் காங்கிரஸ்காரர் என்று மாகாணம் பூராவும் தெரியும், மஹாத்துமா காந்தி இருந்த காலத்தில் அவருக்கு இவரிடமுள்ள கௌரவத்தை அறியாத ஆளே இல்லை. பிறகு அவர் காங்கிரஸைவிட்டு வேறு கட்சியில் சேர்ந்த போது ஜனங்கள் அதிசயித்தார்கள். பலர் ரத்தினமே கட்சிவிட்டால், கட்சி உளுத்துப் போயிருக்க வேண்டும் என்று எண்ணிஞர்கள். எவ்வளவு மனக்கசப்பு ஏற்பட்டிருநதால் அவர், தாம் வியர்வையையும் ரத்தத்தையும் ஊற்றி வளர்த்த கட்சியை விட்டிருப்பார்! என்று யோசிக்காதவர் இல்லை.

ஆகவே மீண்டும் ஒரு மனமாற்றத்தைச் சொன்னவுடன் எல்லோரும் ஆவலுடன் அவரைக் கேட்டனர். ரெங்கநாதன் காதுகளைத் தீட்டிக் கொண்டான். கண்களும் காதுகளாகிவிட்டனவோ என்று தோன்றிற்று.

ரத்தினம் சொன்னுர்:

மஹாத்துமா சொன்னதைக் கேட்டு மஹா பலம் பெற்ற அந்தக் கட்சி உருப்படாமல் போயிற்ருே? எனக்கு மனம் தாளவில்லை. நம் நாட்டில் வியவசாயி நிலை மாறவில்லை. தொழிலாளி நிலைமை முன்னேறவில்லை. பணக்காரர் மனம் மாறக் காணும். இந்த நிலையில் காங்கிரஸ்காரர் மந்திரி பதவிக்குப்போடும் சண்டையைக் கண்டதும் எனக்கு வெறுப்பு ஏற்பட்டது. காந்தி அவர்கள் உயிருடன் இருந்தால் அந்தக் கட்சியை விட்டிருக்கமாட்டேன். அவசரத்தில் வேறு கட்சியில் சேர்ந்து கலவரம் செய்து ஜெயிலுக்குப் போனேன். அங்கே சென்று தனியாய் ஜெயிலில் அமர்ந்ததும்தான் நான் செய்த தவறு தெரியவந்தது..."

'எப்படி தவறு என்று நினைக்கிறீர்கள்?'

"நம் ஜனங்களில் அதிகப் பக்ஷமான பேர் அறிவு இல்லாதவர்களாயிருக்கிருர்கள். எந்த விஷயங்களைச் சொன்னுல் அறிவுள்ள மக்களிடையே கட்சி வளராதோ அந்த விஷயங்களையே சொல்லி, கட்சிகள் வளர்கின்றன என்ருல் ஜனங்களுடைய பேதை நிலையை என்ன செய்வது? அந்த நிலையைப் போக்க முற்படாமல் அதையே தங்கள் கட்சியை வளர்க்க உபயோகப்படுத்துகிருர்கள். சொல்லி வளராத இடத்தில் பயமுறுத்துக் காரியத்தைச் சாதித்துக்கொள்கிருர்கள். கேவலம் பேச்சை நம்பி மிகவும் சாதாரணமான தேவைகளும் வசதிகளும் அதிகரிக்கும் என்று நம்பும் மக்களாகட்டும், அல்லது பயத்துக்குக் கட்டுப்படும் மக்களாகட்டும் அவர்களை வஞ்சிப்பது சுலபம். நம் கட்சிக்கு இழுத்துக்கொள்வதும் சுலபம்.'

'ஆனுல், மறுபடியும் நீங்கள் காங்கிரஸில் சேர்வீர்களா?'

'இல்லை, காங்கிரஸிலும் சேரப்போவதில்லை. சில திட்டங்களுடன் வெளியேறியிருக்கிறேன். கிராமத்தில் சென்று தங்கி, ஒரு கிராமத்தை எல்லாவிதத்திலும் முன்னேற்ற முயற்சி செய்யப்போகிறேன். அதில் யார் உதவி செய்தாலும் ஏற்றுக்கொள்வேன்...'

'நம் நாட்டில் எந்தக்கட்சி வலியுறும்?'

'இனி அந்தப் பேச்சு எனக்கு வேண்டாம். அதிகாரத்தைக் கைப்பற்றி எந்தக் கட்சி அரசாட்சி செய்தாலும் சரிதான். ஒரு பகுதியினரைத் தொலைத்துவிடுவது என்பது ஆகாது. பணக்காரனும் இந்தியவாசி பிராமணனும் இந்தியவாசிதான். எல்லோரும் வாழவேண்டும்...'

'பணக்காரன் பணக்காரனுகவே வாழ வேண்டுமா? நம் நாட்டுப் பணக்காரன் குணம் தெரியாது உங்களுக்கு. அன்றுமுதல் பணத்தை வெறுத்தவன் வாழும் நாடு நம்முடையது. அரசாங்கத்தை உதறும் புத்தனை இங்கே தான் காணலாம். அரசனே துறவியாக இருந்ததாகச் சொல்வது கதை இல்லை. ராஜாக்கள் எல்லாம் மனம் மாறும் நிலைமையை நாம் பார்க்கிருேம். ஆகவே பணக்காரன் தன் பணத்தை ஊர் நன்மைக்குச் செலவழித்தால் அதில் ஒன்றும் கெடுதல் இல்லை. 'பண மூட்டை' என்று திரித்துக் கூறுவதனுல் நாம் ஏமாறக் கூடாது. இன்று கொஞ்சம் காலம் மாறிவிட்டது என்பதனுல் இந்தியர் பண்பாட்டை மறக்க முடியுமா? இளங்கோ அடிகளைத் தமிழ் நாடு மறக்குமா? மதுரையில் மீனுக்ஷி அம்மன் கோயிலைப் பார்க்கும் போது அதைக் கட்டிய போது எவ்வளவு பேர் சாப்பாட்டுக்கு வழி செய்யப்பட்டிருக்கும் என்று நம் மனக்கண் முன் பலநாளைய ஒரு கதையே மீண்டும் உயிர்பெற்று எழுந்து நடைபெற வில்லையா? எதற்குப் பயப்படவேண்டும் பணக்காரர்களைப்பற்றி? இந்தப் பிரசாரம் எல்லாம் மற்றத்தேசக் கதைகளைப் படித்துவிட்டு அங்கே நடந்ததெல்லாம் இங்கே நடக்கவேண்டும் என்கிருர்கள். ஸ்டாலின் இரட்டை வாழ்வு வாழ்ந்தால் நாமும் வாழவேண்டுமா?...

'அப்படியானால் அஹிம்ஸை முறையிலேயே நாடு சுபிக்ஷம் அடையும் என்று நம்புகிறீர்களா? பணக்காரர் சுரண்டல் நின்றுவிடுமா என்ன?'

'அந்த நம்பிக்கையுடன்தான் வந்துவிட்டேன், காங்கிரஸே தன் நிலையை உணர்ந்து நல்வழி வரும். அப்பொழுது அதுவே காந்திஜியின் கனவை நனவாக்கும்; அதற்குப் பிரயத்தினமாவது செய்யும். அப்படி அதுசெய்யாது போனால் நான் இனி அதற்காக வருந்தப்போவதில்லை. நான் ஒரு கிராமத்தையாவது என் வாழ்நாளில் சுரண்டலற்ற சமுதாயம் கொண்டதாக மாற்றி விட்டு மறைவேன்!'

ரத்தினம் பேச்சில் தொழில் நடத்திக் காட்டும் தைரியம் தொனித்தது. அவர் கண்களில் நம்பிக்கை ஒளி வீசிற்று.

வண்டி ஓடியும் நின்றும் தன் வழியைத் தொலைத்தது.

விழுப்புரம் வந்ததும் ரத்தனத்திடம் ரெங்கநாதன நானும் உங்கள் வண்டியில் ஏறுகிறேன் என்றான். வாருங்கள், சற்று இருங்கள். என் மனைவியும் இங்கே வந்துசேருவாள். அவளையும் அழைத்துச் செல்லலாம்! என்றார் ரத்தினம்.

வண்டி நின்றதும் ஒரே முகச் சாயலுள்ள ஒரு ஆணும் பெண்ணும் ரத்தினத்தை நோக்கி ஓடி வந்தார்கள்.

ரத்தினம் இறங்கியதும் அந்தப் பெண்மணி ஓடிவந்தாள். நெருங்கியதும் ரத்தினம் கையை நீட்டினார் அந்தப் பெண்மணி உடலிலிருந்த ஆவல் முழுவதையும் கண்களிலே திரட்டி அந்தப் பார்வையை அவர் பாதத்திலே சமர்ப்பித்து அருகே நின்றாள்.

'இவள்தான் என் மனைவி; இதோ அவள் அண்ணன். அவர் இங்கே ரயிலில் வேலையாக இருக்கிறார். இவள் இவ்வளவு நாள் இங்கேதான் இருந்தாள். சர்க்கார் இவர்களையும் தொந்தரவு செய்திருக்கிறார்கள்...'

'சரி, வாரும் மாப்பிள்ளை. அந்தப் பிளாட் பாரத்திற்குப் போகலாம்.' என்றார் ரத்தினத்தின் மைத்துனன்.

நால்வரும் பிளாட் பாரத்தில் பட்டணம் போகும் வண்டி வரும் புறமாகச் சென்றனர்.

'ஆமாம், முன்னாடியே எழுதக்கூடாதா? இப்படித் தந்தியா அடிக்கவேண்டும்?' என்றாள் குறையுடன் ரத்தினத்தின் மனைவி.

'எதற்கு? ஊர் கூட்டவா?'

'இல்லை சொன்னேன், நான் வேலூருக்கே வந்திருப்பேனே!'

'கூட்டமும் கூடாது. இப்பொழுது எனக்குக் காங்கிரஸும் விரோதிகள்; மற்றக் கட்சிகாரர்

அந்தப் பெண்மணி ஓடிவந்தாள். நெருங்கியதும் ரத்தினம் கையை நீட்டினார்.



களுக்கு நான் துரோகி. அதற்காக நான் பயப் படவில்லை...

இன்னம் என்னன்னவோ பேசினார்கள். ரெங்க நாதன் கேட்டுக்கொண்டே நின்றான். அவனுக் குப் பெண்ணின் மற்றொரு உருவம் வெளியாகிக் கொண்டிருந்தது.

வண்டி வந்தது. விழுப்புரத்தில் ஜனங்கள் இறங்கி, காலியான ஒரு வண்டியில் மூவரும் ஏறிக் கொண்டனர்.

ரெங்கநாதன் ஒரு பெஞ்சியில் படுக்கையை விரித்தான். எதிர்பெஞ்சில் தம்பதிகள் அமர்ந் தனர். சுமார் நாற்பது வயதும் மூப்பத்தைந்து வயதும் ஆன அந்தத் தம்பதிகள்கூட முதலில் அப்பொழுதே மணம் ஆன தம்பதிகள் காட்டும் தயக்கத்தையும் நாணத்தையும் காட்டினர். பிறகு ரெங்கநாதன் இருப்பதையும் மறந்து தாராளமாகப் பேசிக்கொண்டிருந்தனர்.

'உனக்கு ரொம்ப தீங்கிழைத்துவிட்டேன் அல் லவா?' என்றார் ரத்தினம்.

'இல்லை. நீங்கள் இந்தியப் பெண்களை அறியவே இல்லை.'

'ஏன்?'

'கணவன் மனைவிக்கு என்றுமே தீங்கிழைக்க முடியாது. மனைவிதான் கணவனுக்கு இழைக்க முடியும்'!

'அது எப்படி?'

'மனைவி கணவன் கொள்கைக்கு உதவியாக வேண்டும், தனக்கென்று கொள்கை வைத்துக் கொண்டு அவனுடன் விரோதம் செய்தால் அது அவனுக்கு இழைத்த தீங்காகும்,'

'அவனுக்கு அவளிடம் கடமை இல்லையா?'

'என்ன கடமை? அவள்தான் அவன் பகுதியா யிற்றே. சாப்பாட்டையும் உடையையுமா சொல் கிறீர்கள்?'

'இல்லை. அவள் மனதையும் பற்றி.........!'

'அவளுக்கு மனது என்று ஒன்றும் இருக்கக் கூடாது. அவள் அவனுக்கு ஒரு தங்குமிடம்.'

'அதாவது?'

'என்றும் அவனுக்கு அது தயாராய் வாயில் திறந்து நிற்கவேண்டும். களைப்படைந்து வந்த அவனை எங்கே சென்று வந்தாய் என்று கேட்கக் கூடாது.'

'அவன் கெடுதலான காரியங்கள் செய்யும் போது கூடவா?'

'எடுத்துச் சொல்லலாம். அதற்காக அவனை வெளியேற்றவோ, வரவேற்பதை மறுக்கவோ, ஒத்துழையாமை காட்டவோ கூடாது.'

'இரண்டு கக்ஷிகளில் சேர்ந்த கணவன் மனைவி யைப் பார்க்கிறோமே!'

'நீங்களே முன்னுக்குப் பின் முரணாகச் சொல் கிறீர்கள்.'

'ஏது'

'கணவன் மனைவி என்ற ரீதியில் முரண்பாடே கிடையாது. இருவரும் வேறு வேறு வழியாகச் சென்றாலும் இருவரும் சந்திக்கும் இடத்தில் வீடு ஆரம்பமாகிறது. அங்கே பெண்தான் வீட்டுக் காரி. கணவன் விருந்தாளி.'

'நிசமாகச் சொல்கிறேன், உனக்கு இவ் வளவு பெருந்தன்மை யில்லாது போனால் என் வாழ்வே பாழாகி இருக்கும். சமுத்திரத்தில் அலை யும் கப்பலுக்குக் கலங்கரை விளக்கம்போல் அழைக்கிறாய். தலைதெறிக்க மோதும் அலையின் அலறலையும் ஆட்டத்தையும் குறைத்துத் தலை யைத் தடவிக் கொடுத்துத் திருப்பி அனுப்பும் கரைபோல் என்னை நல்வழியில் திருப்புகிறாய்! நீ பிறந்த இடம்; உன் இன்ப வாழ்க்கை! எல் லாம்நினைத்து என் மனைவியான பிறகு நீ பட்ட பாட்டையும் நினைத்தால்.........'

ரத்தினம் கண்ணீர் உகுத்தார். உள்ளம் தழு தழுத்தது.

'சரி. சும்மா தூங்குங்கள். எப்பொழுது நல்ல தூக்கம் தூங்கினதோ?.........'

ரெங்கநாதன் கண்ணயர ஆரம்பித்தான். 'மனைவி கணவன் தர்மத்துக்கு உபகாரமாயிருப் பாளே தவிர அபகாரமே செய்யமாட்டாள். துறவியானவனுக்குக்கூட மனைவி சுச்ருஷை செய்வாளே தவிர அவன் துறவைக் கெடுக்க மாட்டாள்!

ரெங்கநாதன் ஒரு நிமிஷம் ரிஷிகளையும் யோகிகளையும் உண்மை தெரியாதவர்கள் என்று நினைத்தான். சை! இப்படி ஒரு உபயோகமான சாதனத்தை எறிந்துவிட்டுக் காடு சென்றார்களே! இந்த உயர்ந்த ஓர் உதவிதரும் சாதனத்தைப் பேய் என்றும் மாயை என்றும் சொன்னார்களே?

அந்த ஒரு நிமிஷத்தில்தான் நாமும் ஏன் மணக் கக்கூடாது என்று எண்ணினான். மதராஸில் தங்கத்து வீட்டுக்குத்தான் போவோமா என்றும் நிச்சயம் செய்தான். கண்களை அழுத்தின தூக் கம் அவன் எண்ணத்தையும் நிறமிழக்க வைத் தது. அவன் கண்ணயர்ந்தான்.

'ரத்தினத்திற்கு ஜே! என்ற கூச்சல் கேட்டு விழித்தான். ஒரு பெரும் கூட்டம் பிளாட்பாரத்

தில் கூடியிருந்தது. அதன் தலைமையில் பிரபல மந்திரியே நின்றுகொண்டிருந்தார்.

ரத்தினம் இறங்கிக்கொண்டே 'போய்விட்டு வருகிறேன்' என்று ரத்தினம் ரெங்கநாதனிடம் கை கூப்பினர். ரெங்கநாதன் எழுந்திருந்து நின்று ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும் என்றான். ரத்தினம் மனைவியும் ரெங்கநாதனுக்கு வணக்கம் செய்து விடை வேண்டினாள்.

ரெங்கநாதன் பார்த்தான்.

ரத்தினம் மந்திரியிடம் 'என்ன நீங்களே வந்திருக்கிறீகள்?' என்றார்.

'ரத்தினத்தை இன்று மீண்டும் பெற்றிருக்கிறது, நம்நாடு. நான் வந்ததுதானா பிரமாதம். பிரதம மந்திரியும் நாளை வருவார்!' என்றார்.

'மீண்டும் சேவை செய்கிறேன்!' என்றார் ரத்தினம்.

அதற்குமேல் ரெங்கநாதன் காதில் விழவில்லை. வெகுநேரம்வரை ஓடும் வண்டியிலிருந்து பார்த்துக்கொண்டேயிருந்தான். படுத்த பிறகும் ரத்தினத்தின் மனைவியின் முகமும் தோற்றமும் அவன் மறக்கக் கூடியதாயில்லை.

## பெண்ணும் பொறுமையும்

மதராஸில் தான்மேற்கொண்டுபோன வேலையைச் சீர்பெற முடித்துவிட்டுச் செவ்வாய் இரவு ரேடியோவில் பேசிவிட்டு, ரெங்கநாதன் திரும்பி வந்து கொண்டிருக்கும் போதே ரயிலில் அவனுக்கு ஒரு ஞாபகம் எழுந்தது. பாஸ்கரன் மனைவி அவனிடம் எப்படி நடந்து கொள்கிறாள் என்று தெரிய வேண்டும் என்று தோன்றிற்று.

பாஸ்கரன் மனைவிக்குத் தகுந்த கணவன் இல்லை என்று கேள்விப்பட்டிருந்தான். கஷ்டப்பட்டுக் கஷ்டத்தை உணர்ந்த அவன் மனைவியைக் கஷ்டப்படுத்தாமலிருப்பான் என்று எதிர்பார்க்கலாம். ஆனால் அவன் மனைவியைச் சந்தோஷமாக வைத்துக் கொள்வதில்லை என்று கேள்விப்பட்டிருந்தான்.

தனக்கு உரிமையான அன்பையும் பிறருக்குத் தந்துவிட்டு, தன்னிடம் கொடுமையாக நடந்து கொள்ளும் பதியினிடம் அந்தப் பெண் எவ்விதம் நடந்து கொள்கிறாள் என்று அறிய ரெங்கநாதன் ஆவல் கொண்டான்.

ரயிலிலிருந்து இறங்கி வீட்டுக்குச் சென்றதும் ஒரு சமாசாரம் காத்துக் கொண்டிருந்தது. அன்று பள்ளிக்கூடம் இல்லை என்று வீட்டிற்கே தகவல் வந்திருந்தது. செவ்வாய்க்கிழமையன்று கவர்னர் பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்டதாகவும் அதன் ஞாபகார்த்தமாக அன்று லீவு என்றும் வீட்டுக்கு ஆள் வந்து சொல்லிவிட்டுப் போயிருந்தானாம்.

ரெங்கநாதன் லீவு என்பதற்காகப் பள்ளிக்கூடத்தையே எட்டிப் பார்க்காமல் இருந்துவிடும் மனப்பாங்கு உடையவனல்ல. வருஷத்துக்கு ஏற்பட்டுள்ள 15 நாள் காஷுயல் லீவில் 5 நாட்கள் கூட முழுதாக அவன் எடுத்ததை ஒருவரும் அறியார். டிரெயினிங்குக்கு முன் இரண்டு வருஷம், ஆனபிறகு நான்கு வருஷங்கள் ஆக ஆறு வருஷ ஸர்வீஸில் அவன் மொத்தமாக ஐந்து நாள் லீவு எடுத்திருப்பான். பெருமைக்காக அல்ல. அவன் லீவு எடுப்பதை வெறுத்தான்.

இன்று அவன் லீவை வேறுவிதமாகச் செலவழிக்க எண்ணம் கொண்டான்.

'அம்மா. இன்று கீழ் ஊரணி போகப் போகிறேன்' என்றான் ஸ்நானம் முடிந்தவுடன்.

'எங்கே பாஸ்கரன் வீட்டிற்கா?'

'ஆமாம்!'

'மத்தியானத்துக்கு மேலே போகப்படாதோ? ராத்திரி பூராவும் ரயிலில் வந்தது.........!'

'இல்லை அம்மா. ரயிலில் எல்லாம் முன் போல இல்லை. நிரம்ப இடம் கிடைத்தது. தூங்கினேன். பாஸ்கரனையும் பார்த்துவிட்டு வர வேண்டும்.'

'சரி உன் இஷ்டம்!' என்றாள் தாய்.

ரெங்கநாதன் சுமார் பதினொரு மணிக்குக் கீழ் ஊரணி என்ற ஊருக்குப் போய்ச் சேர்ந்தான். ரெங்கநாதன் இருந்த நகரத்துக்கும் அந்தக் கிராமத்துக்கும் ஆறு மைல். ரெங்கநாதன் மப்பும் மந்தாரமுமாயிருந்ததால் நடந்தே போய் விட்டான்.

அவன் போன சமயம் பாஸ்கரன் வீட்டிலில்லை. வண்டியையும் காணோம்.

யோசித்துக் கொண்டே காம்பவுண்டுக் கதவைத் திறந்தவுடனேயே அங்கே விளையாடிக் கொண்டிருந்த பாஸ்கரன் பையன், 'ஓ' ரெங்கநாத மாமா வந்திருக்கிறாரம்மா! என்று கத்தினான்.

உடனே அருகில் வந்து, "மாமா வாருங்க! அப்பா எங்கேயோ போயிருக்கா, அம்மாவை அடிச்சுட்டுப் போயிட்டா! அம்மா அழுது கொண்டே படுத்துக் கொண்டிருக்காள்!' என்று சொல்லிக்கொண்டே அவன் கையைப் பிடித்தான். குழந்தைக்கு மூன்று வயது. துடியான குழந்தை. அவனுக்குப் பாஸ்கரன் ஜவாஹர் என்று பெயரிட்டிருந்தான்.

அதற்குள் பாஸ்கரன் மனைவி பங்கஜம் தலை மயிரை இரண்டு கையாலும் கோதி அமுக்கி விட்டுக்கொண்டே வந்தாள்.

'அசடு, மாமாவிடம் என்ன சொல்றே, உள்ளே கூப்பிடு மாமாவை!' என்றாள்.

குழந்தையும் ரெங்கநாதனும் ஏக காலத்தில் பங்கஜத்தின் முகத்தைப் பார்த்தனர்.

குழந்தை தாயினிடம் ஓடி நின்று கொண்டு 'அம்மா, உன்னை அப்பா அடித்தாரில்லையா? அதை மாமாவிடம் சொல்லிவிட்டேன்!' என்றான்.

'போடா, அசடு, ஏன் பொய் சொல்றே?' என்றாள். குழந்தை பொய் சொல்கிறானில்லை என்று நிச்சயமாகத் தெரிந்தது. அவள் உருவம் ஒரே செகண்டில் ரெங்கநாதன் இதயத்தில் பதிந்திருந்தது. கலங்கின கண்கள்; உதட்டி லிருந்து வெளியேற்றப்பட்ட பலவந்தச் சிரிப்பு. கன்னங்களில் சிவந்த விரலடையாளத் தடிப்பு, குழந்தையா பொய் சொல்கிறான்?

எதற்காக அடித்தானோ முரடன்?

இவனுக்கு இந்தக் கல்யாணம் எதற்கு? பங்கஜம் பெரிய வக்கீல் வீட்டுப் பெண். இவ் வளவு பொறுமையாயிருந்து என்ன தர்மத்தைக் காப்பாற்றுகிறாள் இவள்?

சட்டம்தான் இருக்கிறதே. பாஸ்கரனைத் தொலைத்துத் தலையை முழுகிவிட்டுத் தாயாரிடம் போகக்கூடாதோ? என்ன சுகத்தைக் கண்டு இந்த நரக வாழ்வு வாழ்கிறாள்?

ரெங்கநாதன் மனது எண்ணங்களில் தட்டுப் பட்டு இடறிவிழுந்து எழுந்து நடந்து கொண் டிருந்தது.

பங்கஜம், 'மாமாவை உள்ளேவந்து இருக்கச் சொல்லடா! அப்பா இதோ வந்துவிடுவார்!' என்றாள்.

ரெங்கநாதன் 'நாளை வருகிறேன்!' என்று சொல்லிக் கிளம்பினான்.

இதுவரை நாட்டுப்புறத்து மரியாதையைக் காப்பாற்றிய பங்கஜம், 'அதெல்லாம் கூடாது. வருஷக் கணக்காய் வராமலிருந்து இன்று வந்த உங்களை விரட்டிவிட்டால் அவர் சும்மா விட மாட்டார்! வாருங்கள்' என்றாள்,

சும்மா விடமாட்டார்! அதைச் சொல்லும் போதே அவள் குரல் தைன்யத்தை அடைந்தது ரெங்கநாதன் உள்ளம் பதைத்தது.

'இதேதடா சங்கடம்!' என்று எண்ணி உள்ளே சென்றான்.

கோபமடைந்து சென்றவன் எப்பொழுது வரு கிறானோ? எங்கே போனானோ? தவிர இந்த மாதிரி மனோபாவம் உள்ளவர்களை நம்புதல் கூடாது. சிலரிடம் மிகவும் கண்ணியமாக நடந்து கொள்ளுவார்கள்; சிலரிடம் பேய்த்தனம் காட்டு வார்கள். சிலசமயம் தேவதைபோல் நடந்து கொள்வார்கள்; சிலசமயம் அரக்கத்தனம் செய் வார்கள். காரணம் இருந்தாலும் கோபித்துக் கொள்வார்கள். தன்மேல் பிசகு இருந்தால் காரணமில்லாமலும் கூத்தாடுவார்கள்.

'ஏன், நான் இல்லாது போனபோது தங்க வைத்தாய்? என்றும் கேட்கலாம்; 'ஏன் விரட்டி விட்டாய்' என்று கேட்கும் குணம் வாய்ந்த அவன்.

எப்படியோ உள்ளே சென்று ரேழி ஹாலில் போடப்பட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான் ரெங்கநாதன்.



"மாமாவை உள்ளே வந்து இதோ வந்து

'நீங்கள் சாப்பிட்டு வந்திருப்பீர்கள்...?, என்று பங்கஜம் கேட்டாள். கணவனுக்கு உயிருக்குயிரான குடும்பத்துப் பையனை உபசரிப்பதில் அவளுக்கு ஒன்றும் சங்கோசம் இருக்க நியாயமில்லை. தவிர அவளுக்கு ரெங்கநாதனைவிட இரண்டு வயது கூடவே இருக்கும். வெகுநாளாகத் தந்தை வீட்டிலிருந்தவள், மாமனூர் செத்த பிறகுதான் இரண்டு வருஷமாகக் கிராமத்திலிருக்கிறாள்.

'ஆமாம், ஏன்? எனக்கு ஒன்றும் வேணடாம்?'

'இல்லை. அவரும் வந்துவிடுவார்......'

'எங்கேயாவது போய்த் தங்கி விட்டால்?'

'மாட்டார்!'

'சொல்லிச் சென்ருரு?'



இருக்கச்சொல்லடா அப்பா விடுவார் என்ருள்

'சொல்லிச் சென்ருல் நம்ப முடியாது....?'

அவள் முறுவல் செய்தாள்......

ரெங்கநாதன் முகம் மட்டும் கேள்விக்குறியைத் தாங்கி நின்றது, வாய் மூடி இருந்துவிட்டது.

'கோபித்துக்கொண்டு போயிருக்கிருர், வந்துவிடுவார்' என்று சொல்லிக்கொண்டே அவள் சமையலறைக்குப் போனுள்.

ரெங்கநாதன் பின்னுல் இருந்து பார்த்தான். அவள் இடுப்பில் அன்று வாங்கின புடவைகளுள் ஒன்று இருந்தது. நன்ருய்க் கவனித்தான். விலாசினி அவளுக்கென்று வாங்கச்சொன்ன புடவை இருந்தது.

ரெங்கநாதன் மனது புரள ஆரம்பித்தது.

உள்ளே பாத்திரங்கள் சத்தம் கேட்ட சமயம் வாசலில் குதிரைவண்டி வந்து நின்ற சத்தமும், கூடவே 'அப்பா வா இங்கே. மாமாகிட்ட சொல்லியிருக்கேன். இனிமேல் அம்மாவை அடிக்கமாட்டியே!' என்று கூச்சலிடும் ஜவாஹரின் சத்தமும் கேட்டன.

ரெங்கநாதன் வெளியே வந்தான்.

'ஹலோ ... ஏது' ஐயர்வாளை மதராஸில் பார்த்ததாகச் சொன்னுர்களே!'

'ஆமாம், இன்று காலையில் வந்தேன்!'

'வந்தவுடன் நம்ம வீட்டுக்கு விஜயம்? சரி சரி. அதுவும் நல்லதுக்குத்தான்! என்று சொன்ன பாஸகரன் ரெங்கநாதனை அப்படியே கட்டி இழுத்துக் கொண்டுபோய் நாற்காலியில் உட்கார வைத்தான்.

'ஏ பங்கஜம்!' என்று கூப்பிட்டான்.

'இதோ வந்துவிட்டேன்!' என்று அவளும் வந்தாள். இரண்டு சாரரிடத்திலும் நடந்த விஷயத்தைப்பற்றி வருத்தமோ கோபமோ இல்லை.

வந்தவுடனே அட சனியனே! என்ருன் பாஸ்கரன். பங்கஜம் கோபித்துக்கொள்ளவில்லை. ரெங்கநாதன் குரலில் கோபம் இருந்தது.

'மோரையைப் பார். அடிச்சு தழும்பு அப்படியே இருக்கு. அதோடே வந்துட்டயே என் சிநேகிதனைப் பார்க்க!' என்ருன் பாஸ்கரன்.

ரெங்கநாதன் துணிந்தான்: 'அது மன்னி குற்றமா?' என்ருன்!

'குற்றமா? இந்த வீட்டில் குற்றம் என்ற பேச்சே கிடையாது! என்று சிரித்தான் பாஸ்கரன்.

'அவள் குற்றமே செய்யமாட்டாள். நான் செய்கிறதற்குக் குற்றம் என்ற பெயரே கிடைக்காது.'

என்று சொன்ன அவனிடம் 'வெறும் வம்பு தானு? காரியம் உண்டா. எனக்கு உள்ளே வேலை இருக்கிறது!' என்ருள் பங்கஜம்.

'போ ராணி போ.வழக்கமாகக் கிடைக்கும் மன்னிப்புக் கிடைத்துவிட்டதா. மச்சினன் தர்பாரில் பிசகு பிசகாவே நின்றுவிட்டதா என்று பார்த்தேன்!' என்ருன் பாஸ்கரன்.

'அழகு தான் இருங்கள்!' என்று சொல்லிக் கொண்டே பங்கஜம் போய்விட்டாள் உள்ளே.

ரெங்கநாதன் ஆச்சரியத்தால் விம்மினுன்.

பாஸ்கரன் ஆரம்பித்தான்...... 'ஏதுடா இப்படி?'

'இன்று நான் வராமலிருக்கலாம்.........'

'போடா அசடு. என்று தான் நான் வாழ்ந்தேன். தினம் ஏதாவதொரு தகராறு தான்... ......'

'நான் கேட்கட்டுமா? இந்தக்குணம் உனக்கு எதுக்கு?'

'நானும் தான் யோசிக்கிறேன். அதுக்கும் இவள்தான் காரணம்!'

'சரிதான். இப்பொழுதும் அவள் மேல் தான் குற்றமா?'

'பிறகு என்னடா? ஒரு தடவையாவது கோபித்துக் கொண்டால் தானே. நான் பெரிய பயந்தாங்கொள்ளி. ஒரு தடவை அவள் ஏதாவது பயமுறுத்திஞல் நான் படிந்துவிடுவேன்!' என்ருன் பாஸ்கரன்,

ரெங்கநாதன் சொல்வது சரிதான்.

அவன் வாழ்வு அவ்வாறு அமைந்துவிட்டது. தந்தையும் சிறிய தாயும் அவன் மனதை நேரே வளர ஒட்டாமல் செய்துவிட்டார்கள். பயங்காளிகள் பயத்தை மறைக்க இப்படி ஓடுகிறவர்களை விரட்டுவதும் கட்டுப்பட்டவர்களைத் துன்புறுத்துவதும், அன்பு காட்டுபவர்களைக் கொடூரமாய் நடத்துவதும் இயற்கை.

'நான் அவளிடம் சொல்லிவிடட்டுமா?'

'சொல்லிப்பாரேன். அவள் தந்தையே சொல்லிப் பார்த்துட்டாரே. தாயார் மந்திரம் ஓதினுளே. அவள் என்ன சொல்கிருள் தெரியுமா?'

'என்ன?'

'அவர் குணம் குழந்தைக் குணம். அன்று முதல் தாயன்பைப் பார்க்காதவர். அவருக்கு மனைவி வேட்கை இல்லை. அதைத் தீர்க்க ஒருத்தி டவுனிலிருக்கிருள். தாயன்பு தான் வேண்டும். நான் வயதில் சிறியவளாயிருக்கிறதால் அடிக்கிருரே தவிர மற்றப்படி என்னிடம் அவர் குழந்தைபோல நடந்து கொள்கிருர்!' என்கிருள்.

அவன் மேலே சொன்னுன்:

'உள்ளபடி சொல்கிறேன் கேள். சிறிய காரியத்தில் கோபித்துக் கொள்கிறேன். என்னை அறியாமலே அடித்து விடுகிறேன், பிறகு பச்சாத்தாபப் படுகிறேன், அதற்கும் அவளிடம்தான் கோபம் கொள்கிறேன். என் தாய்போல என்னை அதட்டமாட்டேன் என்கிருள்?'

'கணவனை எப்படி அதட்டுவாள்?'

'நான் கணவனுக நடந்து கொள்ளும்போது சரி. முரட்டுப் பிள்ளையும் கணவனும் சேர்ந்தவன் போல நடக்கும் போதாவது அதட்டக் கூடாதா?'

ரெங்கநாதனுக்கு இந்தப் புதிர் புரியவில்லை. ஒன்றுமட்டும் நிச்சயம். 'நமக்குப் புரியாத ஒன்று பங்கஜத்துக்குப் புரிந்திருக்கிறது. அவள் அதை நன்கு அறிந்து பாஸ்கரன் வாழ்வை இன்பமயமாக்குகிருள்!'

அவனே சொன்னுன்:

'ரெங்கநாதா, ஒன்று சொல்லுகிறேன் கேள். விலாசினி இல்லாமல்கூட வாழ்ந்துவிடுவேன். இவள் இல்லாமல் என்னுல் ஒரு நிமிஷம்கூட இருக்க முடியாது!'

பங்கஜம் 'உள்ளே வருகிறீர்களா, இங்கே கொண்டு வரட்டுமா? என்று கேட்க வந்தாள்.

பாஸ்கரன்: பங்கஜம் உன்மைத்துனன் உன்னை ஒன்று கேட்க வேண்டும் என்கிருன்; என்ன என்று கேள்!'

'ஆமாம் மன்னி! இந்தப் பாஸ்கர அண்ணு குழந்தை மாதிரி நடந்து கொள்கிருனே, அதட்டிச் சரி செய்யக்கூடாதோ?'

'அந்தக் காலம் தாண்டி விட்டது. காலம் சென்று கொடுக்கும் மருந்து விஷமாகி விடும். அது கிடக்கு இங்கேயே இருங்கள், கொண்டு வந்து விடுகிறேன், என்று உள்ளே போய் விட்டாள். ரெங்கநாதனுக்கு எங்கோ ஒரு தீப ஒளி தென்பட்டதுபோல இருந்தது. வாஸ்தவம். அன்று தாயன்பில் தன் அசட்டுத்தனம் முரட்டுத்தனம் எல்லாவற்றையும் செவழித்திருந்தால், அவள் கடிதலுக்கு முன் எல்லாவற்றையும் உதறியிருந்தால். இன்று அவன் இப்படி இருக்கமாட்டான். வேண்டிக்கிடைக்காத ஒரு அன்பு இன்று இப்படி உருவம் எடுக்கிறது.

'தெரிந்தவள் மன்னி. இவள் இல்லாமல் வேறுயாராவது வந்திருந்தால்?'

'பெண்களே அப்படித்தான் போலிருக்கிறது. அவர்கள் சிருஷ்டியே அப்படி! ஆண்கள் உள்

தேவை என்ன, வெளித்தேவை என்ன என்பதை உடனேயே அறிந்துகொள்கிறார்கள் அப்பா!' என்றான் பாஸ்கரன். அவன் விலாசினியையும் அப்பொழுது ஞாபகப்படுத்திக் கொண்டான் என்று ரெங்கநாதன் அறிவானா?

அதற்குள் சூடான சொஜ்ஜியும் வெங்காய பஜ்ஜியும் வந்துவிடவே சாப்பிடுவதில் ஈடு பட்டனர் இரு நண்பர்களும். வயதில் வேற்றுமை இருந்தும் பரஸ்பர அன்பில் ஒருவரை ஒருவர் மிஞ்சியவர்கள் அவர்கள்.

காபி குடித்தபிறகு ரெங்கநாதன் தூங்கலாம் என்று உணர்ந்தான்.

அவனுக்குப் படுத்துக்கொள்வதற்காகப் பிரப்பம்பாயையும் ஆயில் துணியில் தயாரித்த தலையணையையும் தயார் செய்து கொடுத்துவிட்டு, பாஸ்கரன் மாடுகட்டும் கொட்டிலுக்குச் சென்றான்.

ரெங்கநாதன் நிம்மதியாகத் தூங்கினான். ரயிலில் தூங்கினாலும் ஏற்படும் அசதியில் குறைவு இருப்பதில்லையே, அது மீண்டும் மூன்று நாள் தூங்கினால்தானே தொலையும்!

தூங்குவதற்குமுன் பங்கஜத்தின் குணத்தைப் பற்றி ஒரு முறை எண்ணாமல் ரெங்கநாதனால் இருக்கமுடியவில்லை.

இயற்கையில், பிறர் சௌகரியமடைய, கஷ்டமான பாதையாயிருந்தாலும் நல்ல பாதையைத் தேடி அடையப் புத்திகொடுத்த ஈசுவரன் இந்தப் பெண்களுக்கு இந்தப் பொறுமையையும் கொடுத்திருக்கிறானே! என்ன சகிப்பு?

இல்லாமலா ஆண் உலகம் இப்படி அவர்களிடம் ஈடுபடுகிறது?

(தொடரும்)





# விமோசனம்

### மயிலன்

சம்பத்குமார் ஊருக்கெல்லாம் நல்லவன். அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் அத்தனை பேருக்கும் நல்லவன். சொந்தக்காரர்களுங்கூட அவனை நல்லவன், நல்லவன் என்று வாய் ஓயாமல் சொல்லி வாழ்த்துகிறார்கள்,

இப்படி நல்லவன் என்று பட்டம் பெற்றுள்ள சம்பத் இந்தப் பரந்த உலகில் ஒரு ஜீவனிடம் மட்டும் நல்லவனாக நடந்து கொள்ளுவதில்லை. அந்த ஜீவன் வேறு யாரும் இல்லை, அவன் கட்டிய தாலியை ஆயுள் முழுவதும் சுமந்து கொண்டு அவனோடு வாழ உடன்பட்டு விட்ட மனைவிதான்.

சம்பத் அப்படி. அவனுடைய மனைவி பத்மா எப்படி? கிட்டத்தட்ட அவனைப் போலத்தான். தெருவிலே எல்லாரும் 'பத்மாவா; நல்ல பொண்ணு; சிரித்த முகம் லக்ஷ்மியாட்டம். வீட்டுக்குப் போனால் வாய் நிறைய அவள் அழைப்பது ஒன்றே போதும். உபசாரமும் பலமாகத்தான் இருக்கும்......... என்னமோ, முன்னோர்கள் செய்த தீவினை, அது வயிற்றிலே இன்னும் ஒன்றும் வாய்க்கவில்லை. தெய்வத்துக்குக் கருணை இல்லாமலா போய்விடும்? பெறுகிற காலமும் இருக்கிறது' என்று எல்லா உணர்ச்சிகளையும் ஒரே மூச்சில் கொட்டிக் கலந்து விடுவார்கள்.

ஊராரின் அன்பையும், அதற்கு மேலே அவர்கள் பாராட்டையும் பெற்றுள்ள பத்மா, வீட்டிலே கணவனுடைய அன்பையும் ஆதரவையும் ஸ்வாதீனமாக்கிக் கொள்ளத் தவறிவிட்டாள்.

எல்லாருக்கும் நல்லவர்களாய் இருக்கும் இந்தத் தம்பதிகள் ஒருவருக்கொருவர் அன்பில் பிணைபட்டு நல்லவர்களாய் ஏன் இல்லை என்று நான் அடிக்கடி சிந்தித்துப் பார்ப்பதுண்டு. அவர்கள் பிறரை, வழக்கத்தில் உள்ளதுக்கு மேல் நேசித்து அன்பு பாராட்டுவதால் தான் தங்களுக்குள் பரஸ்பர ஒற்றுமையும் அன்புத்தளையும் இல்லாமல் இருக்கிறார்களோ என்கிற ஒரு நினைப்பைத் தவிர வேறு ஒன்றும் எனக்கு விளங்குவதில்லை!

எதிலும் பட்டதும் படாததுமாக வாழும் என்னைக்கூட இந்த விசித்திர தம்பதிகள் வாழ்க்கை கவர்ந்தது. அதன் பேரில் என் கவனம் அவர்களிடம் சென்றது. அதன் பலனாக நான் அவர்களுடைய குடும்ப நண்பன் ஆகிவிட்டேன், அந்தத் தெருவுக்குக் குடிபோன கொஞ்ச நாட்களுக்குள்.

சம்பத் என்னைவிட வயதில் கொஞ்சம் மூத்தவன். எனவே என்னைப் பெயர் சொல்லியே அழைப்பது என்று தீர்மானித்துவிட்டான். அதே சமயம் எல்லாரிடத்திலும் சாதாரணமாக அவனுக்குள்ள அன்போடு ஒரு தனி மரியாதையையும் என்னிடம் அவன் ஆரம்ப முதலே காட்டி வந்தான்.

இந்தத் தனி மரியாதைக்கு என்ன காரணம் என்பது எனக்கு ஓரளவில் மனதுக்கு மட்டும் பட்டிருந்தாலும், அதுதானா என்று அறிவதில் ஒரு சிறு ஆவல். ஒருநாள் அவனே இதைச் சொல்லிவிட்டான். 'ஸ்ரீதரன், உன்னிடத்திலே

ஒரு கவர்ச்சி இருக்கிறது. மற்றவர்களிடம் இல்லாத, ஒரு அலாதி மேன்மை இருக்கிறது. அவர்களுடைய பேச்சுக்கும் சிரிப்புக்கும் அனுதாபத்துக்கும் பின்னால் வேண்டாத ஏதோ ஒன்று இருப்பதாக எனக்குப் படுகிறது. அதுபோல் உன் விஷயத்தில் இல்லை. உன் சொல்லும் சிரிப்பும் அணைத்துக் காக்கும் அன்புரையும் இருதய சம்பந்தம் பெற்று முழு மதிப்புக்கொண்டிருக்கின்றன' என்று பேசிக்கொண்டுவந்தவிஷயத்துக்குச்சம்பந்தம் இல்லாமலே சந்தோஷமிகுதியில் சொல்லினான். கேட்ட எனக்கும் சந்தோஷம் பிறந்தது.

சம்பத்தின் மரியாதை மட்டும் எனக்குரியது என்றில்லாமல், அவன் மனைவி பத்மாவின் மரியாதையையும் நான் பெற்றிருந்தேன். அவள் என்னை 'அண்ணா' என்றே அன்போடு, மிக்க மரியாதையோடு அழைப்பது வழக்கம்.

நானும் இந்தத் தம்பதிகள் விஷயத்தில் மனப்பூர்வமான அன்பு செலுத்திவந்தேன். அவர்கள் குடும்பக் காரியங்களில் விரும்பும் அளவுக்கு வரம்பை மீறாமல் பங்கு எடுத்துக்கொள்ளுவேன். சமயங்களில் குற்றங்குறைகளை எடுத்துச்சொல்லி அவர்கள் வாழ்க்கையைச் செப்பனிட்டுச் சீராக்க முயலுவேன். பொருளாதாரம் பிற்கால வாழ்க்கைக்கான பாதுகாப்பு முதலிய விஷயங்களில், தாராளமாக யோசனைகளும் கூறுவேன்.

எனக்கு வரவர அவர்களிடம் அக்கரை மிகுந்தது. 'இயற்கையிலேயே எவ்வளவு நல்லவர்களாக இருக்கிறார்கள் இவர்கள்!' என்கிற வியப்பு நாளுக்கு நாள் வளரலாயிற்று. இந்த வியப்புக்குப் பின்னால், 'இவர்கள் ஏன் அன்புகொண்டு வாழமாட்டேன் என்கிறார்கள்?' என்கின்ற பெரிய கேள்வி, திணறவைக்கும் பிரச்னை மூளைக்கத்தான் செய்யும்.

ஆமாம்; அவர்கள் கீரியும் பாம்புமாக வாழாவிட்டாலும், வேண்டிய சௌஜன்யத்தோடு வாழவில்லை. காலையில் ஒரு சண்டை, மாலையில் ஒரு மனஸ்தாபம். இரவிலே முணுமுணுப்பும் பெருமூச்சும். இப்படித்தான் பெரும்பாலும் அவர்கள் நித்திய வாழ்க்கை ஓடியது.

ஒருநாள் காலை மணி எட்டு இருக்கும். நான் பலகாரம் சாப்பிட்டுக்கொண்டிருந்தேன். பத்மா விடுவிடென்று வீட்டுக்குள் ஓடிவந்தாள். படபடத்தோடு. பரபரப்போடு அவள் வந்தது எனக்கு என்னவோ போல் இருந்தது. 'என்ன பத்மா?' என்று கவலையோடும் ஆவலோடும் விசாரித்தேன்.

'அண்ணா, இந்த வீட்டில் என்னால் இனிமேல் அரை நிமிஷம் இருக்க முடியாது. என்னைத் திருச்சிக்கு அனுப்பிவிடுங்கள். நான் எங்கள் அண்ணாவோடு வாழுகிறேன். இவர் வேண்டுமானால், இன்னொருத்தியைக் கட்டிக்கொண்டு வாழட்டும்' என்று மாலை மாலையாகக் கண்ணீர் விட்டாள்.

என்ன விஷயம் என்று விசாரித்ததில், சமையல் செய்வதில் கொஞ்சம் தாமதம் ஏற்பட்டுவிட்டதாம். அதற்காக, சம்பத் துள்ளிக் குதித்து வீட்டை இரண்டு பண்ணுகிறானாம். 'மானம் போகிறது எனக்கு' என்று அண்ணன் வீட்டுக்குப் போக வேண்டும் என்கிறாள் பத்மா.

அவளைச் சமாதானப்படுத்திப் போகச் சொல்லிவிட்டு, சம்பத்தை அழைத்துக் கொண்டுவந்து பலகாரம் சாப்பிடச் சொன்னேன். அவனும் வந்து தன்னுடைய வழக்கை ஒப்பித்துக் கொண்டே சாப்பிட்டான்.

இப்படித்தான் அவர்கள் சண்டையும் சச்சரவும்! நானும் எத்தனையோ குடும்பங்களைப் பார்த்திருக்கிறேன். அங்கு நடக்கும் வியவகாரங்களைக் கண்டும் கேட்டும் அறிந்திருக்கிறேன். அந்தப் 'புகைச்சலு'க்கும் மனக்கசப்புக்கும் தர்க்கம் தகராறுக்கும் ஆயிரம் காரணம் இருக்கும். ஆனால் இந்தத் தம்பதிகள், 'பிச்சுப் பிடுங்கல்' இல்லாத இந்தத் தனித் தம்பதிகள் இப்படி ஒற்றுமைக் குறைவோடு, நித்தமும் வாதங்கள், சண்டைகள் இட்டு அமைதியற்று வாழுவானேன் என்று எண்ணி எண்ணிப் பார்த்து நெஞ்சயர்ந்து போனேன்.

இன்னொரு நாள். மாலை நாலுமணி சுமார். நான் பிற்பகல் தூக்கம் கலைந்து படுக்கையில் உட்கார்ந்த படியே, தூக்கத்துக்குப் பின்னால்



'இன்னொருத்தியைக் கட்டிக்கொண்டு...'

வரும் விசித்திர சாந்தியைக் கொட்டாவி விட்டுக் கொண்டே அனுபவித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது சம்பத் திடுதிடென்று என் அறைக்குள் நுழைந்தான், 'ஸ்ரீதரன், இந்த மூதேவியோடு என்னால் வாழமுடியாது.........' என்று உரக்கக் கூறி என் மனதில் கிளர்ச்சியைப் புகுத்தி விட்டான்.

மற்றவர்கள் எல்லாம் லக்ஷ்மி என்று எண்ணிப் போற்றும் பத்மாவைத்தான் அவன் மூதேவி என்று பட்டம் கட்டுகிறான் என்பதை உணர்ந்தேன். இது எனக்குச் சிறிது அதிர்ச்சி தந்தது.

'பதறாதே. உட்காரு இப்படி, விஷயம் என்ன? சொல்லு.' என்றேன் நான்.

'டிபன் பண்ணச் சொன்னால் பண்ண வேண்டியது தானே இவள்? முடியாது என்கிறாள் இந்த அடங்காப்பிடாரி நமக்கு லாயக்குப்படாது. தொலைத்துத் தலைமுழுகி விடுகிறேன். பொழுது விடிந்தால் பொழுது போனால், திருச்சிக்குப் போய் விடுகிறேன் என்று பூச்சி பிடிக்கிறாள். அனுப்பித்தான் வைத்துவிடுகிறேனே. அண்ணனோடு ஆயுள் பூராவும் இருக்கட்டும..........., என்று குமுறினான்.

'இவள் போய்விட்டால் அதன் பிறகு? வேறு பெண் யாராவது பார்த்திருக்கிறாயா?' என்று சிரித்துக்கொண்டே கேட்டேன்.

அவன் மௌனமாக உட்கார்ந்திருந்தான். மனதில் ஓடிய எண்ணக் கூட்டத்தின் அறிகுறி போல் முகத்தில் ஒரு நிழல் கவிந்தது அவனுக்கு!

'பலத்த யோசனைகள் எல்லாம் அப்புறம். உனக்கு டிபன்தானே வேண்டும்! எழுந்திரு' என்று அவனை அழைத்துக்கொண்டு ஹோட்டலுக்குக் கிளம்பினேன்.

வாழத்தெரியாத இந்தத் தம்பதிகளை எப்படி அன்போடு, ஒற்றுமையோடு வாழ வைப்பது என்கிற பிரச்னை எனக்கு ஏற்பட்டுவிட்டது. நான் எப்படி எப்படியோ எண்ணி, என்னென்னவோ பண்ணிப்பார்த்தேன். எல்லாம் வியர்த்தம்; விழலுக்கு இறைத்த நீர்! அவர்கள் சுபாவம் மாறவே இல்லை. தினமும் சண்டைதான்; சச்சரவுதான். நான் கற்றவித்தை பலிக்காததை நினைக்க எனக்கு வருத்தம்! எனினும், என் முயற்சி தளர்ச்சி அடையாமல் வர வர வலுத்துக்கொண்டு வந்தது. 'இன்று இல்லாவிட்டாலும், இனிவரும் ஒருநாளில் இவர்கள் வாழ்க்கையில் சண்டை நின்று சச்சரவு ஒழிந்து இன்பமும் அன்பும் ஒற்றுமையும் ஒட்டுதலும் உண்டாகி வளர்ந்து ஓங்காதா?' என்கிற நம்பிக்கைதான்.

இப்படியிருக்கும் காலத்தில் ஒருநாள் சம்பத் என் அறைக்குள் நுழைந்தான். நுழைந்து 'ஸ்ரீதரன்' இவளை ஊருக்கு அனுப்பிவிடவேண்டும்' என்றான்

'என்ன சண்டை இன்றைக்கு?' என்று நான் அவனை ஆவலோடு பார்த்தேன். அவன் முகத்தில் சண்டை நடந்ததற்கான எந்த அறிகுறியும் இல்லாமல் ஒரு சாந்தம், சந்தோஷம் தழுவிய சாந்தம் படர்ந்திருந்தது.

'முழுகாமல் இருக்கிறாள். இங்கே இருந்து தனியாக அவஸ்தைப்படவேண்டாம். திருச்சிக்குப் போனால் இவளுடைய ஜனங்கள் நிறைய இருக்கிறார்கள். பார்த்துக்கொள்வார்கள். கவலை இல்லை' என்று தகவல் தெரிவித்தான்.

இதைக் கேட்டவுடன் எனக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. பத்து நாளாய் மேக மூட்டத்தால் ஒளி குன்றிக்கிடந்த உலகத்துக்கு மேகத்தைப் பேதித்துக்கொண்டு அழகையும் ஆனந்தத்தையும் அள்ளிச் சொரியும் சூரிய கிரணம்போல் இருக்கிறது அந்தச் செய்தி, ஆவலும் அக்கறையும் துடிக்கும் என் அன்பு உள்ளத்துக்கு.

அவன் மேலும் சொன்னான்: "திருச்சிக்கு அனுப்பிவிட்டுக் கொஞ்ச நாட்களுக்கு ஹோட்டல் சாப்பாடு சாப்பிடலாம்."

இதைக் கேட்டுக்கொண்டே வந்துவிட்டாள் பத்மா. "ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டு நாக்கு செத்துவிட்டால், இவள் பண்ணிப்போடுவது அப்புறம் நன்றாய்ப்பிடிக்கும்" என்று சவால் விட்டுக்கொண்டு அறைக்குள் நுழைந்தாள்.

நான் அவளைப் பார்த்தேன். அவனையும் பார்த்தேன். அவர்கள் முகத்தில் நிறைந்து ததும்பி வழிந்தோடிய இன்பத்தைக் கண்டுகொண்டேன். என் உள்ளம் குளிர்ந்தது. 'பத்மா, திருச்சி போகிறாயா? நல்லது போய்வா'' என்று அவள் சொல்லிக்கொள்ளு முன்பே விடை கொடுத்தேன். அப்போது அந்தப் பெண்ணின் முகத்தில் 'குபுக்' கென்று தோன்றிய நாணம்! அதன் சகவாசத்தில் மெருகிட்டதுபோல் விளங்கிய அந்த அழகு!

அன்று சாயங்காலம் பத்மா திருச்சிக்குப் பயணம் ஆனாள். இன்னும் ஒரு பத்துமாதத்துக்குள் ஒரு குழந்தையை அணைத்துகொண்டு அவள் வீட்டுக்குள் நுழைவாள். அத்தோடு அவர்கள் குடும்பத்தில் பழைய சண்டையும் பிணக்கும் இருந்த இடம் தெரியாமல் போக, இன்பமும் அமைதியும் நுழைந்துவிடும் என்று நான் நிச்சயமாக நம்பினேன்.

என் நம்பிக்கை வீணாகவில்லை. காலப்போக்கு அதை ஊர்ஜிதம் செய்தது. அந்தத் தம்பதிகள் வாழ்க்கையில் சந்தோஷம் குடி புகுந்துவிட்டது. என் மனதில் நின்று, நீங்காத பிரச்னைக்கும் கடைசியில் விடை கிடைத்தது!



"ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டு........"

# பஞ்சாங்க புராணம்

***ராஜலக்ஷ்மி ராமகிருஷ்ணன்***

"**வா**ருங்கள், வாருங்கள், கையில் என்ன பத்திரிகை?" என்று கேட்டார் என் தகப்பனார் திண்ணையில் உட்கார்ந்திருந்தபடியே.

"ஒன்றுமில்லை. புதுவருஷம் வருகிறதோல்லியோ, பஞ்சாங்கம் வாங்கிக்கொண்டு வந்தேன்" என்றார் எதிர்த்தவீட்டு வேங்கடராமையர்.

"என்ன மாமா, புதுவருஷம் பிறக்க இன்னும் 10 நாள் இருக்கிறது. இதற்குள்ளேயே பஞ்சாங்கம் வாங்கிண்டு வந்துட்டேளே!" என்றான் என் தம்பி பாலு.

"மாமா என்ன, இரண்டு பஞ்சாங்கம் வாங்கிண்டு வந்திருக்காரே" என்றாள் கற்பகம். வாக்கிய பஞ்சாங்கம் ஒன்று, மடத்துப் பஞ்சாங்கம் ஒன்று வாங்கிண்டு வந்திருப்பார். அப்புறம் கிரகணம் உண்டா இல்லையா அதற்கு ஸ்நானம் உண்டா இல்லையா என்றெல்லாம் ஒவ்வொன்றுக்கும் மூளையைக் குழப்பிக்கொண்டிருக்கலாம்" என்றான் பாலு

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இந்தப் பஞ்சாங்கச்சண்டை பூசலுக்கெல்லாம் எனக்கு எங்கே நேரம்? இங்கேதான் ஆபீஸுக்கு ஓடுவதற்கும் திரும்புவதற்கும்தான் சரியாக இருக்கிறதே. எந்தப் பஞ்சாங்கமாயிருந்தாலும் சரி, படித்தபின் நீர்மோர், பானகம், சுண்டல், கிரமமாக வினியோகம் பண்ணினால் சரி. உங்களுக்கு இருக்கட்டும் என்று ஒரு பிரதி வாங்கி வந்தேன்" சொல்லிக்கொண்டே பஞ்சாங்கத்தை நீட்டினார்.

"அப்பா போன வருஷம் முழுக்க அவாத்துப் பஞ்சாங்கத்தைக் கடன் கேட்டிண்டிருந்தோமோல்லியோ, அந்தத் தொல்லை பொறுக்க முடியாமல் நம்மாத்துக்கும் சேர்த்து அவரே வாங்கிக்கொண்டு வந்துட்டார் போலிருக்கிறது" என்றான் பாலு.

"போடா, நீதானேடா போனவருஷம் பஞ்சாங்கத்தைச் சின்னி கையிலிருந்து பிடித்து இழுத்துக் கிழிச்சே?" என்றார் அப்பா.

"பஞ்சாங்கத்திலே அப்படி என்ன சுவாரஸ்யமிருக்கு?" என்றாள் வேங்கடராமையர் பெண் சாவித்திரி.

"ஏன், ஒவ்வொரு மாஸமும் வர பண்டிகைகளைப் பார்த்துக்கொண்டே வந்தால் பண்டிகைகளை வரிசையாகக் கொண்டாடுவது போலத் தோன்றுகிறது. இன்னும் உத்ஸவங்கள், விவாஹ முகூர்த்தங்கள், ராமர் சக்கரம், சீதா சக்கரம், இராசி பலன் என்னெல்லாமே போட்டிருக்கு. இதெல்லாம் பாத்துண்டே இருந்தால் போது போறதே தெரிய மாட்டேங்கறது' என்றான் பாலு.

"சிலபேர் பாருங்கள் ஸார்! அகராதியை ரொம்ப சுவாரஸ்யமாக மணிக்கணக்காகப் புரட்டிக்கொண்டிருப்பார்கள். நம்ப பாலு அது மாதிரி பஞ்சாங்கப் பிரகிருதிபோல இருக்கு" என்றார் வேங்கடராமையர்.

"ஆமாம், பஞ்சாங்கம் என்றால் என்ன?" என்று கேட்டாள் கற்பகம்.

"இதுகூட தெரியாதா? பஞ்ச — ஐந்து. ஐந்து அங்கங்களை யுடையது பஞ்சாங்கம்" என்றார் அப்பா.

"என்னென்ன அங்கங்கள்?" என்று கேட்டான் பாலு.

"சொல்கிறேன், கேள் — திதி, வாரம், யோகம், நக்ஷத்திரம்—" என்று நிறுத்தினார் அப்பா.

"நான்கு சொல்லி நிறுத்திவிட்டேளே?" என்றான் பாலு. "திதி வார யோக நட்சத்திர கரணம்' என்று அடுக்கி லிஸ்டைப் பூர்த்தி செய்தார் வேங்கடராமையர்.

"திதி என்றால். தெரியும்; வாரம் என்றால் கிழமை; யோகம்?" என்று கேட்டான் பாலு.

"இன்ன கிழமையில் இன்ன நட்சத்திரம் வந்தால் நல்ல யோகம், இல்லாவிட்டால் கெட்டயோகம்" என்று விளக்கினார் அப்பா.

"ஆமாம், நான்கூடப் பார்த்தேன். அமிருத யோகம், சித்த யோகம். மரணயோகம் என்றெல்லாம் போட்டிருக்கிறது' என்றாள் கற்பகம்.

"அது இருக்கட்டும் முதலில் கிழமை எப்படி ஏற்பட்டது?" என்று கேட்டாள் சாவித்திரி. எனக்குத்தெரியாது. ராஜியைக் கேட்டால் சொல்வாள்" என்றார் அப்பா.

"அதுவரை அறையிலிருந்தபடி பேச்சைச் சுவாரஸ்யமாகக் கேட்டுக்கொண்டிருந்த

நானும் திண்ணமகாநாட்டில் கலந்துகொள்வதற்காக வாசற்படியருகில் நின்றுகொண்டேன். பாலு அவன் கேள்வியைத் திரும்ப என்னைப் பார்த்துக் கேட்டான்.

"அதுவா-எகிப்தியர்கள் ஒவ்வொருநாளும் ஒவ்வொருகிரகத்தின் ஆதிக்கத்துடன் ஆரம்பிக்கிறது என்று கொண்டார்கள். அதன்படி ஞாயிற்றுக்கிழமை காலை சூரியனுடையது. திங்கட்கிழமை சந்திரனுடையது. இதேமாதிரிதான் ஒவ்வொரு கிழமைக்கும். மேல் நாட்டிலும் இந்த அடிப்படையில்தான் கிழமைகள் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்" என்றேன்.

"ஆமாம் Sunday, Monday என்றெல்லாம் வருகிறது. "Moon-day Mon day ஆக மாறியிருக்கும்; Saturn day–Saturday ஆகிவிட்டது" என்றேன் நான்.

"அப்படியானால் Tuesday, Wednesday, Thursday, Friday எப்படி வந்தது?" என்று கேட்டாள் கற்பகம்.

"செவ்வாய்க்கு Tues என்று பெயர். இதே மாதிரிதான் மற்றவற்றிற்கும்" என்று எனக்கு நிச்சயமாகத் தெரியாவிட்டாலும் ஊக்கத்தின் பேரில் ஒரு புளுகு புளுகி வைத்தேன்!

"ஏழு கிரஹங்களுக்குத்தானே கிழமை இருக்கு? பாக்கி இரண்டு?" என்றான் பாலு.

"இராகுவும் கேதுவும் கிரஹங்களில்லை; நிழல்கள். அவற்றைச் சாயா கிரஹங்கள் என்று சொல்வார்கள்" என்றேன் நான்.

"கிழமை இல்லாவிட்டால் என்ன? இராகு காலம்தான் தினம் இருந்து உயிரை வாங்கிறதே" என்றார் வேங்கடராமையர்.

"அப்படின்னா குளிகை காலம்தான் கேது காலமா?" என்று கேட்டாள் கற்பகம்.

"ஏது, பஞ்சாங்க புராணமாகப் போய்விடும் போலிருக்கு" என்று பேச்சை மாற்ற முயன்றேன் நான். அவள் கேள்விக்கு எனக்கு விடை தெரியவில்லை!

"அதெல்லாம் இருக்கட்டும்–திதி, வாரம், யோகம் அப்புறம், நட்சத்திரம் எப்படி கணக்கிடுகிறார்கள்?" என்று கேட்டான் பாலு.

"சந்திரன் வானத்தில் சஞ்சாரம் செய்து கொண்டே இருக்கிறது. அமாவாசையானவுடன் முதற்பிறையை மேற்கே பார்க்கலாம். பௌர்ணமியன்று சந்திரோதயம் கிழக்கே. ஒவ்வொரு நாளும் சந்திரனுக்கருகில் விசேஷமாகப் பிரகாசிக்கும் நட்சத்திரத்தை அன்றைய நட்சத்திரம் என்று சொல்கிறோம். நட்சத்திரம் சந்திரனுடைய நிலையை அறிவிக்கிறது" என்று ஒரு குட்டி லெக்சர் அடித்தேன் நான்.

"ஆமாம், ஆமாம்; குப்பு ஜோசியர்கூட, நட்சத்திரத்திலிருந்துதான் சந்திர லக்னம் தெரியும்னு என்னமோ சொல்லிக் கொண்டிருந்தார்" என்றான் பாலு.

"சித்திரை என்றால் நட்சத்திரத்துக்கும் பெயர். மாசத்துக்கும் பெயர்" என்றாள் சாவித்திரி.

"சித்திரை மாதம் பௌர்ணமி யன்று என்ன நக்ஷத்திரம்?" என்று நான் கேட்டேன்.

"சித்திரா பௌர்ணமி சித்திரை நக்ஷத்திரம்" என்றாள் சாவித்திரி. "அதனால்தான் அந்த மாதத்துக்குச் சித்திரை என்று பெயர்" என்றேன்.

"அப்படின்னா, வைகாசி?" என்றான் பாலு.

"நான் சொல்கிறேன், வைகாசி மாஸம் பௌர்ணமி யன்று..." என்று கற்பகம் ஆரம்பித்தாள்.

"வைகாசி நக்ஷத்திரம்" என்றார் அப்பா. அனைவரும் 'கொல்' லென்று சிரித்தார்கள். இந்த ஹாஸ்யத்தை ரஸிக்காத கற்பகம் முகத்தைச் சுளுக்கிக்கொண்டாள்.

"வைகாசி மாதம் பௌர்ணமியன்று விசாக நக்ஷத்திரம். அதனால் மாதத்தின் பெயர் வைசாக மாதம். அது தமிழில் வைசாகி யென்றாகி வைகாசி யென்று திரிந்தது" என்றேன் நான்.

"தெரியும். எங்கள் தமிழ் வாத்தியார் கூடச் சொல்லியிருக்கிறார்" என்றான் பாலு.

"பாக்கி மாதங்களுக்கெல்லாம் என்னாச்சு?" என்று கேட்டார் வேங்கடராமையர்.

"ஆனி மாதத்திற்கு இன்னொரு பெயர் ஜ்யேஷ்ட மாதம். ஏனென்றால் பௌர்ணமி யன்று ஜ்யேஷ்ட நக்ஷத்திரம் (கேட்டை). ஆடிக்கு ஆஷாட மாஸம். ஆவணியில் சிராவணம். புரட்டாசியில் ப்ரோஷ்டபதம், ஐப்பசி அசுவதியின் திரிபு. கார்த்திகைக்குக் கிருத்திகை என்று எல்லாருக்கும் தெரியும். மார்கழி மார்கசீர்ஷத்தின் திரிபு. தைக்குப் புஷ்ய மாதம் என்று பெயர் உண்டு. மாசி மாக மாதத்

தின் திரிபு. பங்குனி பால்குனத்தின் திரிபு. ஆக ஒவ்வொரு மாதமும் பௌர்ணமியன்றுள்ள நட்சத்திரத்தின் பெயரால் வழங்குகிறது'' என்றேன்.

''மார்கழி மாதத்தைத் தனுர் மாஸம் என்று சொல்றுளே'' என்றுன் பாலு.

''அது வேறே கணக்கு. சந்திரன் ஒவ்வொரு மாதமும் வெவ்வேறு ராசியில் பௌர்ணமியன்று இருப்பது போல், சூரியன் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு இராசியில் இருக்கிறது. மேஷம், ரிஷபம், மிதுனம் முதலிய இராசிகளைக்கொண்டு மாதங்களுக்குப் பெயர் கொடுத்திருக்கிறுர்கள்'' என்றேன்.

''துலா மாஸம் என்றுகூட சொல்றுபாட்டி'' என்று ஆமோதித்தான் பாலு.

''சரி, அப்புறம் சொல்லேன். கரணம் என்றுல்?'' என்று கேட்டாள் கற்பகம்.

''போட்டால் கரணம் தப்பினுல் மரணம்'' என்றுன் பாலு.

''குட்டிக்கர்ணம், கோகர்ணம், கஜகர்ணம்'' என்று அடுக்கினுள் சாவித்திரி.

''நாமகரணம், கும்பகர்ணன் என்று சொல்லிக்கொண்டே போயேன்'' என்றுர் அப்பா.

எனக்குத் தெரியாதென்று உண்மையை ஒப்புக்கொண்டேன் வேறு வழி!

''சரி, வெற்றிலையாவது போட்டுக்கொள்ளலாம்'' என்று வெற்றிலைப் பெட்டியைத் திறந்தார் வேங்கடராமையர்.

''பஞ்சாங்கம் எதுக்கு எல்லாரும் வாங்கருு? தேதி பார்க்கணும்னு? காலண்டர் இருக்கு'' என்றுன் பாலு.

''காலண்டர்லே தமிழ்தேதி அமாவாசை பௌர்ணமி, பண்டிகையெல்லாம் போட்டிருக்கே'' என்றுள் கற்பகம்.

''நாள் செய்வது நல்லார்செய்யமாட்டார். எதுசெஞ்சாலும் பஞ்சாங்கத்தைப் பார்த்துச்செய்யவேண்டும்'' என்று அம்மாவின் குரல் உள்ளிருந்தபடியே கேட்டது.

''ஆமாம், இப்போது காலம் இருக்கிற இருப்பில் ஒவ்வொரு காரியத்தையும் நாள் பார்த்துத்தான் செய்ய முடியறதா? ரயில்காரன் நாள்பார்த்தா வண்டி விடுகிறுன்? எப்போ சௌகரியமோ, புறப்படவேண்டியதுதான்'' என்றுர் வேங்கடராமையர்.

''அப்படிச்சொல்லாதிர்கள். ஒருதரம் அஷ்டமி நவமியில் புனாவிலிருந்து பெங்களூருக்குப் புறப்பட்டேன்'' என்று நான் ஆரம்பித்தேன்.

''ஆமாம் எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. குண்டக்கல்லில் ரயிலைக் கோட்டைவிட்டு விட்டு அடுத்த நாளைக்கு வந்துசேர்ந்தாய். நானும் அப்பாவும் ஸ்டேஷனுக்கு முதல் நாளே வந்து பார்த்தோம். காலேஜ் பிரின்ஸிபாலுக்கு அப்பா தந்தி கொடுத்துவிட்டு வந்தார் — நீ ஹாஸ்டல்லேருந்து புறப்பட்டாச்சா, இல்லையான்னு'' என்று அடுக்கினுள் கற்பகம்.

''இன்னொருதரம் பாருங்கள் ஸார். காஞ்சீபுரத்திற்கு ஸரஸ்வதி பூஜையன்று வந்து சேர்ந்து விடவேண்டுமென்று அதற்கு முந்தினநாள் அஷ்டமியன்று பெங்களூரிலிருந்து புறப்பட்டோம்.'' ''சாயங்காலம் அரக்கோணம் வந்து பார்த்தால் காஞ்சீபுரத்துக்கு வண்டியில்லை. எல்லாரும் ஜம்மென்று இரட்டை மாட்டு வண்டியில் விடிய விடியப் பிரயாணம் செய்து கார்த்தாலே காஞ்சீபுரம் வந்து சேர்ந்தோம்'' என்று முடித்தான் பாலு.

''ஏன், கொஞ்ச நாளைக்கு முன்னுலே அத்திம்பேர் பரணி, கார்த்திகை வேண்டாம்னு அக்கா தடுத்துக்கூட கேட்கலை, நாகபூருக்குப் புறப்பட்டுப் போனுரே. அடுத்த நாளைக்குத்தான் அந்த பெரிய புசலடிச்சு நாகபூர் வண்டி கிளம்ப 12 மணி தாமச மாயிடுத்தாம்'' என்றுள் கற்பகம்.

''இப்போதெல்லாம் அவர் கூட நாள் பார்த்துப் பிரயாணம் செய்ய ஆரம்பித்து விட்டார்'.'' என்றுர் அப்பா.

''பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு!'' என்றுள் கற்பகம்.

''இதெல்லாம் வீண் பேச்சு, அஷ்டமியன்று ரயிலே ஓடறதில்லையா என்ன? ஒவ்வொத்தனும் ஒழுங்கா போய்ச்சேராம்லா இருக்கான்?'' என்று ஆட்சேபித்தார் வேங்கடராமையர்.

''அதென்னமோ இரண்டு மூன்று அனுபவங்களுக்குப்பின் எனக்குப் பயமாக இருக்கிறது. இதைப்பற்றி வேண்டுமானுல் ஒரு ஆராய்ச்சி பண்ணலாம். அஷ்டமி நவமி

யன்னிக்கு ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகவேண்டியது. அன்றைக்குப் பிரயாணம் செய்யப்போகிற பேரிடமெல்லாம் நம் விலாசம் எழுதின கார்டைக்கொடுத்து ஊருக்குப் போய்ச் சேர்ந்தபின் அவர்களுக்கு ஏதாவது தடங்கல் ஏற்பட்டதா இல்லையா என்று தெரியப்படுத்தச் சொல்லலாம்'' என்றேன் நான்.

"அப்பா, அக்கா M. A. பாஸ் பண்ணினதிலிருந்து Ph. Dக்கு ஆராய்ச்சி பண்ணனும்னு சொல்லிண்டிருககாளோல்லியோ. இதைப்பற்றி வேணும்னு ஆராய்ச்சி பண்ணலாம்'' என்றாள் கோமதி. அவள் அப்பொழுதுதான் உள்ளேயிருந்து மகா நாட்டில் கலந்துகொள்ள வந்தாள்.

"ஆமாம், ஆராய்ச்சிபண்ணி எழுதி அதை ஒரு நல்ல நாள் பார்த்து, ஆற்றில் போட்டு விட்டு, ஒரு ஸ்நானம் செய்துவிட்டு வரலாம்'' என்றார் அப்பா.

அதற்குள் புதுப் பஞ்சாங்கத்தை மிக்க சுவாராஸ்யமாகப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்த பாலு, "பஞ்சாங்கத்திலே துலுக்கு வருஷம், இங்கிலீஷ் வருஷம், தமிழ் வருஷம் மூன்றும் போட்டிருக்கு'' என்றான்.

"சாலிவாகன சகாப்தம் 1875, கலியுகாதி 5054, இங்கிலீஷ் 1953, கொல்லம் 1128, ஹிஜரி 1371'' என்று அவன் கையிலிருந்த பஞ்சாங்கத்தைப் பிடுங்கி வாசித்துக் கொண்டே போனாள் கற்பகம்.

''நம் தேசத்தார் பெருந்தன்மையுள்ளவர்கள். சமரஸ நோக்குள்ளவர்கள். சரித்திரத்தில் வல்லவர்கள் என்று தெரிகிறது'' என்று பிரசங்க மேடை பாணியில் அடுக்கினாள் கோமதி.

"கிறிஸ்துவ பண்டிகைகள், முகம்மதிய பண்டிகைகள் எல்லாம் போட்டிருக்கு'' என்றான் பாலு.

"தமிழில் சித்திரை, இங்கிலீஷில் ஏப்ரல். முகம்மதியர்களுக்கு?'' என்றாள் கற்பகம்.

"ரஜப்'' என்றான் பாலு.

"எனக்கு ரம்ஸான் மாதம் ஒன்றுதான் தெரியும்'' என்றாள் கோமதி.

"எல்லா மாஸமும்தான் பஞ்சாங்கத்தில் போட்டிருக்கே ரஜப், ஷாபான், ரம்ஸான், ஷவ்வல், ஜில்ஹாத், ஜில்ஹேஜ், மோகர், ஸபர், ரபியூலவ்வல், ரபியூலாகர், ஜமாதிலவ்வல், ஜமாதிலாகர்'' என்று படித்துக் கொண்டே போனான் பாலு.

''போறும் தலையை வலிக்கிறது'' என்றாள் சாவித்திரி.

''அவாளுக்கெல்லாம் எப்படி மாஸக் கணக்கு?'' என்று கேட்டாள் கற்பகம்.

''பஞ்சாங்கத்திலே பார் தெரியும். அமாவாசையையடுத்த துவிதீயை தான் அவர்களுக்கு முதல்தேதி. அதாவது பிறைச் சந்திரன் கண்ணுக்குத் தெரியும் தினம்'' என்றேன்.

"தெலுங்காளுக்கெல்லாம் கூட அமாவாசையன்றுதான் மாஸப் பிறப்பு'' என்றாள் சாவித்திரி.

"அப்போ ஒரு பக்ஷத்திற்கு 15-நாள், ஒரு மாஸத்திற்கு 30-நாள். வருஷத்திற்கு 360 நாள் தானே ஆகும்?'' என்று கேட்டாள் கோமதி.

''சந்திரன் ஒருமுறை பூமியைச் சுற்ற 29½ நாள்தான். அதனால் 12 அமாவாசைக்கு 354-நாள்தான்'' என்றான் கணக்குப்புலி பாலு.

"முன்பெல்லாம் மேல்நாட்டார் கூட அமாவாசைக் கணக்குப்படி தான் மாஸம் வைத்துக் கொண்டிருந்தார்கள். துண்டு விழும் 5-நாளுக்காகச் சில மாதங்களுக்கு ஒரு தேதி அதிகம் சேர்த்துக்கொண்டார்கள்''என்றேன் நான்.

''ஜனவரி, மார்ச், மே, ஜுலை, ஆகஸ்ட், அக்டோபர், டிசம்பர் ஏழு மாஸத்துக்குச் சேர்த்திருக்கே'' என்றான் பாலு.

''முதலில் ஐந்து மாதங்களுக்களுக்குத் தான் 31-தேதி இருந்தது. பிறகு ஜுலியஸ் ஸீஸர் பிறந்த மாதத்திற்கு ஜுலை என்று பெயரிட்டு ஒரு தேதி அதிகம் கொடுத்தார்கள். அதேமாதிரி அகஸ்டஸ் சீஸர் பிறந்த மாதத்திற்கு ஆகஸ்ட் என்ற பெயர் வந்தது. ஒரு தேதி அதிகமாயிற்று ஆக, ஏழு மாதத்திற்கு 31உ யாகிவிட்டது'' என்றேன்.

''அப்போ ரெண்டுநாள் ஜாஸ்தியாயிடுமே'' என்றான் கற்பகம்.

'' அதுதான் பிப்ரவரியில் இரண்டுதேதி குறைஞ்சு போச்சே'' என்றான் பாலு.

''நீ சொல்லுவது சரிதான். தேதி ஜாஸ்தியாகிவிட்டதால் வேண்டுமென்றே பிப்ரவரியிலிருந்து இரண்டு நாளை எடுத்து விட்டார்

கன்" என்றேன் நான்" "பாவம், பிப்ரவரி" என்றாள் கற்பகம்.

"பாவம் என்ன? எனக்குப் பிப்ரவரிதான் குஷியான மாதமாகத் தோன்றுகிறது. இரண்டு மூன்று நாள் முன்பே முதல் தேதி வந்து விடுகிறது, பால் கணக்கிலிருந்து எல்லாம் கொஞ்சம் குறைகிறது" என்றார் முதல்தேதியை எதிர்பார்ப்பதிலேயே காலம் கழிக்கும் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் கோஷ்டியைச் சேர்ந்த என் தகப்பனார்!

"பரீட்சை மார்ச் மாஸம் வரும்பொழுது பிப்ரவரி 28-நாள் தான் என்று நினைக்கும் போதே பகீரென்கிறது" என்றாள் சாவித்திரி.

"லீப் வருஷத்திலே ஏன் பிப்ரவரிக்கு 29-நாள்?" என்று கேட்டான் பாலு.

"சூரியனைப் பூமி சுற்ற $365\frac{1}{4}$-நாள் ஆகிறது. 365 என்று கொண்டால் $\frac{1}{4}$-நாள் விட்டுப்போகிறது. அதற்காக நாலு வருஷத்துக்கு ஒரு தடவை ஒரு நாள் கூட்டிக் கொள்ள வேண்டியிருக்கிறது. $365\frac{1}{4}$-நாளுக்குச் சிலவினாடிகள் குறைந்த காலத்திலேயே பூமி சூரியனைச் சுற்றிவிடுவதால் நூறு வருஷத்துக்கு ஒருமுறை ஒருநாள் தள்ளவேண்டும்" என்று விளக்கினேன் நான்.

"பூமி சூரியனைச் சுற்றிவரும் காலம்தான் ஒரு வருஷம் என்று வைத்துக்கொள்வானேன்? நம்ப செளகரியப்படி வைத்துக் கொண்டால் என்ன?" என்று கேட்டாள் கோமதி.

"பூமி தன்னைத்தானே சுற்றிக் கொள்வதை ஒருதினம் என்று வைத்துக் கொண்டிருக்கிறோம். பூமி சூரியனைச் சுற்றும் காலத்தை ஒரு வருஷம் என்று கொண்டிருக்கிறோம். பூமி சூரியனைச் சுற்றுவதால் தான் பருவங்கள் ஏற்படுகின்றன. நம்முடைய காலண்டர் சூரிய வருஷத்திலிருந்து வித்தியாசமாக இருந்தால் பருவங்களின் கணக்குத் தெரியாது. அப்புறம் விதைப்பது, அறுவடை செய்வது எல்லாம் கஷ்டமாக இருக்கும்" என்று சொன்னேன் நான்.

"அப்புறம் கோடை விடுமுறை என்று குளிர்காலத்தில் விடுவார்கள்" என்றான் பாலு.

"இங்கிலீஷ் காலண்டரைத் திருத்தியிருக்காளே, நம்ப பஞ்சாங்கத்தைத் திருத்தியிருக்காளோ?" என்று கேட்டாள் கற்பகம்.

அமாவாசையை மாஸக்கணக்காக வைத்துக்கொண்டால் சந்திரனுடைய சலனத்தையொட்டிக் கணிக்கிறோம். இதற்குச் சாந்திராயன மாஸம் என்று பெயர். சாந்திராயன வருஷத்துக்கும் சூரிய வருஷத்துக்கும் 10 நாள் வித்தியாசம். இந்த வித்தியாசத்தை ஈடு செய்வதற்காக மூன்று வருஷத்துக்கொருமுறை ஒரு மாதத்தை மல மாதம் என்று தள்ளிவிடுவார்கள்" என்றேன்.

"அன்னிக்கு ஜோசியர்கூட அப்பாவிடம் இந்தச் சித்திரை மாஸம் முகூர்த்தம் ஜாஸ்தி இருக்காது. ஏன்னா மல மாஸம் என்று சொல்லிக்கொண்டிருந்தார்" என்றான் பாலு.

"எந்த மாதம் இரண்டு அமாவாசை வருகிறதோ அந்த மாதத்தைத் தள்ளிவிடுவார்கள். வரும் சித்திரையில் இரண்டு அமாவாசை வருகிறது" என்று விளக்கினார் அப்பா.

"முகமதியப் பஞ்சாங்கம்கூட சாந்திராயன முறையில்தானே அமைந்திருக்கிறது. அவர்களும் இந்த மாதிரி தள்ளுகிறார்களா?" என்று கேட்டாள் கோமதி.

"இல்லை, அதனால்தான் சரித்திர சம்பவங்களுக்குத் தேதி நிர்ணயிக்கும்போது சரித்திர ஆசிரியர்கள் முகம்மதிய பஞ்சாங்கத்தைத் திருத்தி, தேதி சொல்ல வேண்டியிருக்கிறது. ஆறு வருஷங்களுக்கு ஒரு மாதம் அவர்கள் கணக்கில் தள்ள வேண்டும்?" என்றேன் நான்.

"தமிழ்ப் பஞ்சாங்கத்துக்கு?" என்று கேட்டான் பாலு.

"அதுதான் ஏற்கெனவே சொன்னேனேடா. சூரியன் இருக்கும் இராசிப்படிதான் தமிழ் மாஸம் கணிக்கப்பட்டிருக்கிறதென்று. அப்படின்னா தமிழ் வருஷம் சரியா சூரிய வருஷமாகத்தான் இருக்க வேண்டும்" என்றாள் கற்பகம்.

"சித்திரை 31, வைகாசி 31, ஆனி 32, ஆடி 31, ஆவணி 31, புரட்டாசி 31, ஐப்பசி 30, கார்த்திகை 29, மார்கழி 30, தை 29, மாசி 30, பங்குனி 30 மொத்தம் 365 நாள்" என்று பஞ்சாங்கத்தைப் புரட்டியபடியே கணக்குப் போட்டான் பாலு.

"சித்திரை விஷு என்று ஏன் சொல்கிறார்கள்?" என்று கேட்டாள் சாவித்திரி.

'சூரியன் உத்தராயண தக்ஷிணாயனரேகைகளில் இருக்கும் நாட்களை அயனசந்தி நாள் என்றும் பூமத்திய ரேகையில் இருக்கும் நாட்களை விஷு தினங்கள் என்றும் சொல்கிறோம். ஆங்கிலத்தில் Solstice, equinox என்று இவற்றை முறையே சொல்லுகிறார்கள். ஆக வருஷத்தில் நான்கு தினங்களை முக்கியமாகக் கொண்டாடுகிறோம். சித்திரை முதல் தேதி சித்திரை விஷு. ஆடிப் பிறப்பன்று தக்ஷிணாயன புண்ணியகாலம். பிறகு ஐப்பசி விஷு. அப்புறம் தைமாதம் முதல்தேதி உத்தராயண புண்யகாலம்'' என்றேன்.

''மார்ச்மாஸம் 23-ஆம் தேதியே சூரியன் பூமத்திய ரேகைக்கு வந்துவிடுகிறது. நம்ப கணக்குப்படி ஏப்ரல் 13 தேதி யாகிறது?'' என்றான் பாலு.

''அப்ப நம்ப பஞ்சாங்கம்'' தப்பு என்றாள் கற்பகம்.

''இல்லை பஞ்சாங்கம் கணிக்கப்பட்ட காலத்தில் ஏப்ரல் 13ஆம் தேதிதான் விஷு தினமாக இருந்திருக்கவேண்டும். ஆனால் ஒவ்வொரு வருஷமும் விஷு காலம் சில விநாடிகள் முந்துகிறது. இதை pre-cession of the equinoxes என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். இப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக மார்ச் 23-தேதிக்கு வந்துவிட்டது'' என்று விளக்கினேன்.

''அடேயப்பா, 20-நாள் வித்தியாசம் வர எத்தனை வருஷம் ஆயிருக்கும்!'' என்று ஆச்சரியப்பட்டான் பாலு.

''இதிலிருந்து நம்முடைய பஞ்சாங்கம் பல ஆயிரம்வருஷங்களுக்குமுன் கணிக்கப்பட்டதென்று தெரிகிறது'' என்று தன் ஆராய்ச்சி முடிவைத் தெரிவித்துக்கொண்டாள் கோமதி.

''பழைய காலத்திலே நாழிகைக் கணக்கு வைத்துக்கொண்டிருந்தார்கள். இப்பொழுது மணிக்கணக்கு வைத்துக் கொண்டிருக்கிறோம்'' என்றாள் கற்பகம்.

''காலம் என்றால் என்ன என்பதே தெரியாமல் விஞ்ஞானிகளும் வேதாந்திகளும் மூளையைக் குழப்பிக் கொண்டிருக்கிறார்கள். காலத்தை சில நிகழ்ச்சிகளைக்கொண்டுதான் அளக்கமுடிகிறது. சூரியோதயத்திலிருந்து மறுநாள் சூரியோதயம்வரை ஒருநாள் எனக் கொண்டு வான வீதியில் சூரியனுடைய நிலையைக்கொண்டு ஒருநாளை நாழிகைகளாகப் பிரித்தார்கள். சூரியன் வட்டமான பாதையில் சஞ்சரிப்பதுபோல் தோன்றுகிறது. ஒரு டிகிரி நகரும் நேரம் 10 விநாடி 6°நகரும் நேரம் ஒரு நாழிகை. 360°—60 நாழிகை எனக் கணக்கிட்டிருக்கிறார்கள்'' என்றேன்.

''அதனால்தான் வட்டத்தை 360°—யாகப் பிரித்திருக்கிறார்கள் போலிருக்கிறது'' என்றான் பாலு.

''மணிக் கணக்குக் கூட நாழிகையிலிருந்து வந்ததுதான். ஒருநாளை 24 ஹோரைகளாகப் பிரித்தார்கள். பகல் ஹோரை பன்னிரண்டு, இரவுஹோரை பன்னிரண்டு என்று. ஆகஒரு ஹோரைக்கு $2\frac{1}{2}$ நாழிகை ஆகிறது. ஹோரை என்ற வார்த்தை ஸம்ஸ்கிருத ஹோரா'விலிருந்து வந்தது'' என்று நான் சொல்லிக்கொண்டிருக்கும்போதே ''ஆமாம், 'கடக நல்லோரை என்று ஒரு தனித்தமிழ் கல்யாண அழைப்பில் போட்டிருந்தது'' என்றாள் கற்பகம்.

''தனித்தமிழ் என்றால் நண்டு நல்லோரை என்று போடவேண்டும்'' என்றான் பாலு. எல்லாரும் சிரித்தார்கள்.

''நான் சொல்லி முடிப்பதற்குள் குறுக்கே பேசாதே. ஹோரா என்பது லத்தீன், கிரேக்க பாஷைகளில் 'ஹோர்' என்று ஆயிற்று, ஆங்கிலத்தில் 'ஹோர்' என்ற வார்த்தையை அவர், என்று உச்சரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அதை நாம் மணி என்று மொழி பெயர்த்திருக்கிறோம்.' என்று சொல்லி முடித்தேன்.

''எச், ஓ, யு, ஆர் — ஹோர்'' என்று உச்சரித்துப் பார்த்துக்கொண்டான் பாலு.

''வளவளவென்று பேசிக்கொண்டேயிருக்கிறீர்கள். மணி ஒன்பதாகிவிட்டது'' என்றார் அப்பா.

''ஒன்பதாவது இரவு ஹோரை ஆரம்பித்து விட்டது'' என்றாள் கற்பகம்.

''சித்திரை மாதம் புது வருஷம் என்கிறோம். பொங்கல் வந்தால் பொங்கல் புது வருஷம் என்கிறோம்'' என்று பேச்சைத் தொடர்ந்தான் பாலு.

''மார்வாடிகளுக்குத் தீபாவளிதான் புது வருஷம்'' என்றாள் கற்பகம்.

''முக்கியமான பண்டிகையைப் புது வருஷப் பிறப்பாகக் கொண்டாடும் வழக்கம் உண்டு. இங்கிலீஷ் காலண்டரில்கூட முன்பு மார்ச்மாதம்தான் புதுவருஷமாக இருந்தது. கிறிஸ்துமஸ் பண்டிகையை யொட்டிப் பின்

ஞல் ஜனவரியைப் புது வருஷமாக வைத்துக் கொண்டார்கள். வேறு ஒரு காரணமும் உண்டு" என்றேன் நான்.

"அது என்ன?" என்று ஆவலுடன் கேட்டான் பாலு.

"ஜனவரி என்ற பெயர் 'ஜேனெஸ்' என்ற கடவுளைக் குறித்து ஏற்பட்டது. ஜேனஸ் ஸுக்கு இரு முகங்கள் உண்டு என்று ஐதீகம். ஒரு முகம் கடந்த காலத்தையும் இன்னொரு முகம் எதிர்காலத்தையும் நோக்குவதாகக் கருத்து. ஆகையால் ஜனவரியைக் கடந்த வருஷமும் வரும் வருஷமும் சந்திக்கும் புது வருஷமாகக் கொண்டார்கள்" என்று விளக்கினேன்.

"அப்படியானல் மற்ற மாதங்களுக்கு எப்படிப் பெயர் வந்தது?" என்று கேட்டாள் கோமதி.

"ஜூலை ஆகஸ்டுக்கு ஏற்கனவே காரணம் சொன்னேன். ஜூனே என்ற கடவுளைக் குறித்து ஜூன் ஏற்பட்டது. மார்ச் மாதம் முதல்மாதமாக இருந்தபோது ஸெப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் முறையே 7, 8, 9, 10 ஆம் மாதங்களாக இருந்தன. இப் பெயர்கள் ஸம்ஸ்கிருத மூலமுள்ளவை. ஸப்தமம், ஸெப்டம்பராகவும், அஷ்டமம் அக்டோபராகவும் நவமம் நவம்பராகவும் தசமம் டிசம்பராகவும் மாறின" என்றேன்.

"அப்படியானல் எல்லா மாதங்களுக்கும் ஏன் இதே மாதிரி பெயர்கள் இல்லை?" என்று கேட்டாள் கற்பகம்.

"மற்ற மாதங்களுக்கெல்லாம் ஒவ்வொரு காரணத்தைக்கொண்டு பெயரை மாற்றி விட்டார்கள்" என்று சொன்னேன் நான்.

'பிப்ரவரி, மார்ச், ஏப்ரல், மே—இந்தப் பெயர்களுக்குக் காரணம்?"

"எனக்கு ஞாபகமில்லை. Encyclopaedia Britannica—வைப் பார்கக வேணடும்" என்று சொல்லிச்சமாளித்துக்கொண்டேன்.

"நம்ப தேசத்திலே இப்பொழுது எத்தனையோ பஞ்சாங்கம் இருக்காம். எல்லோருக்கும் பொதுவாக ஒரு தேசீயப் பஞ்சாங்கம் ஏற்படுத்தப் போருளாம். பேப்பரிலே போட்டிருந்தது" என்ருன் பாலு.

"இவா போட்டுட்டா அதை யாரு பின்பற்றப் போரு. அவரவர்கள் வழக்கப் படிதான் பஞ்சாங்கம் பார்ப்பார்கள்" என்ருர் அப்பொழுதுதான் பத்திரிகையைப் படித்து முடித்துக் கீழே வைத்த வேங்கடராமையர்.

"ரஷ்யாவிலே கிழமையே கிடையாதாம்" என்ருள் கோமதி.

"பாவம், அவர்களுக்கு ஞாயிற்றுக் கிழமையின் அருமையே தெரியாது" என்ருன் பாலு.

"இங்கிலீஷ் காலண்டரைக்கூட இப்பொழுது சீர்திருத்தியமைக்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிருர்கள்" என்றேன்.

"எதற்காகச் சீர்திருத்தவேண்டும்? அது தான் சரியாக 365 நாள் இருக்கே" என்ருள் கற்பகம்.

"இப்பொழுது ஒவ்வொரு வருஷமும் வெவ்வேறு கிழமையில் ஆரம்பிக்கிறது. அதனல் ஒரு வருஷம் போட்ட காலண்டர் அடுத்த வருஷத்துக்குப் பிரயோஜனமில்லை. எல்லா வருஷங்களுக்கும் காலண்டர் ஒரேமாதிரி வரும்படி செய்ய வேண்டுமென்கிருர்கள்"

"அது எப்படி முடியும்? எல்லாம் பேத்தல்" என்ருர் திண்ணையில் படுக்கையை விரித்தபடி, என் தகப்பனர்.

"இல்லை 28 நாள் அடங்கிய 13 மாதங்களாகச் செய்து விட்டால் சரியாக ஒரு மாதத்துக்கு நான்கு வாரம் இருக்கும். ஒவ்வொரு மாதமும் ஞாயிற்றுக்கிழமையில் ஆரம்பித்து, சனிக்கிழமை முடியும்"

அப்பொழுது 365 நாள்தானே ஆகிறது. பாக்கி ஒருநாள்? என்று கேட்டான் பாலு.

"அதுவா, 'ஒவ்வொரு வருஷமும் அந்தக் கடைசி நாளை உலக விடுமுறை தினமாக விட்டு விட வேண்டும். அன்று தேதியும் கிழமையும் கிடையாதென்று வைத்துக்கொள்ளவேண்டும். என்று சொல்கிருர்கள்"

"அப்படிச் செய்தால் ரொம்ப வேடிக்கையாக இருக்கும். அன்றைக்குப் பிறக்கும் குழந்தைகளுக்குப் பிறந்த நாள் தேதியில்லாத நாள் எனறு குறிக்கவேண்டும்" என்ருன் பாலு,

"லீப் வருஷத்தில் இரண்டு நாளைக்குத் தேதியிருக்காது" என்ருள் கற்பகம்.

"வருஷத்தில் 13 மாதம் என்ருல் ஒரு மாதம் சம்பளமாவது கூட ஆச்சு" என்ருர் அப்பா.

"நீங்க பாட்டுக்கு சொப்பனம் காணவேண்டியதுதான். இந்த மாதிரி காலண்டர் வரும் பக்ஷத்

தில் உடனே நம் காருண்ய சர்க்கார் சம்பளத்தைக் கணக்குப்போட்டுக் குறைத்துவிடமாட்டார்களா" என்றார் வேங்கடராமையர்.

"அதுவுமில்லாமல் முதல்தேதி ஞாயிற்றுக்கிழமையானால் மாதாமாதம் இரண்டாந்தேதி தான் சம்பளம் கிடைக்கும்" என்றான் பாலு.

"காலண்டர் சீர் திருத்தமாவது மண்ணாங்கட்டியாவது, எல்லாம் அபத்தம்" என்றார் அப்பா. பாவம், அவருடைய குஷி போய்விட்டது!

'ஏம்பா, காலண்டரெல்லாம் அழகழகா அச்சுப்போடறாளே, அதுமாதிரி பஞ்சாங்கமும் போட்டால் என்ன?" என்று கேட்டான் பாலு. ஒவ்வொரு மாதத்துக்கும் ஒரு தனித்தாள் போடணும். அதிலே ஒரு காலத்தில் (Column) தேதி போடணும். திதி, வாரம், யோகம் நட்சத்திரம் கரணம்னு அததுக்கு நேரே ஐந்து 'காலம்' போடணும். வேணும்னா ஓரத்திலே விசேஷக் குறிப்புகள் என்று தனியாக ஒரு காலம் போட்டுக்கொள்ளலாம் என்றாள்" கோமதி.

"இன்னும் என்னெல்லாமோ பஞ்சாங்கத்தில் போட்டிருக்கிறதே" என்றான் பாலு.

"அதெல்லாம் வேணும்னா தாளுக்குப் பின்பக்கம் போட்டுக்கொள்ளலாம். அழகாகப் பஞ்சாங்கம் இருந்தால் அதைக் காலண்டர் மாதிரி ஆணியில் மாட்டிக்கொள்ளலாம். ஒவ்வொரு தரமும் பஞ்சாங்கம் எங்கே என்று வீடு இரண்டாகப் போகும்படி தேடவேண்டிய அவசியமில்லை." என்றாள் கோமதி.

"அந்தந்தச் சாமானை இருக்கிற இடத்திலே வெச்சாதானே" என்று அம்மாவின் முணுமுணுப்பு உள்ளேயிருந்து கேட்டது.

"பிரயாணம் செய்ய, வேலைக்கு அப்ளிகேஷன் போட, பரீக்ஷைக்குப் பணம் கட்ட, இண்டர்வ்யூவுக்குப் புறப்பட, காலேஜில் ஸீட்டுத்தேட, பகுத்தறிவுப் போட்டி, ரேஸ் முதலியவற்றில் பணம் கட்ட - இதுக்கெல்லாம் எந்தெந்த நாள் தேவலைன்னு விசேஷக் குறிப்புக் காலத்தில் போடவேண்டும்" என்று தொடர்ந்தாள் கோமதி.

"யோசனை ரொம்ப அபாரந்தான், பங்குனியிலேயே உஷ்ணம் வறுத்தெடுக்கிறது. போய் கொஞ்சம் மோர் தீர்த்தம் கொண்டுவா" என்றார் அப்பா.

"பஞ்சாங்கம் படித்தால் நீர்மோர் பானகமெல்லாம் உண்டு, அதைப்பற்றிப் பேசினால் கூட நீர்மோர் உண்டுபோலிருக்கிறது" என்றான் பாலு.

"எனக்கும் தாகமாக இருக்கிறது, எல்லாருக்கும் சேர்த்துக்கொண்டு வா" என்றேன் நான்.

"நல்லவேலை, மணி பத்தாகிவிட்டது. நான் போகிறேன் வீட்டுக்கு" என்று கிளம்பினார் வேங்கடராமையர்.

"என்ன பிரமாதம். எதிர்திண்ணைக்குப் பதில் இந்தத் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறீர்கள், அவ்வளவுதானே" என்றார், அப்பா. இதற்குள் மோர் தீர்த்தம் வந்தது. தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்த அம்பிப்பயல் அழ ஆரம்பித்ததும் காதில் கேட்டது.

குழந்தையைக்கூடக் கவனிக்காமல் வளவளவென்று என்னபேச்சு வேண்டியிருக்கிறதென்று அம்மா அலுத்துக்கொண்டதும் காதில் விழுந்தது. ஆக மகாநாட்டைக் கலைத்துக்கொண்டு அம்பியைக் கவனிக்க உள்ளே சென்றேன். பஞ்சாங்கபுராணமும் முடிந்தது.

---



# பிள்ளை வரம்

ர. வேங்கடரத்தினம்

"சௌக்கியந்தானே? என்ன, அவசரமாகப் போகிறாப்போல் இருக்கிறது?"

திரும்பிப் பார்த்தார் சட்டநாத முதலியார். கும்பிடும் கையுடன் குறுக்கே நின்றார் வைரவேல் முதலியார்.

'அவசரம் ஒன்றும் இல்லைங்க. நமக்காக இந்த உலகத்திலே என்ன காரியம் காத்துக்கொண்டிருக்கிறதுங்க? மெதுவாகப் போனால் போகிறது வீட்டிற்கு'

சட்டநாதர் குரலிலே வழக்கத்துக் குறை கரையிட்டிருந்தது. அவர் குறைகளும் குறைவுகளும் நிறைந்த குமாஸ்தாக் குலத்து உதித்தவர்; ஏக்கத்திலும் இறக்கத்திலுமேயே ஏற்றம் காணும் எழுதிப் பிழைக்கும் வர்க்கத்து உறுப்பினர்; தம் குடும்ப வாழ்க்கையைப் பொறுத்த மட்டில் மன நிறைவும் மகிழ்ச்சியும் எட்டாத பழமென்ற முடிவிற்கு வந்து ஏமாந்த நரியாக உலாவுபவர்.

வைரவேலரோ நகை வியாபாரத்தில் குபேரப் பதவியை எட்டிப் பிடித்தவர்; நாட்டு நபரின் சராசரி வருமானம் கணக்கெடுக்கையில் அதை ஒருமிக்கத் தூக்கிவிடும் ஒரு சிலருள் அவர் ஒருவர். இருந்தும், நல்லவர் என்ற பெயரும் எடுத்தவர், பணமும் பதவியும் இருந்தும். அவர் ஏழை சட்டநாதருக்குக் கும்பிடு போட்டுக் கூப்பிடுகிற நிலையில் இருந்தது தான் சிருஷ்டியின் விசித்திரம் போலும்!

'வாங்க! என்ன, நீங்க நம் கோரிக்கையை மறந்துவிட்டாப்போல் இருக்கிறது?'

சட்டநாதர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

வைரவேலர்— 'என்னடா, இது பெரிய வம்பாய்ப் போய்விட்டது. பொழுது விடிந்தால் மனுஷன் தொந்தரவு பண்ணுகிறான்.' என்று நினைக்காதீங்க.

'சேசே, அப்படியெல்லாம் நினைப்பேனா?' என்று தலையைச் சொறிந்தார் சட்டநாத முதலியார்.

'நானும் ஒரு வருஷமாக உங்களைக் கேட்டுக் கொண்டே வந்திருக்கிறேன். எப்பொழுது உங்களுக்குத் தயவு பிறக்கப் போகிறதென்று தான் தெரியவில்லை.'

சட்டநாதர் கால் கட்டவிரல் நுனியினால் சலவைக்கல் தரையில் சித்திரம் வரைந்தவண்ணம் இருந்தார்.

'நான் கடைசியாக உங்களிடம் பேசியது இரண்டு மூன்று மாதம் முன். அதற்கப்புறம் உங்களைக்கண்டு ஞாபகப்படுத்தக்கூட முடியவில்லை.'

'ஆமாம்' என்று இழுத்தார் சட்டநாதர்.

'நீங்க அப்புறம் கேட்டீங்களா வீட்டிலே? நீங்க சம்மதித்து விட்டால், வீட்டிலே கேட்க வேண்டும் என்கிறதுகூட இல்லை. இருந்தாலும், வீட்டிலேயும் சரியென்கிற பதில் கிடைத்து விட்டால் தீர்ந்தது; என் ஆசையைப் பூர்த்தி செய்து விடுவீங்க. அப்படித்தானே? என்ன நான் சொல்கிறது?'

வைரவேலர் பேச்சில் குரல் கொடுத்த அவருள்ளத்து ஏக்கமும் ஆசையும் சட்டநாதருக்குத் தெள்ளெனத்தெரிந்தன. அவ்வளவு தூரம் இரங்கும் அவருக்கு என்ன சொல்வதென்று சட்டநாத முதலியாருக்குப் புரியவில்லை.

'என்ன, ஒன்றுமே பேசாமல் இருக்கீங்க? நீங்க சம்மதம் என்று விட்டால் சரி; தெய்வத்தையே நேரில் கண்டாற் போலக் கூத்தாடுவேன். ஒரு வார்த்தை மட்டும் 'இம்'மென்று விடுங்க; நான் வேறொன்றும் கேட்கவில்லை.'

சட்டநாதருக்குச் சம்மதித்துவிடலாம் என்று கூடத் தோன்றியது. நான் சம்மதித்துவிட்டால் கூட, அவள் - வீட்டிலே - சரி என்கமாட்டேன் என்கிறாளே? இவர் கெஞ்சுவ தென்னவோ பரிதாபமாய்த்தான் இருக்கிறது. இருந்தாலும், அவள் சம்மதிக்க மறுக்கிறாளே! இவர்கள் இரண்டு பேருக்கும் நடுவிலே என் பிழைப்புத் தான் மத்தளமாய் இருக்கிறது. வருவது வரட்டும், தெய்வம் இருக்கவே இருக்கிறது என்று ஈசுவரன் மேல் பழியைப் போட்டுவிட்டுப் பேசாமல் இவருக்கு இணங்கிவிடலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. பாவம், மனுஷன் எப்படிக் கெஞ்சுகிறார்! இவரெல்லாம் என்னிடம் இப்படிக் கெஞ்சும்படி தெய்வம் வைத்ததே தப்பு. எனக்கு

நாலைந்து தந்ததே, அந்தத் தெய்வம் இவருக்கொன்று தந்திருக்கக் கூடாதோ? இவர் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்வதிலே அந்தத் தெய்வத்துக்குத்தான் என்ன சந்தோஷமோ!

'நான் கேட்டதற்கு நீங்கள் பதில் சொல்லவே இல்லிங்களே? வீட்டிலே போய்க் கேட்டீங்களா? அவங்க சம்மதிக்கிருங்க அல்லவா?'

'மறந்து மறநது போய்விடுகிறது. நான் எப்படியும் கேட்கிறேன்' சட்டநாதருக்குப் பொய் சொல்ல வேண்டியாகிவிட்டது. அவர் தம் மனைவியைக்கேட்டது, அதற்கு அவள் கொடுத்த பதில் ஆகியவற்றை வீணில் வைரவேலருக்குக் கூறி அவர் ஆசையை அணைக்க விருப்பமில்லை.

'நீங்க சம்சாரத்தைக் கேட்பதோடு நின்று விடக்கூடாது. எனக்காகப் பெரியமனசு பண்ணி, நாலுவார்த்தை சொல்லி அவங்களைச் சம்மதிக்க வைக்கவேண்டும். நான் உங்களிடம் ரொம்பக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். என் குறையைத் தீர்த்துவைக்கவேண்டும்.'

'ஆகட்டும், நான் வீட்டிலே போனதும் எப்படியும் நினைவாய்க் கேட்டுச் சொல்கிறேனுங்க.'

'ஆமாம், உங்க தயவுவேண்டும்' என்று நாத்தழுதழுக்கக் கடவுளுக்கு முன் உருகும் பக்தனைப் போலக் கூப்பிய கரத்துடன் வாயில்வரை வந்து வழியனுப்பிவிட்டு வைரவேல் முதலியார் சென்ற காட்சி சட்டநாதர் கண்ணெதிரே நின்றது. அவர் உறுதி செய்துகொண்டு விட்டார், வைரவேலருக்கு அளித்த வாக்கை எப்படியும் நிறைவேற்றி வைப்பதென்று. அவள் மறுத்தாலும், விடக்கூடாது, எப்படியாவது மசிய வைக்க வேண்டும். மனுஷன், பாவம், இந்த மனக்குறையிலேயே செத்துவிடுவார் போல் இருக்கிறது. இவர் மனைவிதான் போன வருஷம் இந்தத் தாங்கலிலேயே ஏக்கம் பிடித்துக் கண்ணை மூடிவிட்டாள்; அவளைப்போல இவரும் குழநதை இல்லையே என்று பிதற்றலும் பிடுங்கலுமாகப் படுத்த படுக்கையாகிக் கிடந்து சாக வேண்டாம். இவரையாவது காப்பாற்றி வைக்கலாம் என்று சட்டநாதர் எண்ணினுர்.

## 2

விளக்கை அணைத்தார், குழந்தைகள் யாவும் படுத்துக்கொண்டு விட்டனவா என்று ஓர் முறை பார்த்துவிட்டு. மூத்தவன் மட்டும் மாடியில் வாசித்துக் கொண்டிருந்தான். அவன் குரலைத்தவிர, மற்றப்படி எங்கும் அமைதி கமழ்ந்திருந்தது, உலக சமாதானம் பரிபூரணமாகக் குடிகொண்டிருந்தது. சட்டநாதர் தொண்டையைக் கனைத்துக்கொண்டு 'அடியே' என்று அடியாளிடம் ஆரம்பித்தார். கைக்குழந்தையைச் சற்று நகர்த்தி விட்டுவிட்டு, சிவகாமி 'என்ன' என்று புருஷன் புறம் நெருங்கிப் படுத்தாள்.

'பிள்ளைகளெல்லாம் தூங்கிப் போய்விட்டதுகளோ, இல்லையோ?' என்று சட்டநாதர் வினவினர்.

'எல்லாம் தூங்கி ஒரு நாழி ஆகப்போகிறது. நம்பெண்ணரசிகள் இரண்டு பேருந்தான் எட்டரை மணிக்கே தூங்கி விடுமே. பையன்களும் தூங்கி விட்டாங்க. ஏன், அப்பேர்பட்ட ரகசியம் என்ன கொண்டுவந்திருக்கீங்க?'

சட்டநாதர் ஒரு நிமிடம் கூர்ந்து கேட்டார். சுவர்க்கடியாரமும் சுவர்க்கோழியும் தாம் காலத்தை எட்டிப் பிடிக்கிற முயற்சியில் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தன; அரவம் வேறு ஏதும் இல்லை. குழந்தைகள் எல்லோரும் தூங்கிப்போய்விட்டனர் என்ற திருப்தியுடன் சட்டநாதர் மீண்டும் தொடங்கினுர்.

'பழையபடி வைரவேல் முதலியார் இன்றைக்குக் காரியாலயத்திலிருந்து வரும்போது பிடித்துக் கொண்டுவிட்டார் விடமாட்டார்போல் இருக்கிறது. ரொம்பக் கெஞ்சுகிறுர் மனுஷன். கேட்பதற்குப் பரிதாபமாய் இருக்கிறது. எனக்கே என்ன செய்கிறதென்று புரியவில்லை.''

''இதைத்தான் பிரமாதமாய் சொல்ல வரீங்களா? அவர் பேச்சையே எடுக்காதீங்க; வேண்டாம்; குருட்டுத் துணிச்சலில் ஏதாவது பண்ணிப்பிட்டு, நாளைக்குப் பிள்ளைக்குத் தலையை—காலை வலித்தால், வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருக்க முடியாது என்னுலே.''

''ஏண்டி, என்னுலேமட்டும் முடியும் என்கிறயா? அவர் கெஞ்சு, கெஞ்சென்று கெஞ்சுகி



''ஆமாம் உங்க தயவு வேண்டும்.........'

ருரே, அதற்கு என்ன பண்ணுவது? என்னை விட மாட்டேன் என்கிருர். காலில் விழுந்து பிச்சை கேட்கிறதொன்றுதான் பாக்கி; அப்படித் துடிக்கிருரே!''

''துடித்தால் துடிக்கட்டும் நன்ருய்! அவர் மனம் துடித்தால், பலிகொடுப்பதற்கு நம் குழந்தைகளா அகப்பட்டது! வேறெங்கேயாவது பார்த்துக்கொள்ளட்டும். தத்து எடுத்துக்கொள்கிறதற்கு நம் பிள்ளைகள் தான் கிடைத்ததா?''

''வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு..........''



இல்லை. இப்போது மனுஷன் இன்னும் தயக்கமில்லாமல், வாய் கூசாமல் நம் பிள்ளைகளுக்கு அடிபோடுகிருராக்கும்!''

இவள் என்னேடெங்கே ஒத்துழைக்கப் போகிருள் என்று சட்டநாதர் கசந்து கொண்டார்.

'அவரிடமோ இதுமட்டும் தத்து எடுத்துக் கொண்ட ஒரு குழந்தையும் தங்கவில்லை. எல்லாம் ஒன்றைப் பார்க்க ஒன்று துரத்திக்கொண்டு போய்விட்டது. நம் குழந்தைகளிலேயும் ஒன்றை அதுகளோடே சேர்த்தனுப்பவேண்டும் என்று பாக்கிறீங்களாக்கும்!'

''வாய்க்கு வந்தபடி பேசாதேடி! நமக்கோ தெய்வம் நிறையக் கொடுத்திருக்கிறது குழந்தைகள். பிள்ளைகளிலே ஒருத்தன் இப்போதுதான் கல்லூரியை மிதித்திருக்கிருன்; பெண்களில் ஒருத்தி புருஷன் வீடு போயிருக்கிருள். இன்னும் இரண்டு பெண்கள், மூன்று பயல்கள் கையிலே இருக்கின்றனர்.........''

''அதற்காகப் பெற்ற குழந்தைகளை யமன் கையிலே பத்திரமாய் ஒப்படைக்கவேண்டுமென்று அர்த்தமா?'' ஆவேசம் வந்தவள்போலக் கூவினுள் சிவகாமி.

''நான் சொல்லுவதை முழுதும் கேளடி, குறுக்கே பாய்கிறயே!''

சட்டநாதருக்கு மனைவியின் பேச்சுப்போக்கு ஏமாற்றம் ஊட்டுவதாக இருந்தது.

''என்னடி, ஆனுலும் இப்படிப் பேசுகிறே? அவர் சம்சாரம் தான் அநியாயமாய்க் குழந்தையில்லாக் குறையிலேயே செத்துப்போனுள்; அவரையாவது நாம் காப்பாற்றக்கூடாதா? அவரும் இந்த வயசுக்காலத்திலே குழந்தை இல்லையே என்று ஏங்கிச் சாகவேண்டும் என்கிருயாடி?''

''அதற்கு நம் பிள்ளைகளா பிணை? அவர் தலைவிதி அப்படி இருந்தால், அதற்கு யார் என்ன செய்யமுடியும்? இதற்கு முன்னலே எங்கேயோ மூன்று பிள்ளைகள் அடுத்தடுத்து, தத்து எடுத்துக்கொண்டாரே, அவ்வளவையும் யார் சாக அடிக்கச்சொன்னுங்க? தத்து எடுத்துக்கொண்ட குழந்தை ஒவ்வொன்றையும் யமனுக்குப் பலி கொடுத்து விட்டதிலே ஒன்றும் குறைச்சல்

''சரி, சொல்லுங்க.''

சட்டநாதர் நம்பிக்கையில்லாமல் விளக்கினுர்— ''நாம் எப்பொழுது பண்ணிய புண்ணியமோ, நமக்குத் தெய்வம் நிறையக் குழந்தைகள் கொடுத்திருக்கிறது. அவருக்கோ கடுகத்தனை ஒரு குழந்தைக்கும் விதியில்லை. நமக்குத் தெய்வம் கொடுத்திருக்கிறதிலே ஒன்றை அவருக்குப் பங்கு கொடுத்தால், தெய்வம் நம்மை வாழ்த்தாதாடி? அந்தக் குழந்தையை நன்ருய் வைக்காதா?''

ஊஹூம் சிவகாமி அசைந்து கொடுக்கவில்லை.

'இப்போதைக்கு, கொடுத்தால் குமரனைத்தான் கொடுத்தாகவேண்டும். ஏனென்ருல், மூத்தவன் தான் படித்துப் பட்டம்பெற்றுப் பதவிக்கு வந்து நம்மையெல்லாம் காப்பாற்றப் போகிருன் என்று நான் நம்புகிறேன்; நீங்களும் எனக்குமேலே நம்பிக்கை வைத்திருக்கீங்க. அடுத்தது குமரன். அவனை விட்டால், வேலனுக்கு மூன்று வயசு,

அவனையோ கைப்பிள்ளையையோ எப்படிக் கொடுப்பது? ஆகக் கூடி மிஞ்சுவது குமரன் ஒருத்தன் தான். மற்றவங்களையெல்லாம் காப் பாற்றுகிற தெய்வம் அவனையும் நம்மிடம் வைத்துக்கொண்டே காப்பாற்றும்; வீணாக வைர வேல் முதலியாருக்குப் பலி கொடுக்கவேண் டாம்.'' உணர்ச்சியில் உருத்தாள் பெற்றவள்.

''உஷ்! மெதுவாய்ப் பேசடி. குமரன் விழித் துக்கொண்டுவிடப் போகிறான்.' சட்டநாதர் சாவதானப்படுத்தினார். சிவகாமி திரும்பிப் பார்த் தாள். குமரன் அப்போது ஒருக்களித்துப் படுத் துக்கொண்டான். அவன் விழித்துக்கொண்டி ருப்பானோ என்று சிவகாமிக்குத் தோன்றியது. 'குமரா' என்று அழைத்துப்பார்த்தாள், நல்ல வேளை, தூங்கிக்கொண்டிருக்கிறான், அதனால் தான் பதில் இல்லை என்று சிவகாமி மேலே தொடர்ந்தாள்.

''பார்க்கப்போனால், எல்லாரையும்விட நம் குமரன் தான் கெட்டிக்காரன். அவனை மட்டும் பிரித்து வைப்பானேன்?''

''அவன் கெட்டிக்காரன் என்பதனால்தானடி நானும் சொல்கிறேன். அவனை அவருக்குக் கொடுக்கலாம். அவன் எங்கே இருந்தாலும் பிழைத்துக்கொள்வான்.'

'நல்லாயிருக்குதே உங்க நியாயம்! கெட்டிக் காரப்பிள்ளை என்றால், யமன் கையிலே கொடுக் கச் சொல்லியிருக்கிறதா?''

சட்டநாத முதலியார் 'ஆரம்பித்துவிட்டாளா இவள் பழையபடி' என்று மனத்திற்குள் கடுத் துக்கொண்டார். என்ன இருந்தாலும், வைர வேலருக்குத் தத்துக்கொடுக்க அவரும் பரிபூர ணமாக விரும்பவில்லை. மூட நம்பிக்கையோ அல்லவோ, அவர் மனமும் பயப்படத்தான் செய்தது. வைரவேலரிடமோ ஒரு குழந்தையும் தங்குவதில்லை; எதற்கு வீண் விஷப்பரீக்ஷை என்றொரு புறம் மனம் சிறகடித்தது.

கடிகாரம் பன்னிரண்டு முறை ஒலித்தது.

''மணி ஆச்சு பன்னிரண்டு. சொல்லு ஒரு முடி வாய், தூங்கலாம்; விடியற்காலையில் எழுந்து கொள்ளவேண்டும் நாளைக்கு.''

''நான்தான் சொல்லிவிட்டேனே ஒரே முடி வாய்! இருக்கிறமட்டும் அவரிடம் ஒரு குழந்தையை யும் பலி கொடுக்க விடமாட்டேன். நான் போய் விட்டால், நீங்க என்னவேண்டுமானாலும் செய்து கொள்ளுங்க : நான் சாகிறபோது கூட உங்களி டம் ஒரு வார்த்தை வாங்கிக்கொண்டு தான் போவேன். குழந்தைகளை அவரிடம் தருவதில்லை யென்று சபதம் வாங்கிக்கொள்ளாமல் நகர்ந்து விடுவேனா?''

''குமரா?—சிறு குரலில் சட்டநாதர் அழைத் துப் பார்த்தார். அவன் விழித்துக்கொண்டிருப் பானோ என அவருக்குச் சந்தேகம்!

'' தூங்குகிறவனை எதற்குத் தட்டிக் கூப்பிடுகி றீங்க?''

''அவன் திரும்பிப் படுத்தான். சற்று முந்தி. விழித்துக் கொண்டிருக்கிறானோ என்று கூப்பிட் டேன்''

'' தூங்கிக்கொண்டிருப்பவனை எழுப்பி விடுகி றீங்களோ என்று பார்த்தேன்.''

''ஆமாண்டி, உன் மூளை எனக்குக் கிடையா தல்லவா?'' சட்டநாதர் முகத்தில் கோபம் படர்ந் தது. மனைவியின் ஒத்துழையாமை இயக்கம் அவர் சினத்திற்குக் காரணம். அவர் கோபத் தோடு கேட்டார்; ''ஆக நீ பிடிவாதமாய் இருக் கிறே? கொஞ்சம் கூட விட்டுக்கொடுக்க மாட்டே?''

'' நல்லாப் பேசுகிறீங்க! அவர் பணத்தையும் பங்களாவையும் கண்டு மாறிவிட்டீங்களா என்ன? சுவீகாரம் கொடுத்தால், அவர் சொத் தெல்லாம் வருமென்ற ஆசையிலே பேசுகிறீங் களா?''

'' இல்லையடி அந்த மனுஷன் கெஞ்சுகிறதைப் பார்த்தால் என் மனம் கேட்கமாட்டேன் என்கிறது.''

தம்பதிகள் பேச்சு முறிந்தது முடிவடை யாமலேயே.

3

சட்டநாதர் அலுவலகத்தினின்று வந்ததென் னவோ தினம்போல் தான்; ஆனால் வந்தவர் மீண்டும் அங்குச் செல்லவேயில்லை. படுத்தவர் படுத்த படுக்கையாகிவிட்டார். சிவகாமி சிந்தை தோய்ந்தமுகத்தோடு குறுக்கும் நெடுக்குமாகத் தேசப்படத்திலே அட்சரேகைகளும் தீர்க்கரேகை களும் போல நடந்து நடந்து தேய்ந்துகொண் டிருந்தாள். அவள் முகத்துச் சீவன் பறந்துபோய் விட்டது. வீட்டிலே வேண்டியவர் வேண்டாதவர் எல்லோர் கூட்டமும் நிறையச் சேர்ந்துவிட்டது. டாக்டர்களே இரண்டுபேர் வந்து நோயாளியைக் கவனித்தனர். சிவகாமி முன்பெல்லாம், இரண்டு டாக்டர் வந்தாலே, நோயாளியின் அந்திக்காலம் நெருங்கி விட்டதென்றுதான் அர்த்தம் என்பாள். அவள் வீட்டிலும் இரண்டு டாக்டர்கள் கார் வந்து நின்றன, இரண்டு இரப்பர்க்குழாய்கள் நோயாளியின் இதயத்திற்குப் பாலம் அமைத் துப் பரீட்சித்தன; இரண்டு டாக்டர்களும் உதட்டைப் பிதுக்கினர். சட்டநாதர் காலமானார்.

—இதெல்லாம் பழைய கதை, அதாவது ஏழெட்டு மாதங்களுக்கு முன் நடந்தவை. சிவ காமி அழுதழுது தெளிந்தாகி விட்டது. மேற் கொண்டு ஆகவேண்டுவனவற்றைக் கவனிக்க வேண்டும் என்ற விரக்தி வேதாந்தத்தில் அவள் செயலாற்றி வந்தாள். அவள் உடன்பிறந்தான் தன்னோடு வந்திருக்குப்படி அவளை, சாவிற்கு வந்தபோதே அழைத்தான். ஆனால், அவள் 'வேண்டாம்' ஒரு வருஷம் போகட்டும். அவர்

இருந்த இடத்தைவிட்டு அதற்குள் நகர வேண்டாம்' எனக்கூறி விட்டாள்.

சாவின்போது வந்திருந்த அந்த அண்ணன் இப்பொழுது வந்திருந்தான். அவன் தான் எல்லாப் பொறுப்பும் ஏற்றுக் கொண்டிருந்தான். மூத்தவன், கல்லூரியில் படிப்பவனுக்கு உதவிச் சம்பளத்திற்கு ஏற்பாடு செய்து விட்டு, அடுத்த மருமகளுக்கு மணமகன் தேடுவதில் இறங்கியிருந்தான்.

''சிவகாமி, இன்றைக்குத் தெருவில் வைரவேல் முதலியாரைக் கண்டேன். சாவின்போதேதான் அவர் வந்திருந்தாரே. ரொம்பக்கவலையோடு எல்லாரையும் பற்றி விசாரித்தார்.''

''அவர் தங்கமான மனுஷர்தான். உன் மச்சானுக்கே அவர் மேல் ரொம்ப மரியாதை உண்டே!' சிவகாமி சொன்னாள்,

''அவர் குறைதான் தீரமாட்டேன் என்கிறது. அவரும் தான் அதை விட மாட்டேன் என்கிறார். உருகியுருகிப் போகிறார்.''

''பாவம்!''

''இன்றைக்குக்கூடச் சொன்னார். உங்க தங்கை புருஷன் தம் அருமைக் குழந்தை ஒன்றை எனக்குக் கொடுக்கவேண்டும் என்று எவ்வளவோ ஆசைப்பட்டார். உங்க தங்கை கொஞ்சம் தாட்சணியமாய் இருந்து விட்டாங்க என்று நினைக்கிறேன். சட்டநாதருக்கோ எனக்குத் தத்துக்கொடுக்க வேண்டும் என்றுதான் ஆசை, அப்படி என்கிறார்.''

''இன்னும் அவர் விடவில்லையா, அண்ணா?''

''அவர்தான் என்னிடம் ரொம்பக் கேட்டுக் கொண்டாரே! சிவகாமி, ஒன்று மட்டும் நிச்சயம், அவர் குழந்தை இல்லை என்கிறதிலே கவலைப் பட்டுச் சாகிறார். நாம் குமரனையே கொடுக்கிறோம். என்று வைத்துக்கொள்; நிச்சயம் கண்ணுக்குக் கண்ணாகப் பாதுகாப்பார்; அதில் சந்தேகமேயில்லை.''

''ஆஹா!'' என்றாள் சிவகாமி.

''என்னைக்கேட்டால், குமரனை அவருக்குக் கொடுத்துவிடலாம் என்று தோன்றுகிறது. என்ன சொல்கிறே நீ?''

''நான் சொல்கிறதற்கு என்ன இருக்கிறது? நானே அதைத்தான் யோசனை பண்ணிக் கொண்டிருந்தேன்.''

'நான் வேலவனை வாசிக்க வைக்க என்னோடு அழைத்துக்கொண்டு போய்விடலாம் என்று யோசித்திருக்கிறேன், வைரவேல் முதலியாரும் ரொம்ப ஆசை வைத்திருக்கிறார். குமரனை அவருக்குக் கொடுத்துவிடலாம், அவருக்கும் வயசுக் காலத்திலே ஒரு திருப்தி!''

சிவகாமி தலையை அசைத்தாள்.

ஆமாம், பிராவிடெண்ட் நிதி இரண்டாயிரத்துச் சொச்சம் ரூபாயைக் கையில் முதலாக வைத்துக் கொண்டு, இரண்டு பெண்களைக் கலியாணத்திற்குக் குதிர்போலத் தயாராக வளர்த்துக் கொண்டு, இதற்கெல்லாம் அஞ்சுவதோ யோசிப்பதோ எப்படி இயலும்? சரிசரியென்று நிலைமையைப் புரிந்துகொண்டு, இப்பொழுதாவது வந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாவிட்டால், நாளைக்கு எப்படிப் பெற்றதையெல்லாம் கரையேற்றிவைப்பது? வயிற்றிலே பிறந்ததென்று முன்தானையில் கட்டி முடிந்துகொண்டு, முத்தமிட்டுக் கொஞ்சிக் குலாவியே காப்பாற்றிவிட முடியுமா? சிவகாமி சிறிது யோசித்திருப்பாளோ, என்னவோ இசைந்துவிட்டாள்.

''ஆமாம், நம்மிடம் இருந்து வளரப்போகிற குழந்தை அவரிடம்தான் இருக்கட்டுமே. அததுகள் முன்னுக்கு வந்தால் சரி.''

''அப்படியென்றால் உனக்குச் சம்மதம்தானே? நல்லது! நான் அவரிடம் சொல்லிவிடுகிறேன்.''

சிவகாமி தலையசைத்துச் சம்மதம் தெரிவித்தாள்.

''பையன் என் ஆசைக்கு என்னோடு கொஞ்ச நாளாவதிருக்கட்டும்; அதுபோதும், அதற்கப்புறம் அவன் என்னைப் பிடித்தால் என்னிடம் இருக்கட்டும். நான் சுவீகாரமென்று சடங்கு செய்து பையனைக் கட்டாயப் படுத்த விரும்பவில்லை. விளையாட்டாய் என்னிடம் வந்து தங்கியிருக்கட்டும்; அவனுக்கு என்னைப் பிடித்தால், அதற்கப்புறம் தத்து என்று சடங்கு செய்து கொள்ளலாம். நான் வேறொன்றும் அதிகமாய்க் கேட்கவில்லை, என்று அவ்வளவு பெரியவர் ரொம்பத் தாழ்மையாகக் கெஞ்சுகிற தொனியில் அழுகிறாப்போல என்னிடம் சொன்னார்.''

'' ஐயோ பாவம்! அவருக்கு ரொம்ப நாளாகக் குறை தீராமல் இருந்தது. நம் குமரனால்தான் தீர வேண்டும்போலிருக்கிறது, அவர் கஷ்டம் தீர்ந்தால் சரி! ''

'நீ தைரியமாய்த்தானே சம்மதிக்கிறே? நாளைக்கு அவனுக்கு ஒரு தலைவலியே வருகிறதென்று வைத்துக்கொள், உடனே அரண்டுவிடமாட்டாயே!'

'அண்ணா, நீ இருக்கிறபோது எனக்குத் தைரியத்திற்கென்ன குறைவு?'

'நல்லது அப்படியானால் குமரனைக் கூப்பிட்டு எதற்கும் நாலு வார்த்தை சொல்லித் தட்டிக் கொடுத்துத் தயார் செய்து வைத்திருக்கலாமே!'

சிவகாமி 'குமரா' என்றாள். உடனே 'வரேனம்மா' என்ற பதிற்குரல் கூடவே வந்தது. 'இங்கே பேச்செல்லாம் கேட்டுக்கொண்டு இருந்தயா?' என்றாள். அவன் 'இல்லையே' என்றான்.

4

குமரனுக்குப் பாய் போட்டிருந்தது.

'குமரக்கண்ணு, வந்து படுத்துக்கொள்' என்றார் வைரவேல் முதலியார் வெகு ஆசையுடன். அவன் ஒரு வாரமாகப் பகல் பொழுதெல்லாம் பள்ளி செல்லும்பொழுது போக எஞ்சிய நேரத்தை அங்கு வந்து ஓட்டினான். அன்றுதான் முதன் முதலாக அங்கு அவன் இராப்படுப்பது. வெகு நேரம் ஜன்னல் வழியே வானத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். நட்சத்திரங்களையெல்லாம் எண்ணினான்; சந்திரனைப்பார்த்து ரசித்தான் சிறிது நேரம், அப்படியும் பொழுது போவதாக இல்லை.

முதலியார் அழைத்தது கேட்டுப் படுக்கைக்கு வந்தான். அவன் மனம் பக்பக் என்றது. பகலின் பகட்டு ஒளியில் தனக்குத் தெரியாதிருந்த பேராபத்தொன்று இரவின் இருளில் காத்துக் கொண்டு நிற்பதுபோலத் தோன்றியது. தன் கால்கள் நடுங்கிக் கொண்டிருந்ததை அவன் கவனித்தான். பயம் தெளியவில்லை. முதலியார் விளக்கையணைத்துவிட்டு வந்து படுத்தார். அவருடன் ஏதாவது பேச்சுக் கொடுத்தால், பயம் அதிகம் தெரியாது; பொழுது பேச்சினூடே போய்விடும் என்று ஒரு கணம் நினைத்தான். மறு வினாடி யாரோ அவனைப் பார்த்துப் பயங்கரச் சிரிப்பு ஒன்று சிரிப்பதுபோல் உணர்ந்தான். அவன் உதடுகள் 'ஐயையோ' இராப்போது முழுதும் போயாக வேண்டுமே என்று முணுமுணுத்தன. சிரிப்பொலி மீண்டும் ஒரு முறை கேட்டது. கரிய பயங்கர உருவம்.

பக்கத்தில் பார்த்தான் குமரன். முதலியார் குறட்டை சுருதி ஏறிக்கொண்டிருந்தது. 'தம்பி, மாட்டிக்கொண்டாயா?' என்றது உருவம். குமரன் திணறினான். அவன் என்ன இருந்தாலும் கூரிய மதியினன் அல்லவா? எதிரே இருந்த உருவம் யாரென்று கண்டு பிடித்துவிட்டான். வேறு யாருமல்ல, யமன் எருமை மாட்டின் மீது கையில் கயிற்றுடன் ஏறி அமர்ந்திருந்தான். அவனுக்குப் முன்னால் மாட்டின் முதுகிலே மூன்று இளைஞர்கள் இருந்தனர்.

குமரன் கதிகலங்கிப்போய் விட்டான்.

'என்னடா ஏற இறங்கப் பாக்கிறாய்? ஏறுடா பின்னாலே என் மாட்டின் மேலே. இந்தப் பையன்கள் மூவரையும் இந்தப் பங்களாவில்தான் பிடித்தேன். நீ மட்டும் உயர்ந்தவனோ? வா இப்படி!' குரல் பயங்கரமாக இருந்தது. குமரன் கண்களை இறுக மூடிக் கொண்டான். யமன் கண்களுக்குள்ளேயே வந்து விட்டான்.

'மரியாதையாய் வருகிறாயா இப்படி? அல்லது என் பாசக்கயிற்றை வீசட்டுமா?'

குமரன் மாட்டின் மீதிருந்த தன்னைப்போன்ற மூன்று இளைஞர்களையும் பார்த்துப் பதைபதைத்தான்; அம்மூவரும் தலை குனிந்துகொண்டிருந்தனர். யமன் மீண்டும் கத்தினான்; 'என்னடா இவர்களைப் பார்க்கிறாய்? ஏறுடா நீயும் இவர்களோடே!' குமரனுக்குச் சில மாதங்கள் முன் தன் பெற்றோரும். சில நாட்கள் முன் தன் தாயும் மாமனும் பேசிக்கொண்டிருந்தது, தான் அதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தது எல்லாம் நினைவிற்கு வந்தன. தான் தப்ப முடியாது என்று அவனுக்குத் தோன்றியது. இதற்கு முன் முதலியாருடைய மைந்தர்களாக இருந்த மூவரும் யமனிடம் சிக்கிக்கொண்டிருக்கிறபோது, தான் மட்டும் தப்புவது எங்ஙனம்?

யமன் கண்விழிகள் அகல விரிந்தன. அவன் குமரனை நெருங்கிவிட்டான். ஒரு மயிரிழை இடைவெளிதான் நடுவில் இருந்தது. ஐயோ செத்தேன் என்று ஒரே ஓலமிட்டான் குமரன். அவன் எழுந்தான்; கதவின் அருகே சென்றான். முதலியார் எழுந்துகொண்டுவிட்டார். விளக்கைப்போட்டார்.

'குமரா, என்னப்பா, பயந்துகொண்டுவிட்டாயா?'' என்று வயதான கிழவர் குமரனை அணைத்துக்கொண்டார். விளக்கின் ஒளியைக் கண்டதும் யமன் ஓடிவிட்டான் மாட்டை ஓட்டிக் கொண்டு. குமரனுக்குச் சிறிது அச்சம் நீங்கினாற் போல் இருந்தது. ஆனால் கால் நடுக்கமும், மன அதிர்ச்சியும் அகன்றபாடில்லை. குமரன் கண்களைத் துடைத்துக் கொண்டு பார்த்தான்.



"எங்கே கண்ணு, நீ வாசற்பக்கம் கிளம்பினே கத்திக்கொண்டே?"

குமரனுக்கு மூச்சு வாங்கியது; கிழவருக்குத் திகைப்புத் தட்டியது. "ஏதாவது சொப்பனம் கண்டாயா நீ?" என்றார் அவர்.

'விளக்கை அணைச்சுவிடாதிங்க. அது பாட்டிலே எரிந்துகொண்டிருக்கட்டும்!"

'அப்படியே உன் இஷ்டப்படி! ராஜா!'

'தாத்தா, வீட்டுக்குப் போகலாமென்று கிளம்பிக்கொண்டிருந்தேன் நான். அதனால்தான்கதவுப் புறம் போனேன்!'

'ஏன், திடீரென்று அம்மா, அண்ணன் தம்பி மார்களையெல்லாம் பார்க்கவேண்டுமென்று ஆசை வந்துவிட்டதா?'

'உங்களுக்கு அடியிலிருந்து சொன்னால் தான் தாத்தா, புரியும்' என்று குமரன் கூறி நிறுத்தினன். ஆவலும் ஆசையும் பொங்க அவனைக் கவனித்தார் கிழவர்.

'ஏன், தாத்தா, நீங்க இதுக்கு முன்னால் என்னைப்போல மூன்று பையன்களைக் கொண்டு வந்து வைத்துக்கொண்டீங்களாமே! அவங்க எல்லாரும் செத்துப்போய் விட்டாங்க, அப்படித் தானே?'

கிழவர் தலை அசைந்தது.

'உங்க கிட்டே என்னைக் கொடுத்தால், நானும் செத்துப்போய் விடுவேன் என்று என் அம்மாவிற்குப் பயம் தாத்தா அதனால் என்னை உங்க கிட்டேதரவேண்டாமென்று என் அம்மா அப்பா கிட்டே சொன்னாங்க. நான் அதெல்லாம் கேட்டுக் கொண்டே படுத்திருந்தேன். இப்போதென்ன வென்றால், அப்பாவும் போய்விட்டாங்களா? அதனாலே அம்மா வேறே வழியில்லாமல் என்னை உங்ககிட்டே தரச்சொல்லி விட்டாங்க.'

வைரவேலர் மனம் படாதபாடு பட்டது.

குமரன்—எனக்கு இப்பொழுது பயமாய் இருந்தது, தாத்தா. அம்மாவும் அப்பாவும் பேசியதையெல்லாம் கேட்டதினாலே, கண் எதிரே யமன் மாதிரியே எருமை மாட்டிலே ஒரு உருவம் வந்தது. மாட்டு முதுகிலே இங்கே செத்துப்போன மூன்று பையன்களும் இருந்தாங்க. யமன் என்னையும் வரச்சொல்லி மிரட்டினன். எனக்குப் பயமாய் இருக்காதா, தாத்தா?'

கிழக்கண்ணிலிருந்து நீர் வழிந்தது.

'நான் செத்துப் போய்விட்டால், அப்புறம் என்ன பண்ணுகிறது தாத்தா? அதுதான் எனக்குப் பயமாய் இருந்தது. இங்கே இருந்தால், யமன் என்னை விடமாட்டான், தாத்தா. நான் போய்விடுகிறேன். அதற்குள்ளேயே நான் எதுக்குச் செத்துப்போக வேண்டும்?'

கிழவர் அழும் குரலில் பேசினர்—'கண்ணு, நீயெல்லாம் செத்துப் போகக்கூடாது: உன் மாதிரி இருக்கிறவர்களும் செத்துப் போகக் கூடாது. நான்தான் செத்துப்போக வேண்டும்

குமரன்—'என்ன, தாத்தா, அப்படிச் சொல்கிறீங்க?'

கிழவர்—'நானும் உயிரோடு இருக்கவேண்டும் என்கிறாயா, 'குமரா?'

'ஆமாம் தாத்தா' எனக்கூறிய இளைஞனைக் கிழவர் 'என் கண்ணே கண்ணு' என்று கட்டிக் கொண்டார். பொக்கை வாயினுள்ளிருந்து பல்லிடுக்கு வழியே கிழச்சிரிப்பு எட்டிப் பார்த்தது.

'நீ இங்கே யிருந்துகொண்டு பயப்பட வேண்டாம்: குமரா, உன்னை வீட்டில் கொண்டுபோய் விட்டு வடுகிறேன் சரிதானே?' வைரவேல் முதலியாரின் குரல் கம்மியிருந்தது.

'முதல் மூன்றுபேரையும் போல நானும் செத்துப்போய்விடுவே னென்று முன்பு அப்பாகிட்ட அம்மாதான் சொன்னங்க, இப்பொழுதோ அம்மாவே என்னைக்கொண்டு வந்து இங்கே தள்ளிவிடச்சொல்லிவிட்டாங்க.'

வைரவேலருக்கு இதெல்லாம் கேட்கப் பிடிக்கவில்லை.



"என் கண்ணே கண்ணு"

5

தபால்காரன் குமரன் பெயருக்கிருந்த கடிதத்தை அவன் மாமனிடம் தந்து விட்டுச் சென்றான். 'தங்கச்சி!' என்று ஆச்சரியத்தோடு விளித்துக்கொண்டே கடிதத்தைப் பிரித்தான் அண்ணன். வைரவேலர் குமரனுக்கு எழுதியிருந்தார். குமரன்தான் அவரை அநியாயமாய்

விட்டு விட்டு ஓடிவந்துவிட்டான்; அவர் இவனுக்கு என்னதான் எழுதியிருக்கிறார், பார்க்கலாம் என்ற ஆவலோடு சிவகாமி கடிதத்தைக் கேட்க வந்து நின்றாள்.

'அருமைக் குமரா,

ஏற்கனவே உன்னைப்போன்ற மூன்று பச்சிளங் குழந்தைகளைப் பலிகொடுத்திருந்தும், என் அசட்டு ஆசை போகவில்லை. உன்னைக்கொண்டுவந்துவைத்துக்கொண்டேன். நல்லவேளை, நீ என் கண்களைத் திறந்து வைத்தாயே!

நான் எப்பேர்ப்பட்ட பாவம் செய்ய இருந்தேன்! நல்ல நாளில் உன்னைவிட்டுப் பிரியமாட்டேன் என்று சொன்ன உன் தாயாரிடமிருந்து உன் தந்தை இறந்து குடும்பநிலையில் சிறிது இறக்கம் கண்டதும் உன்னைப் பெற இருந்தேனே. இந்த ஜன்மத்தில் தான் குழந்தை இல்லையென்றால், வரும் பிறப்புகளுக்கும் இவ்வாறெல்லாம் நான் பாவம் சேர்த்துக்கொள்ள இருந்தேனே! வேண்டாமப்பா எனக்குக் குழந்தை. நீ பயப்படாமல் உன் அண்ணன் தம்பிமாருடன், தாய் தமக்கையருடன் சிரஞ்சீவியாய் இரப்பா, எனக்கு ஒன்றும் வேண்டாம்; நான் இந்த ஜன்மத்தில் அநாதையாகவே போகிறேன்.

ஆனால், ஒன்று மட்டும் கேட்டுக்கொள்கிறேன். என்னிடம் இருந்தால் தான், நீ பயப்பட வேண்டுமே ஒழிய, என் சொத்து நல்லது தானப்பா. அதனால் பயப்படாமல் ஏற்றுக்கொள். என் பங்களாவையும் செல்வத்தில் பாதியையும் உனக்கெழுதி வைத்திருக்கிறேன். மற்றொரு பாதியை மூன்று சம பாகங்களாகப் பிரித்து' எனக்குத் தத்துக்கொடுத்துத் தம் குழந்தைகளை இழந்த மூன்று பெற்றோர்களுக்கும் எழுதி வைத்துவிட்டேன்.

எனக்கு மகன் தானில்லை; ஆனால் மகன் இருந்தால் எப்படிக் கடைசிக் காலத்தில் சொத்தை யெல்லாம் அவனுக்கெழுதி வைத்து விட்டுச் சாவேனோ, அது போல என் செல்வத்தை உனக்களிக்கிறேன். நீ ஏற்றுக்கொள்ளப்பா! எனக்கது போதும்! நான் போய் வருகிறேன். எனக்கென்ன, குழந்தையா? குட்டியா?'

நடுங்கும் கரம் அடியில் கையொப்பமிட்டிருந்தது.

கிழவர் ஊர்-பேர் தெரியாத கோடிக்கணக்கான மக்களினூடே இரண்டறக் கலந்துவிட்டார்!



# விஞ்ஞான மேதை டாக்டர் பட்நகர்

**கே. ஸ்ரீ.**

**1912**ல் லாகூரில் ஒரு இளைஞர் தம் ஓட்டை ஸைக்கிளை வைத்துக் கொண்டு கல்லூரி மைதானத்தில் மற்ற இளைஞர்கள் வியக்கும்படி சண்டமாருதம் பொழிந்தார். வெறும் வாய் சவடால் அல்ல. தாம் விஞ்ஞானி, ஆனால் என்ன செய்வார் என்பதைப் பற்றியும் விஞ்ஞானத் துறையில் சாதிக்க வேண்டிய காரியங்களைப் பற்றியும் அளவளாவினார். அந்த இளைஞர் வேறு யாரும் இல்லை; அவர்தான் டாக்டர் சாந்தி ஸ்வருப பட்நகர்.

விளையும் பயிர் முளையிலே என்கிறார்கள், ஆனால் முளை பிரமாதமாக இருந்து பயிர் சாவியாவது கிட்டத்தட்ட உலகானுபவம். இதற்கு விதிவிலக்கு உள்ளதால்தான் பழமொழி நிலைத்துள்ளது, டாக்டர் பட்நகரும் அவ்வாறு ஒரு விதிவிலக்கே.

இந்தியாவிலும் விஞ்ஞானத் துறையில் ஏதோ நடக்கிறது என்று பிறநாட்டார் எண்ணுகிறார்கள் என்றால் அதற்கு டாக்டர் பட்நகர் ஓரளவுக்குக் காரணபூதர். இவருடைய பிரமாத பகற்கனவுகள் போன்ற திட்டங்கள் தான் இன்று இந்தியா பூராவும் பல ஆராய்ச்சிக் கழகங்களின் ரூபத்தில் நிற்கின்றன. வருங்காலத்தில் பௌதிக ரசாயனத் துறையில் கற்றறிந்தவர்கள் ஆயிரக் கணக்கில் உண்டானால் அதுவும் இந்தக் கழகங்கள் மூலம் தான் ஏற்படும்,

நம் நாட்டில் சோம்பேறி வேதாந்தம் தலைக்கு மீறி இருப்பதால் தான் யார் எந்த நல்ல காரியம் செய்தாலும், அதற்கு வேண்டிய கௌரவம் உடனடியாகக் கிடைப்பதில்லை. "பூ, இவ்வளவு தானா? பணம் இருந்தால் யார்தான் செய்யமாட்டார்கள்" என்று சொல்வது வழக்கம். உண்மையில் "பணம் இருந்தால்?" என்பதைத் துலக்கியவர் டாக்டர் பட்நகர். அதை அவர் எப்படிச் செய்தார் என்று அவரையே கேளுங்கள்.

டாக்டர் பட்நகர் ஒரு பிரபல ரசாயன விஞ்ஞானி. அவர் காலத்தில் அந்தத் துறையில் சில அரிய விஷயங்களை ஆராய்ந்து

அந்தப் பலன்களை "பேடண்ட்" செய்திருந்தார். (பேடண்ட் என்பது புது விஷயக் கண்டுபிடிப்பைச் உரிமையுள்ளதாகச் செய்வதைக் குறிக்கும் சொல்.) பட்நகரின் "பேடண்ட்" விஷயங்களை அட்டாக் எண்ணெய்ச் சுரங்கம் உபயோகித்து, அதற்குப் பதில் **Royalty** என்னும் "விஷயதான ஈடு" கொடுத்தார்கள். அப்படிக் கிடைத்த பணம் 10 லக்ஷம் ரூபாய். இதைத் தம் பணம் என்று பாங்கியில் போடாமல் அதைச் சர்க்காருக்கு ஆராய்ச்சிக்கென்று நன்கொடையாக அளித்தார் டாக்டர் பட்நகர். பகுதியைக் கல்வி நிலயங்களுக்கும் கொடுத்தார்.

டாக்டரின் தாராள குணம் சர்க்காரின் மனதைக் கவர்ந்தது. அதன் பயனாகவே சர்க்கார் விஞ்ஞானத் தொழில் ஆராய்ச்சிக் கௌன்ஸில் ஏற்படுத்தப்பட்டது. டாக்டர் பட்நகரும் கல்லூரியில் வேலை பார்த்து, பிறகு ஆராய்ச்சித் துறையில் இருந்து, பின்னர் சர்க்கார் விஞ்ஞானக் கௌன்ஸிலின் டைரக்டர் ஆனார், 1941ஆம் வருஷம் முதலே அவர் தற்பொழுது உருவாகியுள்ள தேசிய ஆராய்ச்சி நிலயங்களை ஏற்படுத்துவதற்கென்று அப்பொழுதுள்ள பிரிட்டிஷ் சர்க்காரைத் தாறு போட்டார். இரண்டாவது மகாயுத்தம் வந்ததும் பல விஷயங்களுக்கு இந்திய ஆராய்ச்சியும் இந்தியாவில் உள்ள பொருள்களையே உபயோகப்படுத்துவதும் தேவை ஆயின. ஆகவே பட்நகரின் கனவு நனவாக ஆரம்பித்தது. அவர் முயற்சியின் காரணமாக இப்பொழுது இந்தியாவில் பதினொரு ஆராய்ச்சி நிலயங்கள் இருக்கின்றன. பௌதிகம், ரசாயனம். நிலக்கரி, கண்ணாடி, ரஸ்தா, கட்டிடங்கள், தோல், மின்சார—ரசாயனம், முதலியவைகளைக் குறித்து இந்த நிலயங்களில் இந்தியாவின் பலபாகங்களில் ஆராய்ச்சி நடக்கிறது.

டாக்டர் பட்நகருக்கு எடுத்த காரியத்தை நன்கு நடத்த வேண்டும் என்பது குறி. அவர் மூலம் கட்டப்பட்ட ஆராய்ச்சி நிலயங்களில் பெரிய இயந்திரம் முதல் சிறு ஆணி வரை அப்பழுக்கு இல்லாமல் இருக்கும். தவிர, கட்டிடம் கதவு முதலியவைகளில் ஒரு தூசு தும்பட்டை இருக்கக் கூடாது, ஆம்.

எடுத்த காரியத்தை நன்கு முடிக்கும் திறனும், நிர்வாக ஆற்றலும் உள்ளதால் தான் அவர் பண்டித நேருவின் அன்பிற்குப் பாத்திரமானவர், எனினும் அவரிடம் சாந்தமும், அன்பும் எப்பொழுதும் குடி கொண்டுள்ளன. யாரையும் அதிர்ந்து எதுவும் சொல்லமாட்டார்.

"எனக்கு இந்தியாவில் விஞ்ஞானத்தையும் தொழிலையும் ஊன்ற வைக்க வேண்டும் என்று ஆசை. நான் தொழில் டிபார்ட்மெண்டில் சம்பந்தப்படாவிட்டாலும், நான் தொழிலுக்கு அதிகம் சேவை செய்திருக்கிறேன்" என்றார் இவர் ஒரு பேட்டியில். இந்தியாவில் எண்ணெய் (பெட்ரோல் போன்றவை) சுத்தம் செய்யும் சாலைகளை ஏற்படுத்துவதில் பட்நகருக்குப் பெரும் பங்கு உண்டு.

டாக்டர் பட்நகர் லாகூரில் தயால்ஸிங் பள்ளிக்கூடத்தில் கல்வி பயின்று பிறகு **FORMAN XIAN COLLAGE**-ல் பட்டம் பெற்றார், கல்வி புகட்டும் தொழிலில் சில காலம் அவர் இருந்ததால் மத்திய சர்க்காரின் கல்வி இலாகாவுக்குத் தகுந்த காரியதரிசியே.

இந்தியாவில் விஞ்ஞானத்தில் குழந்தை முதல் சிரத்தை உண்டாக்க வேண்டும். இதற்கு ஆங்கிலத்தில் உள்ளதுபோல் எளிய கவர்ச்சிகரமான முறையில் ஆயிரக்கணக்கான புஸ்தகங்கள் தாய் மொழியில் வெளி வர வேண்டும் என்கிறார் இவர்.

கிஸான்களும் விவசாயத்தில் ஆராய்ச்சியின் சாதனைகளைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்பது இவர் அவா. டில்லியில் பாலம் என்ற கிராமத்திற்குப் பக்கத்தில் ஒரு ஆராய்ச்சிப் பண்ணையையும், அதையொட்டி ஒரு சோதனைச் சாலையும் பள்ளிக்கூடமும் இவர் ஏற்படுத்தியிருக்கிறார். குடியானவர்கள் இவைகளைப் பயன்படுத்தி, பயிரில் உண்டாகும் நோய்களை எளியமுறையில் ஆராயத்தெரிந்து கொண்டு அவைகளைத் தடுத்து விளைச்சலை அதிகமாக்கத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பது இவர் ஆசை. இதற்கு விவசாயி பிரமாதமாக விஞ்ஞானியாக இருக்கத் தேவை இல்லை. இந்தச் சோதனை நன்கு பயன்பட்டால் அதை அனுசரித்து இந்தியாவின் பல பாகங்களில் விவசாயச் சோதனைச் சாலைகளும் பண்ணைகளும் அமைக்கவேண்டும் என்பது இவர் திட்டம்.

இந்தியாவில் உள்ள ஆராய்ச்சி நிலயங்கள் வெறும் மியூஸியம் என்பது தவறு. தொழிலில் உள்ள பிரச்னைகளை, யுனிவர்ஸிடியில் உள்ள சாலைகள் ஆராய்கின்றன. தேசிய ஆராய்ச்சி நிலயங்களின் நிர்வாக போர்டில் பிரபல விஞ்ஞானிகளும் தொழிற் சம்பந்தப்பட்டவர்களும் அநேகர். எங்கள் நிலயங்கள் தினம் தினம் முதிரும் பிரச்னைகளைக்

கவனித்து ஆராய்ந்து கொடுத்து, பொது ஜனத் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கின்றன'' என்கிறார் டாக்டர் பட்நகர்.

டாக்டர் பட்நகர் பொதுஜனச் சார்பில் நன்கொடை வாங்குவதில் சமர்த்தர். ''முக்காலே மூன்று வீசம் பங்கு நான் தனிகர்களிடமிருந்து பணம் கறந்துதான் நிலையங்களைக் கட்டியிருக்கிறேன். வரும் சில வருஷங்களில் சுமார் 5000 மேதைகள் இந்தியாவில் இந்நிலையங்கள் மூலம் உண்டானால் அது நமக்கு நல்லதல்லவா?'' என்கிறார் இவர்.

''விஞ்ஞானிகளும் தொழில்துறை அதிபதிகளும் என் வேலையை மெச்சுகிறார்கள். தொழிற் சம்பந்தமான அலுவல்களை என்னிடம் ஒப்படைத்தால் நான் நம் நாட்டுத் தொழில்களில் புரட்சிகரமான மாறுதல்களை உண்டாக்கிவிடுவேன்'' என்றார் டாக்டர் பட்நகர் தொழிலில் விஞ்ஞானத்தைப் புகுத்த முடியுமா, என்பது குறித்து.

டாக்டர் பட்நகருக்கு இரண்டு பையன்களும் இரண்டு பெண்களும் இருக்கிறார்கள், மூத்தவர் விளம்பர இலாகாவில் வேலை பார்க்கிறார். மற்றவர் டாக்டருக்குப் படிக்கிறார். பட்நகரின் மனைவி எட்டு வருஷங்களுக்கு முன் இறந்துவிட்டார்.

அணு விஞ்ஞானம் குறித்து டாக்டர் பட்நகர் சொன்னார்: ''அணுகுண்டு தயாரிக்க நம்மிடம் பணமும் கிடையாது. அந்த உத்தேசமும் நம் சர்க்காருக்கு இல்லை. ஆனால் அணு சக்தி உண்டாக்க அதற்கு வேண்டிய உற்பத்திப் பொருள்கள் நம்மிடம் உள்ளன. அவைகளைக்கொண்டு நாம் சமாதான வழிகளில் அணு சக்தியை உபயோகிக்கக்கூடிய விஷயங்களில் ஈடுபடலாம். ஈடு படுவோம் என்றும் நம்புகிறேன்.''

பிரபல விஞ்ஞான மேதையான டாக்டர் போஸ் என்னிடம் ஒரு சமீப பேட்டியில் சொன்னார்: ''அரிது அரிது, ஆராய்ச்சி செய்தல். அதிலும் அரிது அதற்குவேண்டிய வசதி செய்துகொடுத்தல். டாக்டர் பட்நகர் இந்த விஷயத்தில் தீரர்தான்''. நான் டாக்டர் பட்நகரைச் சந்தித்தபொழுது கண் உபத்திரவம் காரணமாகப் படுக்கையில் இருந்தார். ''12 வருஷங்களில் நான் லீவே எடுத்ததில்லை; இதுதான் முதல் கட்டாய லீவு'' என்றார். ''கருமமே கண்ணாயினார்'' என்ற பழமொழிக்கு உதாரணம் டாக்டர் பட்நகர் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை.




காட்டுப்பட்டி ஒரு சின்னஞ்சிறு கிராமம். பட்டிக்காடு என்று வழக்கில் இருந்துவரும் சொல்லின் கருத்துக்கு மிகவும் பொருத்தமானதாகக் காணப்பட்ட ஊர். அந்தக் கிராமவாசிகளில் பெரும்பாலோர் எழுத்து வாசனையற்ற மக்கள். தாம் உண்டு — தம் வேலையுண்டு என்று அவர்கள் அமைதியுடன் காலங்கழித்து வந்தார்கள்.

ஊரில் பெரிய மிராசுதார் அம்பலவாணம் பிள்ளை. கிராமத்தின் பெரும்பான்மையான நில புலன்களுக்கு அவரே சொந்தக்காரர். படித்தவர்; உலக விஷயங்கள் தெரிந்தவர்; பெரிய விவேகி; வெகுதாராள மனதும், பெருந்தன்மையும் படைத்தவர்; தன்னடக்கத்திலே தமக்கு நிகரற்றவரும்கூட. ஆகவே பெரும்பாலோர் அவரைச் சார்ந்தே வாழ்ந்து வந்ததில் ஆச்சர்யமில்லை. கிராம மக்கள் அனைவருக்குமே அம்பலவாணம் பிள்ளையிடம் பெருமதிப்பு உண்டு; மரியாதையுண்டு; ஆழ்ந்த அன்பும் இருந்தது.

'கோயில் இல்லா ஊரில் குடியிருக்கவேண்டா' என்பது முதுமொழியாயிற்றே? காட்டுப்பட்டியிலும் சிறியதொரு கோயில் இருந்தது. அதற்குத் தர்மகர்த்தா அம்பலவாணம் பிள்ளைதான். புரட்டாசி மாதம் நவராத்திரியின்போது அந்தக் கோயிலில் உற்சவம் நடப்பதும் பரம்பரை வழக்கம்; ஒன்பது நாட்களிலும் விழாக் கொண்டாடுவார்கள்; பத்தாம் நாள் விஜயதசமியன்று சுவாமி புறப்பாடாகி ஊர்வலம் நடக்கும். பிரமாதமான ஆடம்பரங்கள் எதுவும் இல்லாவிட்டாலும் அந்த ஊருக்குத் தகுந்தபடி—விழா கச்சிதமாகவே நடந்தேறும்.

குழப்பமின்றி — கவலையின்றி— சஞ்சலமின்றி காட்டுப்பட்டிவாசிகள் நிம்மதியுடனே — கட்டுப்பாட்டுடனே—வாழ்ந்து வந்தார்கள்.

ஒருநாள் எங்கிருந்தோ அயலூர்காரன் ஒருவன் காட்டுப்பட்டிக்கு வந்து சேர்ந்தான். அந்த ஊரின் செழிப்பையும், மக்களின் ஒற்றுமை மனப்பான்மையையும் கண்டு மலைத்தான், தன் பெயர் மாதவன்' என்றும், சொந்த ஊர் மலையாள தேசமென்றும் அவன் சொல்லிக்கொண்டான். வாலிப வயதுக்காரன்தான்; ஆசாமி அட்டைக் கறுப்பு. குள்ளமாய் கட்டுக்குட்டாய்க் காணப்பட்டான்; கிராப்புத் தலைதான்; ஒருபுறம் தலைமயிர் புஸ் என்று தூக்கிக்கொண்டிருந்தது.

"மலையாள தேசத்திலிருந்து இந்தப் பட்டிக்காட்டுக்கு ஏனய்யா வந்தே?" என்று யாரோ கேட்டார்கள்.

"அங்கு பொழைப்புக்கு வழியில்லை! வயிறு வளர்க்கலாமென்னு இங்கேவந்தேன்" என்று சொன்னான்.

"உங்க ஊரிலே உனக்குப் பிழைக்க வழியில்லையா!"

"ஆமாம் ஐயா, வறுமை தாண்டவமாடுது"

"சரி—சரி; பெரிய ஐயா கிட்டே போய் கேட்டுக்கோ"

அம்பலவாணம் பிள்ளையை'பெரிய' ஐயா என்றுதான் அனைவரும் குறிப்பிடுவது வழக்கம்.

மாதவன் அவரிடம்சென்று கைகட்டி நின்றான்.

பிள்ளை இவனை ஏற இறங்கப் பார்த்தார்.

"விவசாயம், தெரியுமா உனக்கு?"என்று வினவினார்.

"பழக்கமில்லிங்க"

"படிச்சிருக்கியா?"

"ஏதோ கொஞ்சம் தெரியுமுங்கோ"

"இந்த ஊர் பிள்ளைகளுக்குப் படிப்பு சொல்லித் தருகிறாயா?"

"அது வராதுங்க"

"பின்னே? என்ன செய்து இந்த ஊரில் பிழைப்பதாக உத்தேசம்?" என்று பிள்ளை கேட்டார்.

"ஏதோ?—டீக்கடை வச்சு பொழச்சுக்கலாம் என்று வந்தேனுங்க" என்று பல்லைக்காட்டினான்.

பிள்ளை முன் பின் யோசிக்கவில்லை — அனுமதி அளித்துவிட்டார்.

"சரி போ; உன்னிஷ்டப்படி செய்துக்க; சாலையோரமா — கோயிலுக்குப் பக்கத்துலே — ஒரு திடல் இருக்குதல்லவா; அங்கே கடைவச்சிக்கிட்டு பிழைச்சுக்க" என்று இடத்தைக் கொடுத்து விட்டார்.

"உத்திரவுங்க எசமான்!" என்று அவன் பெரிதாகக் கும்பிடு போட்டு விட்டு அப்பால் நகர்ந்தான்.

இரண்டே நாட்களில், கோயிலுக்கு அருகில், காலியாகக் கிடந்த திடலிலே மண் சுவர்களாலும், கீற்றுகளாலும் அமைக்கப்பட்ட சிறு குடிசையொன்று தோன்றியது. இரண்டொரு பெஞ்சுகளும், ஒருகால் சிறிது முறிந்து அதற்குக் கல்லால் முட்டுக் கொடுக்கப்பட்ட மேஜையொன்றும் இன்னும் ஏதோ தட்டுமுட்டுச் சாமான்களும் அங்கே காணப்பட்டன, அவ்வளவும் அந்தக்கிராமவாசிகளே மாதவனுக்குக் கொடுத்து உதவியவை.

இரு கைகளையும் வீசிக்கொண்டல்லவா அவன் அங்கு வந்து சேர்ந்தான்? இருக்க இடமும். பிழைக்க வழியும் அவன் அங்கேயே சம்பாதித்துக் கொண்டு விட்டான்.

மேஜையின் பக்கத்தில் கம்பீரமாக நின்று கொண்டு டீயைக் கலக்கிக் கலக்கி, லாகவத்துடன் ஆற்றிக் கொடுக்க ஆரம்பித்தான். தகரக்குவளையொன்றில் டீத்தூள் போட்டு அதில் வெந்நீரை ஊற்றி, டபடப வென்று தாளக்கட்டுடன் அவன் அதைக் கலக்குவது கண்டு பிரமித்தனர் கபடமற்ற மக்கள்; உயர உயரத் தூக்கி அவன் ஆற்றுவது குறித்துப் பெரிதும் வியந்துகொண்டனர்.

சில நாட்களில் — 'தமிழர் தேநீர் விடுதி' என்று குறிக்கும் விளம்பரப் பலகையொன்றையும் கடை வாசலில் மாட்டி வைத்தான் மாதவன்.

"வாங்க அண்ணே! சூடா மசால் வடை இப்பதான் போட்டு வச்சிருக்கேன்; வந்து ருசி பார்த்து அப்படியே ஒரு கப் டீயும் அடியுங்க! அப்புறம் எப்படி யிருக்குது பாருங்க!" என்று பிரமாதமாக உபசரிப்பான்.

"என்ன வேலாயுத மண்ணே! திரும்பிக்கூடப் பாக்கமாட்டேங்கறீங்க இந்தப் பக்கம்! தயவில்லே!" என்று சிரித்தபடியே கெஞ்சுவான்.

"என்ன மாமன் பேசாமலே போறுரு!" என்று போகிறவரை இழுப்பான்; "என்ன மச்சான்! முகத்தைப் பார்த்தா ரொம்பக் களைப்பா இருக்கிறுப் போலே காணுதே? இந்தா—மொச்சைச் சுண்டலும், டீயும் சாப்பிட்டுவிட்டுப் போகலாம்; அடா சும்மா வாப்பேன்" என்று ஒட்டி உறவாடுவான்.

மாதவனின் முகமலர்ந்த உபசரிப்பையும், சாதுர்யப் பேச்சையும் கண்டு நாளடைவில் அனைவரும் அவனிடம் மயங்கி விட்டனர். கடைசியில் கூட்டம் பெருகியது; வியாபாரம் அதிகரித்தது; அவன் பேச்சில் மனதைப் பறி கொடுத்துவிட்ட சிலர்—அவனையே கண்கண்ட தெய்வமாகவும் பாவித்து, அல்லும் பகலும் அவனையே சுற்றி வரவும் தலைப்பட்டனர் என்றால் மாதவன் சும்மா இருப்பானா?

விளையாட்டுப்பேச்சிலிருந்து விஷமப் பேச்சுக் குத் துவக்கி விட்டான்:

"என்ன கதிர்வேலு! நேத்து பெரிய ஐயா உன்னை ஒரே அடியாகக் கோவிச்சு இரைந்துகிட்டிருந்தாரே—என்ன சங்கதி?'

"அதுவா? அது பெரிசா ஒண்ணுமில்லேப்பா. அவுங்க வீட்டுத் தென்னந்தோப்புலே ஒரு நெத்து மரத்திலேந்து விழுந்திச்சு; என் மவன் அதைத் தூக்கிக்கிட்டு ஓடியாந்துட்டான், அதுக்காக —திருட்டுவளியிலே அவனைப் பளக்கி உட்டுடாதேன்னு என்னைக் கண்டிச்சாரு, நியாயந்தானே?' என்றான் கதிர்வேலு.

மாதவன் ஒருமாதிரியாகச் சிரித்தான். "வெகுசா நியாயத்தையும்—அநியாயத்தையும் நீதான் கண்டுகிட்டாப்புல்லே பேசறியே அப்பேன்? ஒன் மவன் மரத்திலே ஏறியா நெத்தைப் பறிச்சு எடுத்துக்கிட்டான்? அவன் கண் எதிரிலே அது மரத்திலிருந்து விழுந்துச்சு; அவன் விவரமறியாத பிள்ளை; எடுத்துக்கிட்டுப் போனான்? இதுக்குப் பேருதிருட்டா? ஏ, அப்பா! எவ்வளவு வார்த்தைடா அதுக்கு! இந்த காலத்துலே படிச்சவங்க எல்லாருமே—நம்மமாதிரி படிக்காத முட்டாள்களை—இப்படித்தான் பயமுறுத்தி, ஏமாத்தி, அடக்கி ஆண்டுக்கிட்டுவாராங்க; நாம்பஏமாந்துகிக்கிறோம். இதோ பாரு: கதிர்வேலு! 'திருடன்'னு தனியா ஒரு ஜன்மம் இல்லே. திருடறவன் ஏன் திருடறான் தெரியுமோ? அவனுக்கு வயத்துக்குகெடைக்க வழியில்லே; ஒளிஞ்சுக்கிட்டு வந்து எடுத்துக்கிட்டுப் போறான்—நிறைய வச்சிக்கிட்டு இருக்கிறவங்ககிட்டேயிருந்து! தெரிஞ்சு-இல்லேன்னு கேட்டா கொடுப்பாங்களா தம்பி யாராவது? அதனால் தான் ஏறிக்குதிச்சு எடுத்துக்கிட்டுப் போறான்! இப்போ—நான்தான் இருக்கேன்; ஏதோ—மானமாப் பொழக்கிறேன்; வயிறு வளர்க்கறேன்; திருடச் சொன்னாலும் நான் ஏன் திருடுவேன்? பிழைக்க வழி கிட்டாதவன்—கொல்லைப்புறமா வந்து கொண்டு போனான். அப்படி வாறவன் உங்கிட்டேயும்—எங்கிட்டேயுமா வந்து திருடப்போறான்?" என்று விஷயத்தை எடுத்துக்காட்டி விளக்கினான்.

கூடியிருந்தவர்கள் மாதவனின் பேச்சைக்கேட்டு அயர்ந்து விட்டார்கள். "நீங்க சொன்னதுதான் உண்மையான பேச்சுங்க" என்று இரண்டொருவர் வாய்விட்டுப் பேசி ஆமோதிக்கவும் செய்தார்கள்.

"உள்ள அறிவைப் பலருடன் பேசியும், படிச்சும் விருத்தி செய்து கொள்ளணும் மச்சான்; இல்லாட்டி நமக்கு நாமேதான் சத்துருக்கள்!" என்று உபதேசம் தொடங்கினுன் மாதவன்.

'சூருவளி — 'சண்டமாருதம்' — என்றெல்லாம் பெயர்கொண்ட இரண்டொரு மட்டரகப் பத்திரிகைகளையும் வரவழைத்து—தன்னிடம் வருபவர்களுக்குப் படித்துக்காட்டி விளக்கவும் முற்பட்டான்.

நாளடைவில் தமிழர் தேநீர் விடுதி சாதாரண டீக்கடையாக இல்லை; ஊர் கூடி விவாதிக்கும் விவகாரஸ்தலமாக மாறி விட்டது; சூழ்ச்சியைத் தோற்றுவிக்கும் சதிகாரரின் சதுரங்க மேடையாக மாறிவிட்டது; உலக அரசியல் விவகாரங்கள் முதல் உள்ளூர் வம்புப்பேச்சு வரை அங்கு அடிபடாத விஷயமே இல்லை. அத்தனைக்கும் தலைமை தாங்கியவன் மாதவனே.

அதலபாதாளத்தில் அமுங்க இருக்கும் தங்களைக் கைதூக்கி விடவந்த மாபெருந் தலைவனுகவே மாதவனை ஒரு சிலர் மதித்து நடக்கத் தலைப்பட்டதிலும் ஆச்சர்யமில்லை.

மாதவனின் விஷமங்கள் அம்பலவாணம் பிள்ளைக்கும் தெரியாமலில்லை. அவர் நினைத்திருந்தால் அன்றே அவனை ஊரை விட்டு விரட்டியிருக்கலாம், ஆனல் அப்படிச் செய்யவில்லை. பொறுமையுடன் பார்த்துக்கொண்டுதானிருந்தார்.

"நேத்துப் பொழைக்க வந்து எசமான் கிட்ட பல்லைக் காட்டிப் பரக்கமுழிச்சு நின்ன பயல்—இன்னிக்கு நம்ம கட்டுப்பாட்டைக் கொலைச்சு—ஊரைரெண்டு பண்ணிப் பாழாக்கப் பாக்கறுனுங்க. இப்படியேஇவனெ சும்மாவிட்டுக்கிட்டிருக்கலாமா!" என்று பிள்ளையிடம் பக்தி மாருத சிலர் அபிப்பிராயப்பட்டார்கள்.

பிள்ளை சிரித்தார். "கோழி அடிக்கக்குறுந்தடியா? இவனல் என்ன செய்துவிட முடியும்? விஷயம் எவ்வளவுக்குத்தான் முற்றுகிற தென்பதையும் பார்த்துவிடலாமே?" என்ருர்.

நவராத்திரி வந்தது,

காட்டுப்பட்டி கிராமக் கோவிலில் விழாவுக்காக ஏற்பாடுகள் அம்பலவாணம் பிள்ளையின் தலைமையில் நடந்துகொண்டிருந்தன.

மாதவன் சும்மா பார்த்துக்கொண்டிருப்பானு? அவன் படித்தவன்—நாலுந் தெரிந்தவனுயிற்றே!

"பாரப்பா காளிமுத்து? ஊரிலே வயக்காடெல்லாம் தண்ணியில்லாமெ காயுது? கோவிலாம், கொளமாம்! சாமியாம்-பூதமாம்? கடவுள்னு ஒருத்தர் இருந்தால்—அவரும் நியாயம்—நீதியில்லாத அக்கிரமக்காரராகவா இருப்பார்! மழையே இல்லாமல் இப்படிப் பயிரைக்காய விடுவாரா? ஒருத்தனுக்கு வயிறு நிறைய சோத்தைப் போட்டு இன்னெருத்தனைக் குடிக்கக் கஞ்சியுமில்லாமெ சாவ வைப்பாரா? என்னப்பா? நான் பாட்டுக்கு பேசிக்கிட்டேயிருக்கேன்! நீங்கள் எல்லாம் வாயை மூடிக்கிட்டுக் குந்தியிருக்கீங்களே? நான் சொல்றது புரியுதா?"

"ஆமாம்—ஆமாம்—ஆமாம்" என்று காளிமுத்து தலையாட்டினன்..



"பயிருக்குத் தண்ணியில்லை; நம்ம வயத்துக்குசோறில்லை—இந்த லச்சணத்துலே சாமீ- பூதம்னு சொல்லிக்கிட்டு, கல்லுத் தலையிலே கொடம் கொடமாப் பாலும் தேனும் கொண்டு போய் கொட்டருங்க! அப்படி வீணுகும் அந்தப் பாலையெல்லாம் நம்மபோல—நாலு ஏழை எளியவங்ககிட்டக் கொடுத்துக் குடிக்கச் சொன்ன? நமக்குப் பசி

யாருமில்லெ? அவங்க மனசுப்படியே பார்த்தாகூட நம்மையும் அந்தக் கடவுள்தானே படைச்சு விட்டிருக்காரு! நமக்கு கொடுத்தா அவருக்குக் கொடுத்ததாவாதா?—என்ன மாரிமுத்து! புரியுதா உனக்கு?"

"ஏ, அப்பா! உனக்குத் தெரியாத விசயமே இந்தப் பூமியிலே இல்லைபோலிருக்குதே? பெரிய ஐயாவுக்குக்கூட இவ்வளவு தெரியாது போலே யிருக்குதே!" என்று வியந்தான் மாரிமுத்து.

"பெரிய ஐயாவுக்கு உங்களை யெல்லாம் நல்லா ஏமாத்திக்கிட்டே யிருக்கத்தெரியும்! அது தெரியாட்டி அவுரு காலம் எப்படி ஓடும்? விரலைக்கூட அசக்காமல்—அதிகாரம் பண்ணிக்கிட்டு—கவலையில்லாமெ சாப்பிட்டுக்கிட்டிருக்க முடியுமா?" என்று சமயம் பார்த்துப் பேச்சை விட்டான் மாதவன்.

"என்ன துணிச்சல் ஐயா உனக்கு? பெரிய ஐயாவையே அடிச்சுப் பேசுறியே?" என்று யாரோ தூக்கி வைத்துப் பேசினார்கள்.

"இதுலே அதிசயம் என்னய்யா? மனிசனுக்கு மனிசன் ஏதுக்காக ஐயாபயந்துகிட்டு நடக்கணும். அவருகிட்டே பணம் இருக்குதுன்னா—நம்மகிட்டே உழைப்பு இருக்குது?" என்று பெருமிதம் பேசினான் மாதவன்.

களங்கமற்ற வானத்திலே, ஒரு மூலையில், சிறு கருக்கல் தோன்றியது; மெதுவாக ஊர்ந்து, லேசாகப் பரவியது.

ஆனந்தமாக வீசிய சீரான காற்றிலே ஒரு சிறிது திருப்பம் கண்டது; சிரித்த காற்று முகம் சுழித்தது; கொஞ்சம் வேகத்துடனே வீசத் தொடங்கியது.

அமைதியாக, தேங்கித் தவழ்ந்த நீர் நிலை சலனமுற்று அலை மோத ஆரம்பித்தது.

வான வெளியில் மிதந்த கருமேகங்கள் வேகமாகப் பரவத்தொடங்கி நாற்புறமும் பாய் விரித்தது போல் கவிந்து கொண்டு விட்டன. குளிர் காற்றும் துவங்கியது. முதலில் இங்கொன்றும் அங்கொன்றுமாகப் பெரு மழைத்துளிகள் படபடவென்று விழுந்தன; தொடர்ந்து தூற்றல் பிசுபிசுத்தது; அப்புறம் பெருமழையே பிடித்துக் கொண்டு விட்டது.

காட்டுப்பட்டி கிராமக் கோவிலில் வழக்கம் போல், நவராத்திரி விழா தொடங்கி நடந்து வந்தது; ஆனால் அவ்வளவு உற்சாகமாக நடக்கவில்லை; முழுக்கட்டுப்பாட்டுடன் நடக்கவில்லை; ஏதோ ஒப்புக்கு நடந்தது போலவே தோன்றியது, ஊரில் இருந்த அனைவரும் கோயிலுக்கு ஏகோபித்து வரவில்லை. ஏதோ வந்த பேர்கள் வந்தனர்; வராதவர் வரவில்லை. சிலர் பக்தி செய்தனர்; சிலர் பக்தி பண்ணுபவரைக் கேலி செய்தனர், தான் தோன்றித்தனமாய் பேசியவரும் உண்டு.

"ஊரை இரண்டு பண்ணிவிட்டானுங்க—பிழைக்க வந்த பாவிப்பய!" என்று யாரோ அம்பலவாணம் பிள்ளையிடம் பாதிரகசியமாகத் தெரிவித்தார்.

பிள்ளை வாய்திறவாமல் நின்றுகொண்டிருந்தார்.

"இன்றைக்குச் சுவாமி புறப்பாடாகி ஊர்வலம் வரணுமே? அதுவும் நடந்துவிடுமல்லவா?" என்று ஒருவர் கவலையுடன் கேட்டார்.

"அதுதானே எனக்கும் தெரியவில்லை?" என்று பிள்ளை பதில் சொன்னார்.

"இந்தக் கிராமம் பூராவுமே திரண்டு வந்திருந்து சுவாமி புறப்பாடு செய்வதென்பது பரம்பரை பரம்பரையாக நடந்துவரும் வழக்கம். இந்த வருஷம் என்னடா வென்றால் அநேகர் கோயில் பக்கம் எட்டியும் பார்க்கவில்லை. வந்தவர்களை வைத்துக்கொண்டே திருப்பணியை நடத்திவிடலா மென்றால்—வராதவர்கள்—வழியில் ஏதாவது கலகம்—கிலகம் செய்வார்களோ—என்றும் யோசிக்க வேண்டியிருக்கிறது — ஒன்றுமே புரியவில்லை—" என்றுமுணு முணுத்தார் காரியஸ்தர்.

"கடவுள் நிச்சயித்தபடி தான் அனைத்தும் நடக்கும். நேற்றும், இன்றும், நாளையும் நிர்வகிக்கும் பொறுப்பு அவனுடையதே, அதைப் பற்றிக் கவலைப்பட நாம் யார்?" என்று முழு நம்பிக்கையுடன் தெரிவித்துவிட்டுக் கவலையற்றிருந்துவிட்டார் அம்பலவாணம் பிள்ளை.

சுவாமி ஊர்வலம் வரும் வேளை நெருங்க நெருங்க—அனைவரிடமும் அர்த்தமற்ற ஒரு பரபரப்புக் காணப்பட்டது நடக்குமோ—நடக்காதோ என்ற சந்தேகம்; அத்துடன் எத்தனையோ காலமாக நடந்து வருவது இப்போதும் நிற்காமல்—நடந்து விட வேண்டுமே—என்ற கவலையுங்கூட.

அதற்கேற்றாற்போல்—சமயத்தில் பெரு மழை பிடித்துக்கொண்டு விட்டது. ஆகாய வெளியையும், பூமியையும் உருத்தெரியாமல் ஒன்றாக்கிக் கொண்டு அஹோரமயமாக மழை கொட்டு கொட்டென்று கொட்டியது. வானம் கிடுகிடுக்க—பூமி நடுநடுங்க, பெரும் இடி முழக்கம்; பெரு மழையையும் மீறிக்கொண்டு எங்கிருந்தோ பாய்ந்தோடி வந்தது பேய்க் காற்று.

அதிவேகத்துடன் வீசிய பெருங் காற்று, பேய்க்காற்றாக மாறி திசையெல்லாம் தவித்துத் தடுமாறி, சுழல்காற்றாகச் சுழன்று சுழன்று வந்து கடைசியில் சண்ட மாருதமாகவே பரிணமித்து விட்டது; மணிக்கு நூறுமைல் வேகத்திலே ஆக்ரோஷத்துடன் ஆர்ப்பரித்தது.

மனிதனால் கற்பனையும் செய்து பார்க்க முடியாத இயற்கையின் மாபெரும் சக்தியிலே அன்று காற்று உருவிலே வெளிப்பட்டது அணுவிலும் பரமாணுவாகும்; அதன் முன்னரே மனிதன் தலை தூக்கி நிற்கமுடியவில்லையென்றால் இயற்கையின் முழு வேகத்தையும் யாரால்தான் தாங்க முடியும்?

பெரும் மரங்களை வேரோடு களைந்து வான வெளியிலே வீசிஎறிந்து விளையாடியது புயல் காற்று; கேவலம்—ஓடுகளும், தகரங்களும் எம் மாத்திரம்? பெரிய மாடமாளிகைகளையெல்லாம் மொட்டையடித்து வேடிக்கை காட்டியது சண்ட மாருதம்; குச்சுவீடுகள் குந்தமுடியுமா?

மாலை நேரத்தின் மங்கிய ஒளியிலே தன் விளையாட்டைத்துவக்கிய சூறாவளி இரவு வெகு நேரம் வரை ஓயாமல் குதிபோட்டு விளையாடிக் கொண்டேயிருந்தது. அன்று இரவே—கடைசி இரவாக முடிவடைந்துவிடுமோ என்றுகூடத் தோன்றியது. ஆனால் அனைத்துமே காற்றில் கரைந்து இரவில் ஒடுங்கிவிடவில்லை.

மறுநாள் பொழுதும் வழக்கம்போல் புலர்ந்தது.

சூரியன் புன்னகை தவழத்தோற்றினான்.

ஆனால் முதல்நாள் கண்ட காட்டுப்பட்டியாகவா தோன்றியது அந்தக் கிராமம்?

அந்தக் கோரத்தை விளக்க வார்த்தைகளே இல்லை.

முக்யமாகக் குறிப்பிடவேண்டியது மட்டும் ஒன்று உண்டு.

'தமிழர் தேநீர் விடுதி' இருந்த இடமே தெரியவில்லை. அந்தத் திடலையே காணோம்; கணக்கற்ற பெருமரங்கள் அங்கு மலைபோல் விழுந்துகிடந்தன; அருகே ஓடிய வாய்க்கால் கரைபுரண்டு அந்தத் திடலையே அரித்து அடித்துப் பெரும் பள்ளமாக்கி விட்டிருந்தது.

மாதவனா ஏதோ—மரத்தடியில் அகப்பட்டுக் கொண்டு—உருத்தெரியாமல் நசுங்கி கண்டபிண்டமாகி மகா கோரமாகக் காட்சி கொடுத்ததாம் அவன் சரீரம்.

அப்புறம் அம்பலவாணம் பிள்ளை இப்படிச் சொன்னாராம்:

'புயல் அடித்ததும் நமது நன்மைக்காகவே தான். உண்மையாகவே நம்மை விழுங்க வந்த உள் புயலை இந்த வெளிப்புயல் வந்து விழுங்கி விட்டது. நாம் காப்பாற்றப்பட்டோம்; இனி மீண்டும் ஒற்றுமையுடன் வாழ முற்படுவோம். அறியாமை வேரற்று வீழ்ந்தது; மீண்டும் அறிவொளி பெற்று நம்பிக்கையுடன் எதிர் நோக்குவோம், கடவுள் கருணை சமுத்திரம்; அவன் உள்ளப் போக்கை யார்தாம் அறிந்து சொல்ல முடியும்?'



# குமாஸ்தா

**கண்ணன்**

இந்தியப்படங்கள் பெரும்பாலும் சோக ரசத்தயே ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன என்பது வெளிப்படையான உண்மை. அதுவும் சமீபத்தில் வந்த பல தமிழ்ப்படங்கள் ஒரே சோகக் களஞ்சியங்களாக அமைந்திருக்கின்றன. அருணா பிலிம்ஸாரின் "குமாஸ்தா" இந்த விதிக்கு விலக்கில்லாமல் இருக்கிறது. இப்படத்தில் ஆரம்பம் முதல் முடிவுவரை முக்கிய கதா பாத்திரங்கள் கண்ணீரும் கம்பலையுமாக நிற்கிறார்கள்.

பல தமிழ்ப்படங்கள் வெற்றிகரமாக வெகுநாள் ஓடாததற்குக் காரணம் நம் படப் பிடிப்பாளர்களின் இந்த, "சோக ரஸப்போக்கு" ஒரு முக்கிய காரணம் என்று நினைக்கிறேன். சமீபத்தில் சினிமா டெக்னீஷியன்கள் சங்கத்தில் ஒரு ரஸமான விவாதம் எழுந்தது. அதாவது, "சென்னையில் பெரும்பாலும் தனவந்தர்கள் வசிக்கும் மாம்பலம், மயிலாப்பூர் இவ்விடங்களில் சினிமாத் தியேட்டர்கள் மிகுதியாகத் தோன்றாமலிருப்பதும், இருக்கும் சில தியேட்டர்களில் வருமானம் அதிகம் இல்லாமல் இருப்பதும், இதற்கு மாறாக ஏழை ஜனங்கள் வசிக்கும் பகுதிகளில் பல லாபகரமான தியேட்டர்கள் தோன்றியிருப்பதும், ஏன்? என்ற பிரச்னை எழுந்தது. சங்கத்தின் தலைவரான ராம்நாத் இதற்குக் காரணம் கூறுகையில், தனவந்தர்கள் தங்களுடைய ஓய்வுநேரத்தைச் சந்தோஷமாகக் கழிப்பதற்கு அவரவர்கள் வீட்டிலும், மற்ற இடங்களிலும் வசதிகள் இருப்பதால் சினிமாக்களை அவ்வளவாக நாடுவதில்லை என்றும், ஏழை ஜனங்கள் தங்களது சூழ்நிலையைச் சிறிது நேரம் மறந்து கற்பனை உலகத்தில், சொற்பச் செலவில், சந்தோஷமாகக் கழிப்பதற்குச் சினிமாவைப் பெரிதும் நாடுகின்றார்கள் என்றும் சொன்னார். இது முற்றிலும் உண்மை. இக்காரணத்தினால்தான் சிரிப்பையும், சந்தோஷத்தையும் உண்டுபண்ணும் படங்களுக்குப் பெருவாரியான ஆதரவு கிடைக்கின்றது என்பது நிச்சயம். இதற்கு உதாரணமாக, சமீபத்தில் வெளியான "கல்யாணம் பண்ணிப்பார்" என்னும் ஹாஸ்யப் படத்தைச் சொல்லலாம்.

இந்தியனுடைய வாழ்க்கையிலும், மனப்பான்மையிலும் சோகமே சற்று மேலீடாக உள்ளது. இந்த நிலையில் சோக ரஸ வர்ணனை ஜனங்களைச் சற்றுக் கவர்ந்தாலும், இதற்கு மாறுபட்ட படங்களுக்கே பெருவாரியான ஆதரவு இருக்கிறது என்பது அனுபவபூர்வமான உண்மை.

சதா வறுமையுடன் போராடிக் கொண்டிருக்கும் ரங்கநாதன் என்னும் குமாஸ்தா; அவனுக்குப் பொறுமையே உருவெடுத்து வந்த ஒரு மனைவி; இரண்டு குழந்தைகள், படுக்கையாகப் படுத்திருக்கும் தகப்பனார், வேலையில்லாமல் இருக்கும் ஒரு தம்பி, கல்யாணமாகாமல் இருக்கும் வயதுவந்த ஒரு தங்கை; இவர்களைக்கொண்ட ஒரு குடும்பம். குமாஸ்தா ஒவ்வொரு சிறு விஷயத்திலும் ஊரார் என்ன நினைப்பார்களோ என்று பயந்து நடக்கும் ஒரு மானி. தம்பியோ, அண்ணன் இந்தமாதிரி நடப்பதனால்தான் குடும்பத்திற்கு ஏற்பட்ட அவதிகள் எல்லாம் என்று பயமின்றிச் சொல்லிப் போராடுபவன். எவ்வளவு முயற்சிசெய்தும் பெண் கலியாணமாகாமல் இருப்பதை நினைத்து, தந்தை சதா ஏங்கி உருகுபவர். அழகு, சாந்தம், சீலம் இவை ஒருங்கே படைத்த தங்கை சுசீலாவோ சதா தன் நிலையை நினைத்து நினைத்துக் கண்ணீர் உகுப்பவள்.

குமாஸ்தா வீட்டிற்கு அருகில் இருக்கும் பங்களாவில் உள்ள ஜமீந்தார் மகன் ரவி சுசீலாவை நேசித்து, தன் பெற்றோர்களுக்கு விருப்பமில்லாதபோதும் அவளைத் தான் மணப்பதற்கு இசைய வைக்கிறான். ஆனால் ரவிக்கு அடிக்கடி கடுமையான மார்வலிப்புகள் ஏற்படும் என்பதைப் பெண் வீட்டார் அறியார். கலியாண தினத்தன்று மாப்பிள்ளையின் இந்தக் கோளாறை எவ்விதமோ தெரிந்துகொண்ட தம்பி கோபு, அண்ணாவிடம் சொல்லி, கல்யாணத்தை உடனே நிறுத்த வேண்டுமென்று வற்புறுத்துகிறான். குமாஸ்தா பிள்ளை வீட்டாருக்கும் ஊராருக்கும் பயந்து வாளாவிருக்க, கலியாணம் நடந்துவிடுகிறது. கலியாண தினத்தன்று, களிப்பு மிகுதியால் ரவிக்கு அதிர்ச்சி ஏற்பட்டு, மார்வலிப்பு உண்டாகிறது. டாக்டர் படுக்கையை விட்டு அசையக்கூடாது என்றும் பூரண ஓய்வு அவசியம் என்றும் வற்புறுத்திச் செல்லுகிறார். கலியாண தினத்தன்று இரவு புருஷன் தேக நிலைபற்றி மிக்க சஞ்சலமடைந்த சுசீலா தூக்கமில்லாமல் மாடியின் வெளிப்புறம் வருகிறாள். அதே சமயம் சற்றுக் குணமடைந்திருந்த ரவியும் அங்கு வந்து மனைவியைச் சந்திக்கிறான். மனைவி எவ்வளவு சொல்லியும் கேளாமல் அவளைத் தன்

னிச்சைக்கு ரவி இணங்க வைக்கிறான். பிறகு படுக்கையையடைந்து அச் சம்பவத்தை, வழக்கம்போல் தன் டைரியில் குறித்து வைத்துவிட்டுப் படுத்தவன் பிணமாகிறான். சுசீலாவின் மனக்கோட்டைகள் ஒரே நிமிஷத்தில் இடிந்து நொறுங்குகின்றன. அந்த ஓர் இரவுச் சம்பந்தத்தின் காரணமாகக் கருத்தரித்த அவள் பல இன்னல்களுக்கு ஆளாகி, வீட்டைவிட்டுத் துரத்தப்படுகிறாள். சின்ன அண்ணனின் முயற்சியால் பல வருடங்களுக்குப் பிறகு அவளுடைய வாழ்க்கை ஒருவாறு சீர்படுகிறது. மகள் ராணியும் படித்துப் பெரியவள் ஆகிறாள். ஆனால் அவளுடைய வாழ்க்கையிலும் ஆதியில் தன் வாழ்க்கையில் ஏற்பட்ட சம்பவங்கள் மறுபடியும் நடப்பதைக் கண்டு திடுக்கிடுகிறாள். அவமானத்தின் சின்னம் என்று கலியாணப் பந்தலில் பழி சுமத்தப்பட்டு ராணியின் வாழ்க்கையும் புதையவிருக்கும் தருணம், தெய்வ வசத்தால் உண்மை நிரூபிக்கப்பட்டு எல்லாம் இனிது முடிகின்றன.

குமாஸ்தாவின் வாழ்க்கையைவிடத் தங்கையின் வாழ்க்கையே படத்தில் பெரிதும் இடம்பெற்றிருக்கிறது. ஆகையால் படத்தின் தலைப்பு அவ்வளவு பொருத்தமில்லை என்று சொல்லலாம். [தங்கை சுசீலாவாகப் பண்டரிபாய் பெரும்பாலும் நன்கு நடித்திருக்கிறார். சினிமா ரஸிகர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கும் இளம் நடிகர்களுள் பண்டரிபாய் ஒருவர். படத்தின் சில பாகங்களில் இவர் நடிப்பு மிகவும் போற்றத்தக்க முறையில் இருக்கிறது. உதாரணமாக, கலியாண தினத்தன்று இரவு புருஷனின் தேக நிலையை நன்கு அறிந்து அவருடைய கோரிக்கையை மறுத்துத் தழுதழுத்த குரலில் கெஞ்சி மன்றாடுவது உணர்ச்சிததும்ப இருக்கிறது. இங்கு வசனங்களும் நன்றாக அமைந்திருக்கின்றன. டைரக்டர் R. M. கிருஷ்ணசாமி சுசீலாவுக்கு மறக்க முடியாத அந்த ஓர் இரவை, ரசிகர்களுக்கும் மறக்க முடியாதபடி படம் பிடித்து இருக்கிறார்.

சிறந்த குண சித்திர நடிகர் என்று பெயர் பெற்றிருக்கும் நாகையா குமாஸ்தாவாக நடிப்பது சற்று சுமாராகவே இருக்கிறது. ரவியாக நரசிம்ம பாரதியும், கோபுவாக மனோஹரும் நன்கு நடித்திருக்கிறார்கள்.

படத்தின் ஆரம்பத்திலும், முடிவிலும் விறுவிறுப்புச் சற்றுக் குறைந்து தென்பட்டாலும், பல ரஸமான பாகங்கள் இருக்கின்றன.

கோடம்பாக்கம் பிலிம் ஸெண்டரில் எடுக்கப்பட்டிருக்கும் இப்படத்தில் ஒலிப்பதிவு சுமார். பின்னணி சங்கீதம் லீலா, வசந்த குமாரி, இவர்கள் பாடியிருக்கிறார்கள். குமாஸ்தாவின் சம்சாரமாக வரும் ஜெயம்மா தானே பாடியிருக்கும் முதல் பாட்டு அழகாக அமைந்திருக்கிறது.



# நாளுக்கு நாள் அதிக மிருதுவான எழிலோங்கும் சருமம்

ரெக்ஸோனாவிலுள்ள **கேடில்** இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்

ரெக்ஸோனாவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் நன்றாகத்தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும் தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள்.




## ரெக்ஸோனா

**கேடில்* கலந்த சோப் இது ஒன்றே**

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக்கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP. 101-50 TM ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

தொடர் கதை:

# லக்ஷ்ய புருஷன்

கே. சுந்தரம்மாள்




10

"காதலி ராதையைக் கலங்க விட்டான் மலர்க் கண்ணனே" என்று பாடிக் கொண்டிருந்தாள் ஹேமா. எதிரில் ஐந்து வயதுச் சிறுமி பிரதிபா அவள் செய்வது போலவே தானும் மழலை மொழியினால் பாடிக்கொண்டு ஆடினாள். எப்பொழுது வந்தாலும் அந்த அறை ஹேமாவின் உபயோகத்திலிருக்கும். வெகு முக்யமான சாமான்கள், அவ்விடமிருக்கும். ராஜா, ஹேமா, அவள் தாயார் மூவரைத் தவிர அவ்வறைக்குள் மற்றெவரும் போக மாட்டார்கள். தனக்குத் தனிமை வேண்டும் என்று நினைக்கும் பொழுது ஹேமா தன் அறைக்குச் சென்றுவிடுவாள். அன்றும் காலை வேலைகள் முடிந்து விட்டபடியினால், அன்று இரவு நடக்கும் நடனத்தின் மத்தியில் ஹேமா உடை மாற்றும் சமயம் பிரதிபா ஒரு சிறு நடனம் செய்ய ஏற்பாடு. அதைக்கூட ஒரு முறை செய்யச் சொல்லிப் பார்க்க, குழந்தையுடன் தன்னறைக்குச் சென்றாள். இவள் பாடிக் கொண்டிருக்கும் பொழுது அவ்விடம் வந்த ராஜா பீரோவைத் திறந்து ஏதோ தேடிக் கொண்டிருந்தான். வரும் பொழுது அவன் முகம் ஒரு மாதிரியாக இருப்பதைக் கவனித்த ஹேமா, பாட்டு முடிந்த பிறகே அவனருகில் சென்று 'ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?' என்றாள்.

'ஒன்றுமில்லை.' என்றான் குரலில் ஜீவனே இல்லை.

'என்ன தேடுகிறீர்கள்? வந்தவர்களுக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்தாகிவிட்டதா?

'முழு நோட்டுப் பர்ஸ் எங்கே?' என்றான்.



'அது வெறும் தட்டில்தான் வைக்கப் பட்டிருக்குமா? உள்ளறையில் இருக்கிறது!' என்று சொல்லியவாறு அவள் பக்கத்தில் நின்று எடுத்துக் கொடுத்தாள்.'

அதைக் கையில் வாங்கியவன் அவளை நிமிர்ந்து நோக்கினான். களங்கமற்ற அவளது வதனத்தைப் பார்த்ததும் அவன் மனம் கவலையை மறந்துவிட்டது. 'உன் நடனம் பார்க்க மஹா வித்வான்கள் வந்திருக்கிறார்கள். ஹேமா உன் அதிர்ஷ்டம் பற்றி யாவரும் பொறாமை கொள்ளுகிறார்கள்!' என்று நிறுத்தினான்.

'அதனாலென்ன நமக்கு நஷ்டம்? அதை விடுங்கள். பிரதிபா எப்படி பயமில்லாமல் நிதானமாக ஆடுகிறாள் பார்த்தீர்களா?'

'உன் பெண்ணல்லவா? மீன் குட்டிக்கு நீந்தக் கற்றுக் கொடுக்க வேண்டுமா? எந்த ராதையை எந்தக் கண்ணன் கலங்கவிட்டானென்று பாடினாய்?'

'இதென்ன கேள்வி? பாட்டுக்கு ஆள் தேடவில்லை. நான் பாட்டு உள்ளபடி பாடினேன்' என்றாள்.

'சரி. 'சற்றுப்படுத்துத் தூங்கிக்கொள். உடம்பு தெம்பாக இருக்கும். இன்று அதிக வேலை செய்யாதே' என்று சொல்லிவிட்டு அருகில் நின்ற குழந்தையைத் தூக்கி முத்தமிட்டு விட்டுச் சென்ருன். மடத்தில் அவர்களின் சம்பாஷணையினுல் மனம் வெதும்பி வந்தவன் ஹேமாவைப் பார்த்துவிட்டுச் செல்லும் பொழுது நிம்மதியாகவே சென்ருன்.

பக்கத்து ஊர் ஜனங்களின் ஸௌகரியத்தை உத்தேசித்து உத்ஸவம் முழுவதும் கச்சேரியோ நடனமோ ஐந்தரை மணிக்கு ஆரம்பித்து இரவு ஒன்பதரைக்கு முடியும்படி ஏற்பாடு செய்திருந்தான். பத்து நாட்களுக்கும் கம்பெனியில் ஒப்பந்தம் பேசி, பஸ்விடவும் ஏற்பாடு செய்திருந்தான்.

விசாலமான பெரிய மண்டபம் (ஹால்). நடுவில் தூண்களே இல்லாமல் நூதனமாகக் கட்டியிருந்தது. கிழக்கைப் பார்த்துச் சுவரையொட்டி, சீதா லக்ஷ்மண பரத சத்ருக்கன அநுமத் சமேதராக, சர்வாலங்கார பூஷிதராக, புஷ்பம் கலர்கலரான மின்சார தீபங்களுடன் கூடிய ஒரு விதானத்தின் கீழ் அமர்ந்திருந்தார் ஸ்ரீராமச்சந்திரப் பிரபு. அடுத்தாற்போல் ஆடரங்கம் அமைக்கப்பட்டிருந்தது. கண்ணைக் கவரும் வர்ண ஜால விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு ஜகஜ்ஜோதியாகத் திகழ்ந்தது மேடை. நான்கு மணியிலிருந்தே ஜனங்கள் கூட ஆரம்பித்துவிட்டார்கள். முதல் வரிசையில் வித்வான்களும், ரசிகர்களும் உட்கார்ந்திருந்தார்கள். எப்பக்கம் திரும்பினுலும் ஒரே தலை மயமாகத் தென்பட்டது. ஜன சமுத்திரத்திலிருந்து ஒலி அலை சரியாக ஐந்தரைமணிக்குத் திரை தூக்கியதும் கம்

என ஒய்ந்துவிட்டது. ஊசி விழுந்தால்கூடக் கேட்கும்படியான அமைதி நிலவியது மேடையின் ஒரு பக்கத்தில் பின்னணி சங்கீதக்காரர்கள் உட்கார்ந்திருந்தார்கள். நடுநாயகமாக நட்டுவனுரும் அவர் பக்கத்தில் ராஜாவும் உட்கார்ந்திருந்தார்கள். சிவஸ்வாமி பிடில், ராஜா புல்லாங்குழல் மூர்த்தியும், விஜயாவும் பதம்பாட அமர்ந்திருந்தார்கள். திரை விலகியதும், [illegible]



சள் சுடர்விட்டுப் பிரகாசிக்க, அரக்கும் ஜரிகையும் கலந்த ஆடையுடுத்தி, கைகூப்பியவண்ண நின்ருள் ஹேமா.

வழக்கப்படி நட்டுவனரையும், ராஜாவையும் காலைத்தொட்டு வணங்கிவிட்டு, ஆட ஆரம்பித்தாள். அலாரிப்பு, ஜதிஸ்வரம், ஸ்வரஜித் முதலியவைகளை வரிசைப்பிரகாரம் ஆடிவிட்டு வர்ணமும் ஆடினுள். பிறகுதான் பஞ்சரத்னக் கீர்த்தனைகளுள்ஒன்றுகிய ஸ்ரீராகக்கீர்த்தனைக்குப் பாவம் பிடித்தாள். "எந்தரோ மஹானுபாவோ அந்தரிகி வந்தனமு" என்ற பாட்டை மூர்த்தி கீழ்ஸ்தாயியிலும், விஜயாமேல் ஸ்தாயியிலுமாகச் சேர்ந்து பாடினதும், நடனத்திற்கேற்ற உடல மைப்புக் கொண்ட அதிசௌந்தர்யவதியான ஹேமா அனுயாசமாக ஆடினதும்பாட்டின் ஒவ்வொரு பொருளும் உருப்பெற்று வந்து நிற்பது போலிருந்தது யாவர் மனதிலும், வந்திருந்த மஹாவித்வான்களைக் குறித்துச் சொல்லுவது போலமைந்தது அவளது ஆடல்.

அப்பாட்டு முடிந்ததும், மன நிறைவு மிகுதியால் முன் வரிசையிலிருந்த பிரமுகர்கள் கரகோஷம் ஆரம்பித்தனர். ஹேமா உள்ளே சென்றதும் பிரதிபாவின் ஆடல் நடந்தது. குழந்தை மேடை மீது தோன்றினல் கேட்பானேன். யாவர் மனதிலும் ஒரே குதூகலம். கிருஷ்ணன் வேஷம் போட்டிருந்தது மிகப்பொருத்தமாக இருந்தது. 'ஓடி விளையாடு பாப்பா' என்ற பாட்டிற்கு, எதிரில் நிற்கும் பொம்மையைப் பார்த்துக் கொண்டே அபிநயம் பிடித்தாள். கரகோஷம் மண்டபமே அதிர்ந்தது.



'அடுத்தாற்போல் 'காதலி ராதையைக் கலங்க விட்டான் மலர்க்கண்ணனே' என்ற பதத்திற்கு ஹேமமாலினியும் பேபி பிரதிபாவுமாக அபிநயம் பிடிப்பார்கள். இதைக் கற்பனை செய்தவர் ஸ்ரீமதி ஹேமமாலினி.' என்று ஒலிபெருக்கியின் மூலம் சிவஸ்வாமி சொன்னதைக் கேட்ட ராஜாவின் முகம் ஆச்சர்யத்திலமிழ்ந்தது, மறுகணம் 'நம்மையறியாமல் ஒரு ஏற்பாடா?' என்ற வருத்தம் தோன்ற நட்டுவனரைத் திரும்பிப் பார்த்தான்.

'குறிப்பையுணர்ந்த நட்டுவனர், அவள் கற்பனை செய்தது என்பது நீங்களறிந்த விஷயமே, குழந்தையுடன் இன்று ஆட ஏற்பாடு செய்தது நான் தான். திடீரென்று இன்று தான் தோன்றினது. உங்களைப் பார்த்துப் பேச அவகாசமே இல்லாமல் போய்விட்டது' என்ருர்.

அவன் மனம் சமாதானமடையவில்லை. காலைச் சம்பவம் சற்று மறந்துபோயிருந்தது. இப்பொழுது மறுபடி கலக்கம். 'மூர்த்தியின் வேலை தான். நம்மைக் கலந்து கொள்ளாதது' என்று எண்ணினன். இருந்தாலும் சமயத்தை வீணுக்கக்கூடாது. சூழலூதினன். ஹேமா ராதையாகவும், பிரதிபா கண்ணனுகவும் நடித்தார்கள். கடைசியில் கிருஷ்ணன் ராதையை அணைத்துக் கொள்ள வேண்டும் என்ற சமயம் ஓர் அடி பாக்கியிருந்ததை ஆடிவிட்டு உட்கார்ந்து கொள்ளுவதற்கு முன், 'அம்மா! உக்காந்துக்கோ கட்டிக்கிறேன்' என்ருள் குழந்தை. ஒரே சந்தோஷ ஆரவாரத்தின் நடுவில், மண்டியிட்டுக்கொண்டு உட்கார்ந்த ஹேமாவை அணைத்துக் கொள்ளும் காட்சியுடன், மங்களம் பாடி நடனம் முடிந்தது.

வந்திருந்த வித்வான்கள் கற்பித்த நட்டுவனரையும், ஹேமாவையும் புகழ்ந்து கூறியதுடன், இவைகளுக்கு முயற்சியளித்த ராஜாவைப் பெரிதும் பாராட்டினர்கள். அதில் வயது சென்றவரும் சரளமாகப் பேசக்கூடியவருமான ஒருவர் 'இக்குழந்தைக்கு' என்று கேட்டு முடிக்கு முன்,

'மிஸ்டர் ராஜாவிற்கு மனைவியாகப் போகிருள், என்ருன் மூர்த்தி.

கடுமையாகத் திரும்பிப் பார்த்தான் ராஜா.

எல்லாம் முடிந்து யாவரும் சாப்பாடாகி, அவரவர்கள் படுக்கச்செல்ல மணி பதினென்றரையாகிவிட்டது. வேலையாட்களை அனுப்பிவிட்டு, கதவுகளைத் தாழிட்டு வந்தாள் ராஜாவின் தாய். சமையலறையில் சாமான்களைச் சரிபார்த்து மூடிக்கொண்டிருந்த ஹேமா. 'அம்மா இது ஏது நெய் திறந்தபடி இருக்கே?' என்று கேட்டாள்.

'இவ்வளவு நாழி ஆடிவிட்டு, அலுப்புத் தீரப் படுத்துக்கொள்ளாமல் வேலை செய்ய வந்து

விட்டாய்? அப்படியே மூடிவை. என்ன வேலைக்காரர்கள்? சாமான்களைக் கவனிப்பதேயில்லை, போகட்டும். நீ போய்ப் படுத்துக்கொள். எல்லாவற்றையும் நான் பார்த்துக்கொண்டு வருகிறேன்.'

'இருவருமாகப் பார்த்தால் சுருக்க முடியும். இருவருமே படுக்கச் சென்றுவிடலாம். உங்களைத் தனியே விட்டுவிட்டுப் போக மனம் வருமா?'

'ஆமாம். வளைய வளைய வேலை செய்ய வருகிறாய். எனக்கு எவ்வளவோ ஹிதமாக இருக்கிறாய்? எல்லாமிருக்கிறது. ஆனால் முக்யமான விஷயத்தில் துப்பில்லை' என்றாள் அலுப்பாக.

'என்னம்மா சொல்லுகிறீர்கள்?' என்றாள் இரக்கத்துடன். அது வரை அம்மாதிரியான வார்த்தைகள் கேட்டவளல்லவாதலின்.

'சொன்னேன் சுரைக்காய்க்கு உப்பில்லையென்று. வயது பத்தொன்பது ஆகப்போகிறது. ஒரு புருஷனைத் தன் வழிக்குக் கொண்டு வரச் சாமர்த்தியமில்லை. அழகிருந்தென்ன? ஆட்டமிருந்துமென்ன? ஊரார் வசைச்சொல்லைக் கேட்டுக் கேட்டுக் காது புளித்துவிட்டது இது வரை மறைமுகமாகச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இன்று முகத்திற்கு முன்னேயே கேட்டுவிட்டார்கள். இன்று வரும் நல்ல செய்தி, நாளை வரும் என்று என் மனம் ஏங்கி ஏங்கித் தவிப்பது தான் மிச்சம். இரவு நிலவானாலுமே இருட்டானாலுமே மொட்டை மாடியில் உட்கார்ந்து பேசுவது வழக்கம் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே, அந்தச் சமயம் போதாதா உன் சக்தியைப் பிரயோகம் பண்ணுவதற்கு ஏதாகிலும் துளி அகப்பட்டால் போதும். அதை வைத்துக் கொண்டு அவனை மடக்கலாம் என்று நானும் எவ்வளவோ இரவு அவ்விடம் வந்து மறைந்து நின்று பார்த்திருக்கிறேன். அப்பா! என்ன வைராக்கியம்? வயது சென்ற கிழவர்கள் கூட இவ்வளவு நிர்ணயமாக நடந்து கொள்ளமாட்டார்கள். என்னவோ உங்களுக்குப் பேசவும் விஷயமிருந்தது. அலுத்துப் போய், கீழே இறங்குவேன். அவன் தன் ஆட்சியைச் செலுத்துவதற்கு நீ தான் காரணம். என்னால் இனி மேல் வெளியில் தலைகாட்ட முடியாது. காசியிலேயே போய் என் காலத்தைக் கழிக்கிறேன். நீயும் அவனுமாகவே எல்லாவற்றையும் கட்டிக்கொள்ளுங்கள்' என்றாள். அன்று மத்தியானம் நாலைந்து பேர் கேட்ட கேள்வியினால் மனம் புண்பட்ட நிலைமையில்.

அது வரை அதிர்ந்து பேசிக்கேட்டறியாதவளின் வாயில் கடுமை மொழிகளைக் கேட்டதும் ஹேமாவிற்குப் பூமி வெடித்துத் தன்னை விழுங்கிவிடாதா?' என்று தோன்றினது. நீ தான் காரணம் என்ற குற்றச்சாட்டை மனம் ஆமோதித்தது. தாங்கள் இருவரும் ஒருவரை ஒருவர் மடக்கப் பிரயத்தனம் செய்யப் போக விபரீதமாகப் பேச்சுக் கிளம்ப ஹேதுவாயிற்று. நாம் மீள முடியாத தங்க வலையில் மாட்டிக்கொண்டுவிட்டோம். 'வலை தங்கம்' என்றால் அவஸ்தை அவஸ்தை தானே' என்று எண்ணிய மனம் கண்ணீர் ததும்பச் செய்தது. நான் என்ன செய்யட்டும் அம்மா?' என்றாள்.

'இதைப் பார். உனக்கு உன் அழகை உபயோகப்படுத்தச் சக்தியில்லை அதனால் இந்த மாதிரி வசைச்சொல் என்னைக் கொல்லாமல் கொல்லுகிறது. கல்யாணம் செய்து கொள்ள இஷ்டமில்லாவிட்டால் விட்டுவிடு. எங்காவது போகிறேன்' என்று கேள். துணிந்து வாதாடு. நானிருக்கிறேன் உன்னைப் பாதுகாக்க' என்றாள்.

'சரி. உத்ஸவம் முடியும் வரை ஒன்றும் பேச முடியாது. கடைசி நாளன்றே கேட்டுவிடுகிறேன்' என்றாள்.

இருவரும் வெளியே வந்தார்கள். பின்னால் வந்த ஹேமாவினிடம் பண்ணையாள் மாரிமுத்து 'ஹேமா! நம்ம குழந்தை இரண்டாம் மொட்டை மாடியில் இருக்கு. உன்னை செத்தெ வந்துட்டுப் போவச் சொல்லிச்சு' என்றான்.

இது ராஜாவின் தாயின் காதிலும் பட்டது. என்றாலும், மனதிற்குள் சிரித்தவாறே திரும்பிப் பாராமல் படுக்கச் சென்றுவிட்டாள்.

சற்று நின்று சிந்தனை செய்தாள். சமையல்காரன், 'ராஜா இன்று நேராகச் சாப்பிடவில்லை. ரசம் சாதம் மட்டும் சாப்பிட்டார்' என்று சொன்னது நினைவில் வரவே, மறுபடி உள்ளே சென்று, அடுப்பில் காய்ந்து கொண்டிருந்த பாலைவிட்டுச் சூடாக ஒரு டம்ளர் காப்பியை எடுத்துக் கொண்டு தன்னறைக்குள் சென்று, தலைவலி மாத்திரை ஒன்றையும் எடுத்துக் கொண்டு மாடிப்படி யேறும் ஹேமாவைக் கவனித்த ராஜாவின் தாய்க்கு, 'ஐயோ இந்தப் பெண்ணைக் கடுமையாகப் பேசிவிட்டோமே. தாய் தந்தையற்று நம்மையே கதியென்றிருக்கும் அதற்கு ஆறுதல் யார்? போய் வரட்டும், சமாதானம் சொல்லுவோம்' என்று நினைத்ததுடன், ராமச்சந்திரா இன்றாவது அப்பெண்ணிற்கு இரங்கமாட்டாயா' என்று வேண்டிக்கொண்டாள்.

இரண்டாவது மொட்டை மாடிக்குப் படியேறியதும் ஓர் அறை போலிருக்கும். ஆனால் வராண்டா பக்கம் சுவர்கிடையாது. கோடைக் காலத்தில் காற்றோட்டமாகப் படுத்துக்கொள்ள, சந்திர வெளிச்சம் மேலே படாமலிருக்கும்படி கட்டியது. அவ்விடம் ஒரு சாய்மான நாற்காலியும், மூன்று நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. ஹேமா அவ்விடம் வரும்பொழுது சாய்மான நாற்காலியில் படுத்துக்கொண்டிருந்தான் ராஜா. அவள் வந்ததும், சட்டென எழுந்து கதவைத் தாழிட்டான். ஒரு நாளுமில்லாத இச்செய்கை அவளுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. அந்த இடத்தில் நிலவில்லையானாலும் வெளிப்

புறத்து நிலவின் சாயை ஒருவர் முகம் மற்றவருக்கு நன்ருகத் தெரிந்தது கோபத்திஞல் கடுமை காட்டின முகபாவம் அவளுக்குச் சற்றே பயத்தை அளித்தது.

கையில் மாத்திரையையும் காப்பியையும் வைத்துக்கொண்டு நிற்கும் ஹேமாவைப் பார்த்ததும், கொந்தளித்துக் கொண்டிருந்த அவன் மனதில் சற்று அமைதி தோன்றிற்று. 'குறிப்பறிந்து நடக்கும் இவளை .........' என்ற சிந்தனையை,

'ஆறிப்போகுமுன் இதைச் சாப்பிடுங்கள்' என்று டம்ளரை அவன் பக்கம் நீட்டிஞள்.

'எனக்குத் தலைவலியென்று யார் சொன்னது?'

'ஒருவர் சொல்ல வேண்டுமா? உங்கள் முகத்தைப் பார்த்தால் தெரியாதா?'

'என் முகத்தை எப்பொழுது பார்த்தாய்?'

'இதென்ன கேள்வி? ஆறிப்போகு முன் சாப்பிடுங்கள். நீங்கள் இவ்விடம் வரும் பொழுது பார்த்தேன்' என்ருள். அப்படியும் அவன் கையை நீட்டி வாங்காதிருக்கவே அவன் வாயருகில் காப்பியைக் கொண்டு போஞள். அதற்கு மேல் அவனுல் தடுக்க முடியாமல் செய்தது. ஏதோ ஓர் சக்தி. சட்டென மாத்திரையையும் காப்பியையும் வாங்கி, மாத்திரையை வாயில் போட்டுக்கொண்டு மடமடவெனக் குடித்துவிட்டுப் பாத்திரத்தை அவள் பக்கம் நீட்டிஞன்.

அதைக் கையில் வாங்கிக்கொண்டு, என்னைக் கூப்பிட்டதாக மாமி சொன்ஞனே, என்ன விஷயம்? எனக்கு ரொம்ப அலுப்பாக இருக்கிறது. இன்று சீக்கிரம் அனுப்பிவிட்டால் தேவலை' என்ருள்.

'ஆமாம், இப்பொழுதெல்லாம் என்னுடன்பேச அலுப்பாகத்தான் தோன்றும். மூர்த்தியினிடம் பல்லைக்காட்டிக்கொண்டு பேச, குஷியாக இருக்கும்' என்ருன்.

இச்சொற்கள் சவுக்காலடித்ததுபோல் இருந்தது. மனதின் சோர்வு, தேகத்தின் அலுப்பு எல்லாம் மாயமாக மறைந்துவிட்டது. 'என்ன சொன்னீர்கள்?' என்று நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்தாள்.

'அகாலவேளையில் அவனுடன் தனியாக நின்று என்னபேச்சு?'

'நீங்களா இவ்விதம் கேட்கிறீர்கள்?'

'நானேதான் கேட்கிறேன். நீ பல்லையிளித்துப் பேசுவதை யாராவது பார்த்திருந்தால் என் மானம் கப்பலேறியிருக்கும்'

'தனியாக நின்று பேசவில்லை. எல்லோரும் நடமாடுமிடத்தில் இரண்டே நிமிஷம், இன்று ஆட்டம் அதியற்புதமாக அமைந்தது. மஹா வித்வான்கள் மிக மிகக் கொண்டாடிஞர்கள் என்பதைத்தான் சொன்ஞன். நானும் வந்தனம் கூறினேன். இதிலென்ன தவறு? இதுவரை பேசாத பேச்சு, புதிதாக என்ன வந்துவிடப்போகிறது?'

'பாதி ராத்திரியில் என்ன பாராட்டுதல் வேண்டியிருக்கிறது? அவனுடன் அந்தமாதிரி நின்று பேச உனக்கு லஜ்ஜையில்லை?' என்று பல்லைக் கடித்தான்.

'இன்று என்ன அளவிற்கு மீறி வார்த்தையைச் செலவழிக்கிறீர்கள்? உங்கள் லக்ஷ்யத்தின்படி நான் பேசியதில் தவறு எப்படி சொல்லமுடியும்? உங்களுடன் இரவு இரண்டுமணிவரை தனியாக உட்கார்ந்து பேசவில்லையா? மனதில் களங்கமில்லாமல், பிறர் சொல்லுவதற்காக என்றில்லாமல் சுயமாக, தைரியமாக நடக்கவேண்டு மென்பது தானே உங்கள் உபதேசம், ஆண்பிள்ளைகள் என்ருல் மூர்த்தியும் அதில் அடங்கினவன் தானே? இதோ இந்தச் சமயம் கதவைத் தாழிட்டு விட்டுப் பேசுகிருேம், இது தவறில்லையா?

'என்ன சொன்ஞய்? நானும் அவனும் உனக்கு ஒன்ருடி ராஸ்கல்! எதிர்த்தா பேசுகிருய்' என்று கன்னத்தில் பளீரென அறைந்துவிட்டான்.

எதிர்பாராமல் பலமாக விழுந்த அடியிஞல் பொறி கலங்கியது போலிருந்தது. கையிஞல் கன்னத்தை அழுத்திய வண்ணம் நின்ருள். கண்களில் நீர்வடிந்து மேலாடையை நனைத்தது. இன்று விடிந்தது முதல் நமக்கு அவச்சொல் கேட்பது தாஞ கிடைத்த பலன்? மத்யானம் உக்ராண அறையில் சாமான்கள் எடுக்கும்பொழுது திண்ணையில் நாலைந்துபேர் தன்னைப்பற்றி. முன் பிறந்தகம் சென்றபொழுது வீட்டிற்குள் கேவலமாகப் பேசிஞர்களே, அதேவிதமாகப் பேசுவதைக் கேட்டபொழுது உள்ளம் கொதித்தது. சற்றுமுன் ராஜாவின் தாயார் தன்னையே குற்றம் சாட்டிப் பேசிஞள். இப்பொழுதோ, எவஞல் தனக்கு அளவற்ற பெயரும், புகழும் கிடைத்ததோ அவஞல் பெண்மை தாக்கப்படுகிறது. சற்றுமுன் அம்மாவினிடம் உத்ஸவம் முடிந்த பின் கேட்பதாகச் சொன்ன விஷயம் இன்றோ இரண்டிலொன்று தீர்ந்துவிடும்' என்ற சிந்தனையில் தவித்தது மனம். தற்சமயம் என்ன செய்வது? என்று குழம்பிஞள்.

'அதே சமயம் ராஜாவின் மனமும் தாபத்தை அடைந்தது. அடித்த கை விறுவிறுப்பு அடங்கவில்லை. கண்ணீருடன் நிற்கும் அவளை நிமிர்ந்து நோக்கிஞன். மனதில் எழுந்த ஆத்திரம் சற்றுத் தணிந்தது. மடத்தனமாக அடித்துவிட்டோமே என்ற எண்ணம் தோன்றலாயிற்று. ஆனுலும் அவள் மேலே என்ன சமாதானம் சொல்கிருள் பார்க்கலாம் என்ற ஆக்ரஹமே மேலெழுந்தது. அந்தச் சமயம்,

## தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள
### கிருமிகளிலிருந்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக்கொள்ளுங்கள்...



# லைப்பாயின்

# பாதுகாக்கும் நுரையினால்!

நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாயிருந்தாலுங்கூட, தினசரித்தொல்லையான அழுக்கிலுள்ள கிருமிகளின் அபாயத்துக்குள்ளாக நேரிடும். லைப்பாய் சோப் உபயோகித்துத் தவருமல் ஸ்நானம் செய்து உங்கள் ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். லைப்பாய் சோப்பின் பாதுகாக்கும் நுரை அழுக்கிலிருக்கும் கிருமிகளை விரட்டுகிறது, உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.






# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான கிருமிகளிலிருந்து தினமும் உங்களைக்காப்பாற்றுகிறது

L. 228-50 TM

'என்னை அடிக்க உங்களுக்கு என்ன உரிமையிருக்கிறது? எந்தத்தவறுக்காக என்னைத்தொட்டு அடித்தீர்கள்? நினைவுதெரிந்த நாள்முதல் சகலமும்தாங்கள்தான் என்று அன்பு செலுத்தினேனே அது தவரு? தாங்களே தெய்வமென்று பக்தி செலுத்தினேனே அது தவரு? எனது முழு அன்பிற்கும் பாத்திரமான தங்களின் விருப்பம் எதுவோ அதுவே என் விருப்பமாக, லக்ஷ்யத்தைக் கடைப்பிடிக்க, உன் உறவு தேவையென்று தாங்கள் கேட்டதற்காக, அந்த லக்ஷ்யம் காப்பாற்றப்பட உலகத்தாரால் எவ்வளவு வசைச்சொல் கேட்டிருப்பேன், அவையொன்றையும் வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் உங்கள் விருப்பம்போல் நடந்தது தவரு? என் சகோதரி, தகப்பனுர் யாவரையும் மறந்து, அவர்கள் பேச்சைத் தட்டி, உங்கள் தாயார் சொல்லும் புத்திமதியைக்கூட நிராகரித்துவிட்டு உங்கள் சந்தோஷம்தான் என் வாழ்வின் லக்ஷ்யம் என்று நடந்தேனே அது தவரு? எந்த ஆண்பிள்ளையுடனும் சங்கோசமின்றி, தைரியமாகப் பேசவேணடுமென்று தாங்கள் கட்டாயப்படுத்தினதெல்லாம் மறந்துவிட்டதா? சற்று நன்ருகச் சிந்தித்துப் பாருங்கள். மூன்று தடவை, தாங்கள் லக்ஷ்யத்தினின்றும் நழுவப்பார்த்தீர்கள். மனம் தடுமாறின சமயம் நான் முயன்றிருந்தால் உங்கள் கொள்கை ஆடிக்காற்றின் பஞ்சின் நிலைமையை அடைந்திருக்குமென்பதை மறுக்கமுடியுமா? என் உணர்ச்சிகளைக் கொன்றுகொண்டு, உங்கள் லக்ஷ்யத்தைக் காப்பாற்ற முற்படும்பொழுது, என் நிலைமை என்னவாகியிருக்கும்? அவைகளுக்கெல்லாம் இதுகைம்மாரு? முதலாக நீங்கள் மூர்த்தியை வீட்டில் அழைத்த பொழுதே எச்சரித்தேன். உங்கள் திருப்திக்காக அவனிடம் சகஜபாவமாகப்பேச எவ்வளவு நாள் கஷ்டப்பட்டு முயன்றிருக்கிறேன். 'கற்பகத்தருவை விட்டுக் காஞ்சிரங்காயை உண்ணும் மனம் படைத்தவள்' என்று நீங்கள் நினைத்தபின்பு என் உயிர் இருந்து என்னபயன்? நாக்கைப் பிடுங்கிக் கொண்டு உங்கள் காலடியிலேயே விழுந்திருப்பேன். ஆனல் அதற்கும் எனக்குச் சுதந்திரமில்லை. இறந்தவருக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றியாகவேண்டும். பிரதிபா புருஷன் வீடு சென்றபின்புதான் எனக்கு விடுதலை. அதுவரை? என்னல் சிந்திக்கக்கூட முடியவில்லை. லக்ஷ்யபுருஷரே எதற்காக அடித்தீர்கள்? என்ன உரிமை இருக்கிறது?' என்று அழுதவாறு கூறி நிறுத்தினள்.

'அவளையே பார்த்துக்கொண்டு நின்றவன் எந்த விதத்தில் உரிமை இல்லை?' என்ருன் நிதானமாக.

'எப்படி?' என்ருள். அழுகை நின்றுவிட்டது.

அவளை அடிக்கும்வரை அவன் மனம் கோபத்தின் உச்ச நிலையில் இருந்தது, அடித்த கை விறுவிறுத்ததுமேதான் எவ்வளவு கீழ்த்தரமான உணர்ச்சிக்கு இடம் கொடுத்து விட்டோம் என்ற நினைப்புத் தோன்றலாயிற்று. கோபத்தின் உச்சநிலை குறைந்து விட்டது. அவள் மட மடவென்று சொல்லி வந்த விஷயங்கள் ஒவ்வொன்றும் அவன் ஹ்ருதயத்தைத் தொட்டன. அதிலே மனம் ஒன்றி உணர்ச்சிவசமாகி விட்டது, அவளை எந்த விதமாகச் சமாதானப்படுத்துவது என்ற பிரச்னை தோன்றும் பொழுது அவளது கேள்வி உதவியளிக்கவே சட்டென மனதில் தோன்றியதைக் கேட்டுவிட்டான். அடுத்த கேளவி யெழுந்ததும் தயங்காமல் 'நீ என் மனைவி' என்ருன்.

'என்ன? வாய் கூசாமல் சொல்லுகிறீர்களே? என்ன அத்தாக்ஷி இருக்கிறது'

'என்ன அத்தாக்ஷி வேண்டும்? உலகிற்கு அறிவிக்கவில்லை; செய்கையில் காட்டவில்லை. ஆனல் நமது மனம் என்ருே ஒன்றுபட்டுவிட்டது. உன்னல் மறுக்க முடியுமா' என்று கேட்டவாறு எதிர்பாராதவிதமாக அவளை அருகிலிழுத்து அணைத்துக்கொண்டான்.

அவளையறியாமலே அவள் கைகள் அவன் இடுப்பைச் சுற்றின. தோளின் மீது சாய்ந்து கொண்ட அவளது தான் அடித்த கன்னத்தின் மீது தனது கன்னத்தை வைத்துக்கொண்டான். கொதித்த இரு உள்ளங்களுக்கும் அச்செய்கை சாந்தியைக் கொடுத்தது. சற்றுமுன் நடந்தது கூட அவர்கள் நினைவில் தோன்றவில்லை. பாலைவனத்தில் நெடுநேரம் பிரயாணம் செய்தவர்களுக்குச் சுனைநீரையும் குளிர்ந்த நிழலையும் அடைந்தது போலிருந்தது. அவர்களின் நிலை.

சற்றுப்பொறுத்து ஏதோ சொல்ல ஆரம்பித்த ஹேமாவின வாயை மூடி, 'ஒன்றும் சொல்லாதே. என்னல் இனி பொறுக்க முடியாது. ஆத்திரத்தில் மதியைப பறிகொடுத்து மிருகத்தனமாக நடந்து கொண்டுவிட்டேன். லக்ஷ்யம், எனது கொள்கை எல்லாம், மறந்து சாதாரணமாக மனிதனுக்குத் தோன்றும் உணர்ச்சிக்கு வசமாகி விட்டேன். ஹேமா! நீ எனது பொருள். என்னைத் தவிர உன்னிடம் நெருங்கிப் பேச யாருக்கும் உரிமையில்லை என்ற மனப்பான்மை மூர்த்தியைப் பார்த்ததும்தோன்றிவிட்டது. அதுவும் நான் உன்மீது கொண்டிருக்கும் அளவற்ற காதலினுல் நேர்ந்ததுதான். உண்மையை ஒளிக்காமல் சொல்லுகிறேன் ஹேமா. நீ சிறு பெண்ணுகவிருக்கும் பொழுது ஏற்பட்ட பாசம் உன் பெண்மை மலர்ந்ததும் பிரேமையாக மாறிற்று, பிரேமாவுக்குத் துரோகம் கனவிலும் நினைக்க விரும்பாத என் மனம், மிகுந்த முயற்சியின் பேரில் கைம்மாறில்லாத தூய அன்பாக மாற்றிக் கொள்ளப் பிரயத்தினப்பட்டேன், வெற்றியும் கண்டேன். நீ என்மீது வைத்திரும் அன்பை பக்தியாகக் கொண்டாலும், நீ வேறு யாரையும் விரும்பமாட்டாய்' என்று என்மனம் என்ருே அறிந்துவிட்டது. கலைக்கே உன் வாழ்வு அர்ப்பணம் 'என்ற முடிவைப் பிரேமாவின் மறைவு

மாற்றிவிட்டது. என்றாலும் கஷ்டப்பட்டு உண்டாக்கிக்கொண்ட தூய அன்பை அப்படியே அனுஷ்டிக்க விரும்பினேன். இயற்கை என்னை ஆட்டுவித்தது. உன் முயற்சிதான் இயற்கையை வெற்றிகொள்ளச் செய்தது. அம்மா முதலிய யாவரும் ஒரே முகமாகச் சொல்லும் பொழுது மனம் சஞ்சலம் கொண்டாலும் நீயாகக் கேட்கவேண்டுமென்று நானும், நானாகக் கேட்க வேண்டுமென்று நீயும் எதிர்பார்த்தோம். உன்னை உனக்காக, உன் குணத்திற்காக, உன் தூய அன்பிற்காக, என்மனம் சரணடைந்து எத்தனையோ வருஷங்களாகிவிட்டன. மனம் ஒன்று பட்டது என்பதை மறுக்கிறாயா?'

'எதற்காக மறுக்கவேண்டும்? ஆனால் ஒரு சந்தேகம்?'

'என்ன?'

'இவ்வளவு நாழி நீங்கள் சொன்னது உண்மையாகவா? அல்லது இன்னும் ஏதாவது பரீக்ஷையா?'

'பரீக்ஷைவைக்கும் சக்தி என்னிடமிருந்து அகன்றுவிட்டது. உண்மை நிலை என்பது இது வரையிலுமில்லாத விதமாக இப்பொழுது நீ என் அணைப்பிற்குள்ளிருக்கிறாயே அதுவே உண்மையை உணர்த்தும். இதுமட்டுமல்ல, இந்த நிமிஷம் முதல் நீயும் நானும் கணவன் மனைவி, நாளையதினமே சென்று ஸ்ரீ நாதசர்மாவின் ஆசிபெற்று வந்து, அடுத்த வாரத்தில் நமது கல்யாணம் நடந்துவிடும். சம்மதந்தானே?' என்று...

'நீங்கள் என்னைப் பேசவிட்டால்தானே பதில் சொல்லமுடியும். இவ்வளவு விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டு ஏனிப்படி நடந்தீர்கள்? என்னைப் புரிந்துகொண்ட செய்கையா? அல்லது .........

'நீ என்னைப் புரிந்துகொண்டிருப்பாயோ என்னவோ, எனக்கு முதலில் உன்னைப் புரிந்து கொள்வது கொஞ்சம் சிரமமாகத்தானிருந்தது. புரிந்து கொண்டதும் என் கொள்கையைக் கடைப்பிடிப்பதில் தவறில்லை என்று துணிந்தேன்.'

'எனக்கும் முதலில் உங்களைப்புரிந்து கொள்ள முடியாமலிருந்தபொழுது மிகவும் துன்பப்பட்டேன். புரிந்துகொண்டபிறகே உங்களிடம் மிகமிக நெருங்கிப் பழகலானேன். இப்பொழுதிருக்கும் ஆனந்த நிலைமை? அம்மா, பிரேமாவிற்குக் கொடுத்த வாக்கு நிறைவேறிவிட்டது' என்று முடிக்கு முன்,

'என்ன? உன்னிடமும் வாக்குறுதி பெற்றாளா?' என்றான்.

'அப்படியானால் உங்களிடமும் பெற்றுக்கொண்டாரா? இருவரையும் சேர்த்துச் சொல்லவேண்டுமென்ற ஆவல் நிறைவேருமல் பிராணனை விட்டுவிட்டார் என்ற குறை என்மனதை அரித்து வந்த கவலை விட்டது.'

'நீ ஏன் என்னிடம் இவ்விஷயம்பற்றிச் சொல்லவில்லை?'

'நீங்கள் ஏன் சொல்லவில்லை?'

'அவள் சொன்னதை வெளியிட்டிருந்தால் கடமைக்காக நீ ஒத்துக்கொள்வாய் அது கூடாது என்பதற்காகவே. உன் பதில்?'

'அந்த ஓலையைத் திருப்பி வாசியுங்கள். அவ்வளவுதான். மிஸ்டர். எனக்குக் காலை வலிக்கிறது சற்று உட்காரலாமா?' என்ருள் சலுகையாக அடிபட்டதாக ஒரு நினைப்பின்றி.

தன் பிடிப்பைத் தளர்த்திவிட்டு 'வா! அப்படி நிலவில்போய் உட்காருவோம். கதவு தாழிட்டபடியே இருக்கட்டும்.' தலையைக் கையில் தாங்கிய வண்ணம் படுத்துக்கொண்டிருந்தவன் எதிரில் உட்கார்ந்திருந்தவளைத் தன்பக்கமிழுத்துக்கொண்டான். அவன் மார்பில் சாய்ந்தவண்ணமிருந்தவளின் கன்னம் அவன் கண்களில் படவே, அவன் மனம் துணுக்குற்றது. ஐந்து விரலும் பதிந்து சிவந்து வீங்கியிருந்தது.

'சே, என்ன மடத்தனம் செய்துவிட்டேன். விரல் பதிந்துவிட்டதே; ரொம்ப வலிக்கிறதா ஹேமா?' என்று அன்பு ததும்பக் கேட்டவாறு கன்னத்தில் தனது கையை வைத்தான்.

'அடிப்பானேன். பிறகு வலிக்கிறதா வென்று கவலைப்படுவானேன்?' என்ருள்.

'இன்று காலையிலிருந்து என்மனம் பட்ட வேதனையின் அளவு உனது கன்னத்தில் வடுவாகப் பதிந்துவிட்டது. இன்று மேடைமீது நீ நடனமாடும் சமயம் மட்டும் என் மனம் சற்று நிம்மதியாக இருந்தது. எப்பொழுதுமே, நடனத்திற்காக மேடையில் தாளத்தில் ஓடி வைத்ததுமே உன்னை மறந்துவிடுவாய். அதிரூப ஸௌந்தர்யத்துடன் மேடைமீது நீ ஆடும்பொழுது, நீ என்றென்றைக்கும், எப்பொழுதும் நீ ஆடவேண்டும், நான் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும் என்ற நினைப்புத் தோன்றும். சிவனுகவும், பார்வதியாகவும், ராதையாகவும், நீ பாவம் காட்டும் பொழுது, பாவம் தோன்ருமல் அந்தத் தேவதையாகவே தோன்றுவாய். அப்பொழுதெல்லாம்





என்மனதில் உன்னைச் சக்தி அம்சம் பெற்றவள் பூஜைக்குரிய புஷ்பத்தைத் தலையில்சூடி வாடவைக்கக் கூடாது' என்றே தோன்றும். அந்த ஒரு மனப்பான்மையே என் புலனடக்கத்திற்கு உதவிற்று. இன்று காலை அவர்கள் என்னைக் கேட்டபொழுதுகூட இந்தவிதமான மனப்பான்மை தான் தோன்றினது. (என்று காலை நடந்த விஷயத்தைச் சொல்லி முடித்து,மூர்த்தியைச் சுட்டிக்காட்டினதும் மனம்

பேயாகிவிட்டது. அவர்கள் சொல்லினால் மட்டுமல்ல, கடந்த இரண்டுமாதங்களாக என் வற்புறுத்தலினால் பழகினாலும், நீ அவனுடன் பேசும் பொழுதெல்லாம் என்னையறியாமல் பொறாமைக் கனல் தோன்ற ஆரம்பித்தது. காரணம் எனக்கே புரியவில்லை. இன்று ஒரு சமயம் என் லக்ஷ்யத்திற்கான உன் மனதை மூர்த்தி பேதமுறச் செய்துவிடுவானோவென்ற சந்தேகம் தோன்றவே, 'நாளை கல்யாணம்' என்று சொல்லிவிடுவது என்று நினைத்தேன். நீ 'எந்தரோ மஹானுபாவோ' பதத்திற்கு ஆடும்பொழுது, அவர்களிருவரும் ஸ்வரம் சாஹித்யம் பாடுவதும், நீ ஜதி பிடிப்பதுமான சமயத்தில் என்மனம் ஆனந்தத்தில் துள்ளியது. அப்பொழுது, கல்யாணப்பந்தத்தினால் இந்த ஆனந்தத்திற்குக் குறைவு ஏற்பட்டால்...' அதனால் நாளைக்காலை அவர்களிடம் என் நடத்தையில் ஒரு மாறுதலுமில்லை. இனி இந்த ஊர்ப்பக்கமே வரவில்லை. 'என்று சொல்லிவிடுவது!' என்ற முடிவிற்கு வந்தேன். மறுகணமே அதிர்ச்சிதரும்படி, சிவஸ்வாமி ஒலிபெருக்கியில் பேசிவிட்டான். அதிருக்கட்டும், நீ குழந்தையுடன் ஆடப்போகும் விஷயத்தை என்னிடம் ஏன் சொல்லவில்லை?'

'நட்டுவனார் சொல்லியிருப்பாரென்று நினைத்தேன். மேலும் நீங்கள் என் கண்களில் அகப்படவேயில்லை. மத்யானம் குழந்தை அழுதாள், அவளை அணைத்துக்கொண்டு தூங்கப் போய்விட்டேன். எழுந்தவுடன் உங்களுடன் பேச அவகாசமில்லை அவ்வளவுதான்.'

'என் மனதிற்கு மூர்த்தியுடன் சேர்ந்து வேண்டுமென்று செய்த ஏற்பாடு' என்று தோன்றியது. மனதில் புயல் தோன்றியது. அதுவீச, வித்வானிடம் 'மனைவியாகப் போகிறாள்' என்று ஏகதாளமாகச் சொன்னான் மூர்த்தி. பழைய குரோதம் தலையெடுத்தது. அவனுடன் நின்று நீ பேசியதும் பொறுக்கமுடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது' என்று முடிக்குமுன்,

'கன்னம் பதம்பார்க்கப்பட்டது. கல்யாணம் முடிவாயிற்று' என்று சிரித்தவாறு கூறியபடி தன் கன்னத்தைத் தடவும் கையைத் தன் கையாலெடுத்துக்கொண்டாள்.

'காலைக்குள் கன்னம் சரியாகாது, என்ன சொல்லுவாய்?'

'கவலைப்படாதீர்கள். கையைவைத்துப் படுத்துவிட்டேன்' என்று சொல்லிக்கொள்ளுவேன்.

'அதுவிஷயம் சிவஸ்வாமியை ஏமாற்றமுடியாது. மிருதுவான உன் விரலெங்கே, உறுதிகொண்ட தடித்த என் விரலெங்கே?'

'அதெல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன். எல்லோர் முன்னிலையிலும், கன்னத்தில் என்ன?' என்று கேட்டுவிடுங்கள் போதும். இது போகட்டும். நாளை நாம் போவதாக இருந்தால் பாக்கி நாள் உத்ஸவம்?'

'இது விஷயமென்று தெரிந்துவிட்டால் ஊரே ஒத்துக்கொண்டுவிடும். நான் ராமச்சந்திர மூர்த்தியை விடுவதாக இருந்தாலும் அவர் என்னை விடுவதாக இல்லை. தெய்வச் செயலும் விதிக்குள் அடங்கிவிடும் போலும். ஸ்ரீநாத சர்மாவின் இரண்டாவது பரிசும் பெற்ற பிறகே கல்யாணம் என்பது என் லக்ஷ்யம். கேவலம் உணர்ச்சிக்கு இடம் கொடுத்ததினால் அது நிறைவேற முடியவில்லை.'

'ஏன் அப்படி? இப்பொழுதும் நீங்கள் நினைத்தால் செய்ய முடியாதா?'

'இனிமேல் முடியாது ஹேமா. மனக்கட்டுப்பாடு தளர்ந்துவிட்டது. ஆனால் ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். கல்யாணமாகி, குடும்ப வாழ்க்கையிலீடுபட்டாலும் உனது நடனம் மட்டும் நடந்து கொண்டேயிருக்கும். அந்த லக்ஷ்ய மட்டும் மாறாது.'

'சந்தோஷம். நான் வேண்டுவதும் அதுவேதான். ஒரு விஷயம் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். சினிமாவில் நாட்டியமாடியது அதுவே முதலாகவும் கடைசியாகவுமிருக்கட்டும். இனிமேல் வேண்டாம். அந்த ஆசாமி நேற்று உங்களிடம் அடுத்த படத்தில் ஆட வேண்டுமென்று கேட்டதாகவும் நீங்கள் பார்க்கலாம் என்று சொன்னதாகவும் மூர்த்தி சொன்னான்.'

'சொன்னது உண்மை. உனக்கு இஷ்டமில்லாவிடில் வேண்டாம். அந்த ஒரு படத்திலேயே நம்ம பங்கு லாபம் ஒன்றரை லக்ஷம் என்றால் பார்த்துக்கொள். அம்மாவிடம் அன்று கேட்ட தாபச் சொற்கள்? இன்று அவளே ஆனந்தமடைகிறாள்.

'நீங்கள் பங்கெடுப்பது பற்றி நான் தடுக்கவில்லை.'

'உன் நடனம் இல்லையேல் பங்கு எடுத்தால் அவ்வளவு தான். அம்மா கவலை உண்மையாகிவிடும் சற்று நேரம் ஊடுருவிப் பார்த்த வண்ணமிருந்தார்கள். சற்றுப் பொறுத்து, 'ஹேமா!' என்றான் அன்பு ததும்ப.

'என்ன?'

'இன்று இரவு பன்னிரண்டு மணி அடிக்கும் வரை இவ்வளவு சமீபத்தில் நமது கொள்கை மாறும்' என்று நினைக்கவில்லை.

'என் மனமும் அப்படித்தானிருந்தது. ஆனால் அம்மா இன்று மனம் நொந்து கண்ணீர் விட்டார். (நடந்த விஷயத்தைக்கூறி) பெரியவர்கள் கடுஞ்சொற்களும் ஆசியாக அமைந்துவிடுகின்றன.'

(தொடரும்)

Edited & Published by N. R. Ramanujam & Printed by S. Rangaswami at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

